

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம்.

సౌమ్యజామాతృయోగీన్ద్ర చరణామ్బుజషట్పదమ్।
దేవరాజగురుం వన్దే దివ్యజ్ఞానప్రదం శుభమ్॥
శమదమాదిగుణైకనికేతనం చరమపర్వనిశ్చలచేతసమ్।
యతివరాఙ్ఘ్రిసరోరుహషట్పదం సమరపుఙ్గవవత్ గురుమాశ్రయే॥

ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ர சரணாம்புஜஷட்பதம்,
தேவராஜகுரும்வந்தே திவ்யஜ்ஞாநப்ரதம்சுபம்.

சமதமாதிகுணைகநிகேதநம் சரமபர்வநிச்சலசேதஸம்,
யதிவராங்க்ரிஸரோருஹஷட்பதம் ஸமரபுங்கவஸத்குருமாச்ரயே.

ஸ்ரீமத் வரவரமுநி சிஷ்யரான எறும்பியப்பாவை ஸச்சிஷ்ய ரான வேங்கடாத்ரியாழ்வான் முதலானோர் தாளுந்தடக்கையுங் கூப்பி ப்பணிந்து மோக்ஷேச்சுக்களான வடியோங்களுக்கு மோக்ஷாதிகாரி களான விலக்ஷணருடைய ஸ்வரூபத்தை நிர்ணயித் தருளிச்செய்ய வேணுமென் றபேக்ஷிக்க. அப்பாவு மின்னு நாமிவ்வர்த்தத்தை நிர் ணயிக்குமதென்று ஸ்ருதீதர ஸாமாந்ய விசேஷவிபாகமற ஸகல சாஸ்த்ரங்களும் வேதவேதாந்தவேத்யனை கீதாசார்யனும் ஆழ்வி ஆழ்வார்களு மாசார்யர்களுமாக வெல்லாரும் ஸ்ரிசிகரப்ரதீப மாக ப்ரகாசிப்பித்ததன்றன்றோ. ஆனாலும் லோகஹிதார்த்தமாக நீர்ப ண்ணின ப்ரச்நத்துக்கு அஸ்மதாசார்யோக்தங்களான வாக்யவிசேஷங் களை விண்ணப்பஞ்செய்கிறேன். கேளீரோவென் றருளிச்செய்யும்படி

ஸ்ரீயஃபதியாய் நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான ஸர்வேஶ்வரன் நிரங்குஶஸ்வதந்த்ரனுமாய் பரமகாருணிகனானவ னொருபடுகையாலே மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால் இன்புறு மிவ்விளையாட்டுடையா னென்கிறபடியே அனேகவிதங்களான மோஹக்ருத்யங்களாலே லீலாவிபூதி சேதநரோடே விளையாடாநின்றுகொண்டு யாரேனும் சிலரை ஸம்ஸாரத்தில்நின்றும் உத்தரிப்பிக்கவேணுமென்று திருவுள்ளமானவளவில் [ఏవంసంసృతిచక్రస్థే భ్రామ్యమాణే స్వకర్మభిః । జీవేదుఃఖాకులేవిష్ణోః కృపాకాప్యుపజాయతే] (ஏவம்ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணேஸ்வகர்மபி: - ஜீவேதுக்காகுலேவிஷ்ணோ: க்ருபாகாப்யுபஜாயதே) என்று இச்சேதநன் ஸம்ஸாரசக்ரஸ்தனாய் ஸ்வார்ஜித புண்யபாபங்களாலே ஜந்மமரணநிரயபதநாதி துக்கங்களை யநுபவித்துக்கொண்டு படுகிறபாட்டைக்கண்டு அவன்மேலே க்ருபைஜநித்து [నాసౌపురుషకారేణ నచాప్యన్యేనహేతునా । కేవలంస్వేచ్ఛయైవాహం ప్రేక్షేకంచిత్కదాచన] (நாஸௌபுருஷகாரேண நசாப்யந்யேநஹேதுநா - கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷேகஞ்சித்கதாசந) என்கிறபடியே பட்டத்துக்குரிய வானையு மரசும்போலே தன்னிர்ஹேதுகக்ருபையாலே விசேஷகடாக்ஷம்பண்ணும் [జాయమానంహిపురుషం యంపశ్యేన్మధుసూదనః। సాత్త్వికస్తువిజ్ఞేయస్సవైమోక్షార్థచింతకః] (ஜாயமாநம்ஹிபுருஷம் யம்பஶ்யேந்மதுஸூதந:- ஸாத்விகஸ்ஸதுவிஜ்ஞேயஸ்ஸவைமோக்ஷார்த்தசிந்தக:) என்று அந்த ஜாயமானகடாக்ஷத்தாலே பரமஸத்வநிஷ்டனாய் மோக்ஷாபேக்ஷைபிறந்து [జ్ఞానాన్మోక్షమజ్ఞానాత్సంసారః] (ஜ்ஞாநாந்மோக்ஷ மஜ்ஞாநாத் ஸம்ஸார) மென்று சொல்லுகிற அந்த மோக்ஷ மநுஷ்டாநபர்யந்தமானவர்த்தபஞ்சக ஜ்ஞானத்தாலே லபிக்குமதொன்றாகையாலே தத்பாபத்தில் பௌநபுநர்ஜந்ம மரணரூப ஸம்ஸாரதுக்கமே மேலிடுமதொழிய உஜ்ஜீவிக்க விரகில்லையென்று [తద్విజ్ఞానార్థం సగురుమేవాభిగచ్ఛేత్ । సమిత్పాణిశ్శ్రోత్రియం బ్రహ్మనిష్ఠం తస్మైసవిద్వానుపసన్నాయ సమ్యక్ ప్రశాంతచిత్తాయ శమాన్వితాయ యేనాక్షరంపురుషంవేదసత్యం ప్రోవాచతాంతత్త్వతో బ్రహ్మవిద్యాం] (தத்விஜ்ஞாநார்த்தம் ஸகுருமேவாபிகச்சேத்-ஸமித்பாணி:ச்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் - தஸ்மை ஸவித்வாநுபஸந்நாய ஸம்யக் - ப்ரஶாந்தசித்தாய ஶமாந்விதாய - யேநாக்ஷரம்புருஷம் வேதஸத்யம் - ப்ரோவாசதாம்தத்வதோப்ரஹ்மவித்யாம்) என்று ஶ்ருதியில் சொல்லுகிறபடியே அந்த முமுக்ஷுசேதநன் தத்விஜ்ஞாநலாபத்துக்காக ஸாக்ஷாத்ருஷ்டாபரனாய்க்கொண்டு வேதவேதாந்தஸாரார்த்தவித்தமனாய் அபரமாத்ம வைராக்கியபூர்வகமாக பரப்ரஹ்மாநுபவைகநிஷ்டனாயிருக்கிற ஸதாசார்யனை யாஶ்ரயிக்கவேணும். ஶமதமாத்ய

த்மகுண ஸம்பந்நனை யிவன் நெஞ்ஜை நன்றாகச் சோதித்து ப்ரஹ்மப்ராப்திஸாதநமான விஜ்ஞாநத்தை யுபதேசித்து தத்நுரூபாநுஷ்டாநங்களை நன்றாகத் தெரியும்படி ஶிக்ஷித்துவைக்க அவனு மிவற்றைலபித்து க்ருதக்ருத்யனாய் மோக்ஷாதிகாரியா யுஜ்ஜீவிக்கும். இந்தஶ்ருதியில் [సమ్యక్ ప్రశాన్తచిత్తాయ] (ஸம்யக்ப்ரஶாந்தசித்தாய) என்கிற விடங்களில் சொன்ன ஶமதமங்களிரண்டும் ஆத்மகுணங்களில் ப்ரதாநங்களாகையாலே இவையிரண்டும் சொல்லுகை ஸச்சிஷ்யலக்ஷணங்களெல்லாத்துக்குமுபலக்ஷணம். [శ్రోత్రియం బ్రహ్మనిష్ఠం] (ஶ்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம்) என்று சொல்லுகிற விரண்டும் ஸதாசார்யலக்ஷணங்களெல்லாத்துக்கு முபலக்ஷணம். ஸச்சிஷ்யலக்ஷணங்களவையென்னில் [శరీరంవసువిజ్ఞానం వాసఃకర్మగుణానసూన్ । గుర్వర్థం ధారయేద్యస్తు సశిష్యోనేతరస్స్మృతః] (சரீரம்வஸுவிஜ்ஞாநம் வாஸஃகர்மகுணாநஸூந்-குர்வர்த்தம்தாரயேத்யஸ்து -ஸஶிஷ்யோநேதரஸ்ம்ருத:) என்கிறபடியே ஶரீரார்த்தப்ராண க்ருஹக்ஷேத்ர புத்ரதாராதிகளொன்றுந்தனக்குஶேஷமென்று நினையாதே அங்குத்தைக்குசேஷமாக்கி ப்ருதக்ப்ரயத்ந மொன்றுமின்றிக்கே யவன்னினைவிலே யொதுங்கி க்ரயவிக்ரயார்ஹனாயிருக்குமவனாய் [సద్బుద్ధిస్సాధుసేవీ సముచితచరిత స్తత్త్వబోధాభిలాషీ శుశ్రూషుస్త్యక్తమానః ప్రణిపతనపరః ప్రశ్నకాలప్రతీక్షః శాన్తోదాన్తోనసూయు శ్శరణముపగతశ్శాస్త్రవిశ్వాసశాలీశిష్యః ప్రాప్తఃపరీక్షాంకృతవిదభిమత స్తత్త్వతశ్శిక్షణీయః] (ஸத்புத்திஸ்ஸாத்வேஸீ ஸமுசிதசரிதஸ்தத்வபோதாபிலாஷீ- ஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந:ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ:-ஶாந்தோதாந்தோநஸூயுஶ்ஶரணமுபகதஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸஶாலீ - ஶிஷ்ய:ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவிதபிமதஸ்தத்வதஶ்ஶிக்ஷணீய:) என்கிறபடியே ஸத்விஷயங்களிலே ப்ரவணமானபுத்தியை யுடையனாய் ஸாதுஸேவார்த்தனாய் ஸதநுஷ்டாநஸம்பந்நனாய் தத்வஜ்ஞாநாபேக்ஷையுடையனாய் குருஶுஶ்ரூஷாநிரதனாய் நிரபிமாநியாய் ப்ரணிபாத நமஸ்க்ரியாபரனாய் பிரஶ்நகாலநிரீக்ஷகனாய் பாஹ்யாப்யந்தரேந்த்ரிய நிக்ரஹமுடையனாய் பிறருயர்த்தி ஸஹிக்கமாட்டாதவஸூயையில்லாதவனாய் ஶரணாகதனாய் ஶாஸ்த்ரவிஶ்வாஸமுடையனான ஶிஷ்யன் ப்ராப்தனானால் தத்வதஶ்ஶிக்ஷணீயனென்று சொல்லப்பட்ட விக்குணங்களுடைய ஸச்சிஷ்யலக்ஷண ஸம்பந்நனானவனுக்கு ஹிதோபதேஶம் பண்ணக்கடவன். இப்படி இராதவனைச் சேர்த்துக்கொள்ளவொண்ணாது. ஸ்வக்யாதிலாபபூஜாநுவர்த்தநாதிகளுக்காக தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தரபரராய்த் திரிகிற பத்தஸம்ஸாரிகளைப் பத்துப்பேரைகூட்டிக்கொண்டு (புன்னெறியில் தோற்றினதே சொல்லி) என்கிறபடியே பூர்வர்களுடைய வசநாநு

ஷ்டானங்களைவிட்டுத் தன்னுடைய துர்வாஸனையாலே தனக்குத்தோற்றி
ன விபரீதார்த்தங்களைச் சொல்லிக்கொண்டு அவர்களாலே அர்த்தார்ஜ
நாதிகளைப் பண்ணிக்கொண்டு தேஹபரவஶனாய்த் திரிகிற வாசார்யன்
[యజమానకృతంపాపం ద్రవ్యమాశ్రిత్యతిష్ఠతి] (யஜமாநக்ருதம்பாபம் த்ரவ்யமா
ஶ்ரித்யதிஷ்டதி) என்று சேதநதோஷமவன் த்ரவ்யத்தைப் பற்றிக்கிட
க்கையாலே [శిష్యపాపం గురోరపి] சிஷ்யபாபம்குரோரபி) என்கிறபடியே
அநதிகாரியான சிஷ்யாபிமாந தூஷித த்ரவ்யத்வாரா அவன் பாபமும்
மேலிட்டுத் தன்னதுமவனதுங்கொண்டு மேலிட்டு உருமாய்ந்துபோமா
கையாலே சிஷ்யனுமிலுமாம். விலக்ஷணஸம்பந்தமே வேண்டுவதெ
ன்று ஸதாசார்யஸம்பந்தத்தோபாதி ஸச்சிஷ்யஸம்பந்தமு முபாதே
யமாகநினைத்து விலக்ஷணரையே சேர்த்துக்கொள்ளவேணும். ஆகை
யாலேயிறே [సోయంరామానుజమునిరపి స్వీయముక్తింకరస్థాం యత్సమ్బన్ధాదమను
తకథం వర్ణ్యతేకూరనాథః] (ஸோயம் ராமாநுஜமுநிரபிஸ்வீயமுக்திம் கரஸ்
தாம் யத்ஸம்பந்தாதமநுதகதம் வர்ண்யதேகூரநாதஃ) என்று பூர்வோத்
தராசார்யர்களுக்குமுக்திப்ரதராக ப்ரஸித்தமான எம்பெருமானாரும் கு
ரோர்வசநாதிக்ரமணம்பண்ணித் தெக்காழ்வான்கோயிலிலே அபேக்ஷி
த்த ஶ்ரீவைஷ்ணவர்களெல்லாருக்கும் திருமந்த்ரார்த்தத்தை வெளியிட்
டவபசாரத்தாலே தமக்குத் துர்க்கதியைநிச்சயித்து ஸச்சிஷ்யரான கூ
ரத்தாழ்வான் ஸம்பந்தத்தாலே தமக்கு முக்திகரஸ்தமாயிற்றென்று கா
ஷாயவஸ்த்ரத்தை யேறிட்டுக் கூத்தாடினாரென்றுப்ரஸித்தமிறே.[గురో
ర్వచోతిక్రమణే నిశ్చిత్యస్వస్యదుర్గతిం। పరానర్థానసహిష్ణు త్వాన్మన్త్రంప్రోవాచభాష్య
కృత్॥] குரோர்வசோதிக்ரமணே நிஶ்சித்யஸ்வஸ்யதுர்க்கதிம் - பராநர்
தாஸஹிஷ்ணுத்வாந் மந்த்ரம்ப்ரோவாசபாஷ்யக்ருத்) என்னுநின்றதி
றே. இப்படி விலக்ஷண ஶிஷ்யஸம்பந்த முத்தாரகமா மோபாதி அவி
லக்ஷண ஶிஷ்யஸம்பந்தமும் அநர்த்தகரமாய்த் தலைக்கட்டும். ஸத்புத்
ரஸம்பந்தம் பிதாவுக்கு நரகஸமுத்தரணஹேதுவாய் அபதேப்ரவ்ரு
த்த புத்ரஸம்பந்தம் அவன்பண்ணின நிஷித்தாநுஷ்டானத்தாலே
[పితౄన్ ప్రాశయతేయమః] (பித்ரூந்ப்ராஶயதேயமஃ) என்று பித்ருவர்க்
கத்துக்கெல்லாம் விநாஶஹேதுவாமென்று ஶாஸ்த்ரஞ் சொல்லாநின்
றதிறே. [సహివిద్యాత స్తంజనయతి తచ్ఛ్రేష్ఠంజన్మ శరీరమేవ బ్రహ్మదఃపితా । గు
రుఃపితామునుక్షోస్తు] (ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதி - தச்ச்ரேஷ்டம்ஜந்ம
ஶரீரம்ப்ரம்ஹதஃபிதா - குருஃபிதாமுமுக்ஷோஸ்து) என்று ஶிஷ்யா
சார்யர்களுக்குப் பிதாபுத்ரஸம்பந்தஞ் சொல்லப்பட்டதிறே. ஆகை
யாலே அபதேப்ரவ்ருத்த ஶிஷ்யஸம்பந்தம் தத்ரவ்ய பரிக்ரஹத்
வாரா ஸர்வாநர்த்தஹேதுவாய் நஶிப்பிக்கும். இப்படி சிஷ்யஸம்

பந்தமே அபாயமான பின்பு ஜ்ஞாநாநுஷ்டாந ஹீநகுருஸம்பந்தம் விநாசஹேதுவென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. [జ్ఞానహీనం గురుం ప్రాప్య కుతో మోక్షమవాప్నుయాత్ । భిన్ననావాశ్రయస్తద్వత్ యథాపారం న గచ్ఛతి॥] (ஜ்ஞாநஹீநம்குரும்ப்ராப்ய குதோமோக்ஷமவாப்நுயாத் - பிந்நநாவாச்ரயஸ்தத்வத் யதாபாரந்நகச்சதி) என்று அநர்த்தஹேதுவாகச் சொல்லப்பட்டதிறே. ஆகையாலே ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயேத்யாதி ஸதாசார்யலக்ஷண லக்ஷிதரான பரமவிலக்ஷண ஸம்பந்தமே மோக்ஷஹேதுவாய்க் கரையேத்தும். [సిద్ధం సత్సంప్రదాయే స్థిరధియమనఘం శ్రోత్రియం బ్రహ్మనిష్ఠం సత్త్వస్థం సత్యవాచం సమయనియతయా సాధువృత్త్యా సమేతం డమ్భాసూయాదిముక్తం జితవిషయగణం దీర్ఘబన్ధుం దయాళుం స్ఖాలిత్యే శాసితారం స్వపరహితపరం దేశికం భూష్ణురీప్సేత్॥] (ஸித்தம்ஸத்ஸம்ப்ரதாயேஸ்திரதியமநகம் ச்ரோத்ரியம்ப்ரஹ்மநிஷ்டம் - ஸத்வஸ்தம்ஸத்யவாசம் ஸமயநியதயாஸாதுவ்ருத்யாஸமேதம் - டம்பாஸூயாவிமுக்தம் ஜிதவிஷயகணம் தீர்க்கபந்தும் தயாளும் - ஸ்காலித்யேசாஸிதாரம் ஸ்வபரஹிதபரம் தேசிகம் பூஷ்ணுரீப்ஸேத்) என்கிறபடியே ஸத்ஸம்ப்ரதாயஸித்தனாய் ஸாஸ்திரபுத்தியையுடையனாய் உபதேசபலாதிவிப்ரதிபத்தி தோஷமில்லாதவனாய் வேதாந்ததாத்பர்ய மறிந்தவனாய் பகவதேகநிஷ்டாசரிஷ்டனாய்க் குணத்ரயவச்யரைப்போலே ஸுகதுக்காதிகளில் ஹர்ஷசோகங்களையுடையாதே [సమదుఃఖసుఖస్స్వస్థస్సమలోష్టాశ్మకాఞ్చనః। తుల్యప్రియాప్రియో ధీరస్తుల్యనిన్దాత్మసంస్తుతిః। మానావమానయోస్తుల్యస్తుల్యో మిత్రారిపక్షయోః। సర్వారమ్భపరిత్యాగీ గుణాతీతస్స ఉచ్యతే॥] (ஸமதுக்கஸுகஸ்ஸ்வஸ்த ஸ்ஸமலோஷ்டாத்மகாஞ்சநஃ - துல்யப்ரியாப்ரியோதீரஃ துல்யநிந்தாத்மஸம்ஸ்துதிஃ - மாநாவமாநயோஸ்துல்யஃ துல்யோமித்ராரிபக்ஷயோஃ - ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீதஸ்ஸஉச்யதே.) என்கிறபடியே த்ரிகுணாதீதனாய் சாந்தஸத்வஸம்பந்நனாய் யதார்த்தசநஸாமர்த்ய யதார்த்தத்ருஷ்டார்த்த வாதித்வங்களுடையனாய் ப்ராக்தநசிஷ்டாசாராநுகுணமான ஸாதுவ்ருத்தியாலே ஆஹாரநியதி ஸஹவாஸநியதி அநுவர்த்தநநியதிகளோடே கூடியிருக்குமவனாய் டம்பாஸூயாதிக ரஹிதனாய் காமச்ரவணாங்கநா பரிஷ்வங்காதி க்ஷுத்ரசப்தாதி விஷயங்களில் நசையற்றவனாய் அவன்விட்டாலும்தான்விடாதே நிற்குமவனாய்ப் பராநர்த்தம்ஸஹிக்கமாட்டாத பரமதயாளுவாய் இவன்தப்பிநடக்குமிடத்தில் அபதேப்ரவ்ருத்தனுகாதபடி கழுத்திலேகட்டிக்கொண்டு சிக்ஷிக்கவல்லனாய் நிஷித்தப்ரவ்ருத்திகளொன்றும் ப்ராமாதிகமாகவும் தன்பாடுசாராதபடி குவிக்கொண்டுவர்த்தித்துத் தனக்கும் பிறர்க்கும் ஹிதபரனாயிருக்கு மாசார்யனைப்பற்றித் ததாஜ்ஞா

துவர்த்தநம்பண்ணுமவனாய்த்து பகவத்ப்ரியதமனாய்முக்தனாவது. (ஜ்ஞாந மநுஷ்டானமிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால் மாநிலத்திர் தேனார்கமலத்திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தந் தரும்) என்று அஸ்மதாசார்யோக்தம். ஸதாசார்யன் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தனாகையாவது, (பழுதிலாவொழுகலாற்று) என்கிறபடியே ப்ரபந்நஜநகூடஸ்தரான வாழ்வார்துடங்கி ஸ்வாசார்யபர்யந்தமான வம்ச ப்ரவாஹத்தில் நடுவேயொரு அபிரூஸ்த ஸம்பந்தம் கலசாதே நிர்த்துஷ்டனாயிருக்கை. உபதேசபலாதி விப்ரதிபத்தி தோஷமில்லாதவனாகையாவது, உபதேசபலம் த்ருஷ்ட சிஷ்யோஜ்ஜீவந ஸஹவாஸங்கள் ஸித்திக்குமதென்று நினையாதே பகவத்விஷயமங்களாஸாஸநத்துக்கு அர்ஹனாவதென்று நினைத்திருக்கையும் தானாசார்யனென்றும் சிஷ்யனைத் தனக்கு சிஷ்யனென்றும் பாராதே ஸப்ரஹ்மசாரியாக நினைத்திருக்கையும். ஆஹாரநியதியாவது, ஜாதிதுஷ்டாஶ்ரயதுஷ்டநிமித்ததுஷ்டங்களைப் பரித்யஜித்துப் பவித்ரங்களுமாய் விலக்ஷணபரிக்ரஹங்களுமாய்ப் பரிசுத்தங்களுமான பகவத்பாகவதசேஷங்களை ஸ்வீகரிக்கை. ஜாதிதுஷ்டங்களாவன, [లశునమ్మద్యమాంసాని మూలకం గృఞ్జనం తథా। శిలపిష్టస్తథాసీగ్రుంబిల్వం కోశాతకీం తథా। అలాబుం శ్వేతవార్తాకం విడ్వనీకం తథైవ చ। ఏవమాదీన్యభక్ష్యాణి శాస్త్రదుష్టాణియే నరాః। ఖాదన్తి తేనరాయాన్తి విణ్మూత్రక్రిమిభోజనం॥] (லசுநம்மத்யமாம்ஸாநி மூலகங்க்ருஞ்சநம்ததா - திலபிஷ்டந்ததாஸீக்ரும்பில்வம்கோஶாதகீம்ததா - அலாபும்ஶ்வேதவார்த்தாகம் விட்வநீகம்ததைவச - ஏவமாதீந்யபக்ஷ்யாணி ஶாஸ்த்ரதுஷ்டாநியேநராஃ - காதந்திதேநராயாந்தி விண்மூத்ரக்ரிமிபோஜனம்.) என்று த்யாஜ்யங்களாகச்சொல்லப்படுகிற நிஷித்தத்ரவ்யங்கள். ஆனால் ஆசாரப்ரதானரான பெருமாள் [నమాంసంరాఘవోభుఙ్తే నచాపి మధుసేవతే] (நமாம்ஸம்ராகவோபுங்தே - நசாபிமதுஸேவதே) என்று ஸீதாவிஶ்லேஷஸமயத்தில் மதுமாம்ஸவர்ஜநம்பண்ணினாரென்று சொல்லுகையாலே கூடியிருக்குந்தசையில் அநுபவித்தாரென்று தோற்றுகிறதிறே. [మర్యాదానాంచలోకస్య కర్తాకారయితాచసః] (மர்யாதாநாஞ்சலோகஸ்யகர்த்தாகாரயிதாசஸஃ) என்றும் [ధర్మసంస్థాపనార్థాయ సమ్భవామియుగేయుగే] (தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமியுகேயுகே) என்றும், தர்மஸம்ஸ்தாபநார்த்தமாகத் திருவவதரித்தவவதாரங்களி லாசரித்ததர்ம முபாதேயமாகாதோவென்னில், பெருமாள் ஸாமாந்யதர்மநிஷ்டராகையாலே க்ஷத்ரியகுலங்களுக்கநுகுணமான மாம்ஸங்களும் ராஜாக்கள் ஸ்வீகரிக்கிற நாநாஸுகந்த புஷ்பரஸ ஸமுதாயமான மதுவையும் ஸ்வீகரித்தாரித்தனைபோக்கி ஸ்வவர்ணவிருத்தமான மதுமாம்ஸபரிக்ரஹம் பண்ணிற்றில்லையே. வர்

ண தார்மிகருக்குத் தாரதம்யாநுகுணமாகச் சிலத்யாஜ்யம் சிலஉபாதேய மானவையெல்லாம் ஸத்வப்ரசுரரான பரமைகாந்திகளுக்கு [ఉపేక్ష్య పుణ్యపాపే విధూయ] (உபேக்ஷித்வாபுண்யபாபே விதூய) என்கிறபடியே பகவதநுபவ வ்யதிரிக்தங்கள் த்யாஜ்யங்களாய்விடுமொழிய உபாதேயமென்னக்கூடாது. [బ్రాహ్మణస్య] (ப்ராஹ்மணஸ்ய) [మధూకం సైక్షవం తాళం ఖార్జురం పానసం తథా। ద్రాక్షం మధుజమారిష్టం మైరేయం నాళికేరజం। ఇత్యేకాదశ మద్యాని నిషిద్ధాని ద్విజన్మనాం సురాం పీత్వా ఘృతగోమూత్ర పయసా సహ తప్తమగ్నిస్పర్శా ద్దాహకేశ కింకృత్వా పీత్వా మరణాత్ శుద్ధిం ప్రాప్నుయాత్] (மதூகமைக்ஷவந்தாளம் கார்ஜூரம்பாநஸந்ததா-த்ராக்ஷம்மதுஜமாரிஷ்டம் மைரேயம்நாளிகேரஜம் - இத்யேகாதசமத்யாநி நிஷித்தாநித்விஜந்மநாம் - ஸுராம் புக்நதகோமூத்ர பயஸாமந்யதமமக்நி ஸ்பர்சாத்தாஹகமுக்திம் க்ருத்வாபீத்வா மரணாத் சுத்திம்ப்ராப்நுயாத்) என்று ஸத்வப்ரசுரமான ப்ராஹ்மண்யத்துக்கே மரணாந்தங்களான நிஷித்த த்ரவ்யங்கள் சுத்தஸத்வநிஷ்டராய் க்ராமகுலாதிவ்யபதேசங்களன்றிக்கே ஸர்வவர்ணாச்ரமவிலக்ஷணராய்ப் பகவதேகவ்யபதேஷ்டவ்யரான பரமைகாந்திகளுக்கு நினைக்கவுங் கூடாதிறே. நித்யங்களான இந்த நிஷித்த த்ரவ்யஸ்வீகாரம் வர்ணத்தைப்பற்றியே நிஷித்தமன்றிக்கே, [ద్రవ్యం నిం ద్యసురాది దైవతమపి క్షుద్రశ్చ బాహ్యో గమో। దృష్టిర్దేవలకాశ్చ దేశికజనా ధిక్ ధిక్ ధి క్షేమంకృన్మమ॥](த்ரவ்யம் நிந்த்யஸுராதி தைவதமபி க்ஷுத்ரஞ்சபாஹ்யாகமோ - த்ருஷ்டிர்தேவலகாஸ்சதேசிகஜநா திக்திக்திகேஷாங்க்ரமஃ) என்று க்ஷுத்ரதேவதாவிஷய பாஹ்யாகமப்ரவர்தக நிஷித்தக்ருத்யங்களாகையாலே சிஷ்டகர்ஹிதங்களிறே. [యజన్తే సాత్త్వికా దేవాన్] (யஜந்தேஸாத்விகாதேவாந்) என்று தேவர்களெல்லாரும் ஸாத்விகர்க்குப் பூஜ்யரென்று பெருமாள் ருத்ரேந்த்ராதித்யாதிகளை, அவதாரங்களில் ஆராதித்தாரென்று அநங்யார்ஹ சேஷத்வாத்யாகார ஷட்கத்தாலே பிராட்டியோடொப்பரான பரிசுத்தாத்மாக்களுக்கு தேவதாந்தர பஜநம் பண்ணவொண்ணாதிறே. இன்னமும் அவதாரப்ரயுக்தாதி மாநுஷசேஷ்டிதங்கள் த்ருஷ்டாந்தங்களானால் ப்ரஹ்ம ஜந்மாவான ராவணனை ஸம்ஹரித்தாரென்று ப்ரஹ்மஹத்யாதிகளும் க்ருஷ்ணனை யநுசரித்து பரஹிம்ஸை பரதார பரத்ரவ்யாபஹாராதிகளும் உபாதேயமாகக் குறையில்லையிறே. ஆனபின்பு மஹாபாதகங்களும் ப்ரபந்ந தர்மங்களாய் ப்ரவர்த்திக்கவேண்டி வருகையாலே, அப்படி சொல்லவொண்ணாது. அதுண்டாயிடுக, சரமச்லோகத்தில் ப்ரதமபதத்தில் ஸர்வ சப்தத்துக்கு ஸங்கோசம் வாராதபடி நிவ்ருத்திரூப தர்மத்யாகத்துக்காகப் பரிக்ரஹித்தாலோ வென்னில், தன்னை

யும் ஈஶ்வரனையும் பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில் லையென்று முமுக்ஷுப்படியில் பரிஹ்ருதமாயித்திறே. காட்டினாலு மென்று காட்டுகையை அங்கீகரித்தபின்பு ஸங்கோசம் ஏதுக்காக வென்னில், (பிணக்கற வறுவகைச் சமயமும் நெறியுள்ளியுரைத்த கணக்கறுநலத்தினென்று) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை ஸர்வேஶ்வரன் ஷட்சமயவாதம் நசிக்கும்படி ஸந்மார்க்கத்தைவிசாரித்து அருளிச்செய்த சரமஶ்லோகத்துக்கு நிஷித்தாநுஷ்டாந முட்பொருளென்றால் குருமந்த்ரதேவதாபரிபவங்களும் விபரீதார்த்தப்ரதிபத்தியும் ஸர்வோபநிஷத்ஸாரபூதமான ஸர்வகீதாஶாஸ்த்ரஸாரமாய் [ఉపాయాపాయనిర్ముక్తో మధ్యమాం స్థితిమాస్థితః] (உபாயாபாயநிர்முக்தோ மத்யமாம்ஸ்திதிமாஸ்திதஃ) என்கிறபடியே உபாயாபாயநிர்முக்தமான ப்ரபத்திபரிபவமும் வருமாகையாலே விநாஶஹேதுவாமிறே. ஆகையாலே [ఉచ్ఛిష్టమపి చామేధ్యం భోజనం తామసప్రియం] (உச்சிஷ்டமபிசாமேத்யம் போஜநம்தாமஸப்ரியம்) என்று அமேத்யவஸ்துக்கள் தாமஸருக்கொழிய ஸத்வநிஷ்டர்க்கு த்யாஜ்யங்களாயிருக்கும். த்ரிகுணாத்மக க்ரியாதிநசேதநருக்கன்றோ குணாநுகுணமாக த்யாஜ்யங்களும் உபாதேயங்களுமாயிருப்பது. [సర్వం ఖల్విదం బ్రహ్మ] (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம) என்று ஸமஸ்தவஸ்துக்களும் ப்ரஹ்மாத்மகமென்று புத்திபண்ணியிருக்கும் அதிகாரிகளுக்கு த்யாஜ்யங்களாமவையுண்டோவென்னில், இவன் த்ரிகுணாத்மகமான ப்ரக்ருதியைவிட்டு முக்தனானபின்பிறே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதியெல்லாம் அநுபாவ்யமாய்ப் போருவது ப்ரக்ருதிவிஶிஷ்டராயிருந்தாலும் அவன் மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார்போல்வாரும் ப்ரஹ்லாதாழ்வான்போல்வாரு மபரோக்ஷஜ்ஞாநிகளாய் ஸமஸ்தவஸ்துக்களிலும் ஸர்வேஶ்வரனை ஸாக்ஷாத்கரித்து விஷஶஸ்த்ராக்நிகள் முதலாக ப்ராதிகூல்யமத்து (அரியுஞ் செந்தீயைத்தழுவி யச்சுதனென்னு மெய்வேவாளென்னும்)[నాగ్నిర్దహతి నైవాయం శస్త్రైశ్ఛిన్నో నచోరగైః । క్షయం నీతో న వాతేన న విషేణ న కృత్యయా సత్వాసక్తమతిః కృష్ణే దశ్యమానో మహోరగైః నవివేదాత్మనో గాత్రం తత్స్మృత్యాహ్లాదసంస్థితః] (நாக்நிர்தஹதிநைவாயம் ஶஸ்த்ரைச்சிந்நோநசோரகைஃ - க்ஷயம்நீதோ நவாதேந நவிஷ்யேணாக்ருத்யயா - ஸத்வாஸக்தமதிஃ க்ருஷ்ணே தஶ்யமாநோமஹோரகைஃ- நவிவேதாத்மநோகாத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ்திதஃ) என்று மெல்லாம் அநுகூலங்களாய் [సర్వభూతాత్మకే తాత జగన్నాథే జగన్మయే పరమాత్మని గోవిన్దే మిత్రామిత్రకథాః కుతః] (ஸர்வபூதாத்மகேதாத ஜகந்நாதேஜகந்மயே - பரமாத்மநிகோவிந்தே மித்ராமித்ரகதாஃகுதஃ) என்று ஸர்வஸமராய் (புகழுநல்லொருவனென்கோ

பொருவில்சீர்ப பூமியென்கோ) என்று தொடங்கி (யாவையும் யவருந்தா
னாய்)என்றும் (நல்குரவும்செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்) என்றும் (நீரா
ய்நிலனாய்த் தீயாய்க்காலாய்) என்றும் ப்ருதிவ்யாதிபூதங்களும் பௌதி
கங்களும் மற்றுமுண்டான சேதநாசேதநங்களெல்லாம் வ்யாபித்து
அவனேயென்னலாம்படி அவனுக்கு ப்ரகாரதயா சேஷமாயிருக்கிற
படியை அநுஸந்தித்தாரித்தனைபோக்கி ப்ரஹ்மாத்மகங்களென்று ல
ஶுநக்ருஞ்சநாதிகளை அநுபவித்தாரில்லையே. ஆழ்வார் காணவாராயெ
ன்று ப்ரார்த்திக்க நாம் ஜகதாகாரத்தை க்காட்டினோமே அத்தைக்
கண்டு தரிக்கலாகாதோவென்ன ராஜாவினுடைய சிறைக்கூடம் முத
லான வைஶ்வர்யமெல்லாம் ராஜபுத்ரனுக்குத் தன்பிதாவினுடைய
வைஶ்வர்யமென்று ஆதரணீயமாமோபாதி அண்டங்களும் அ
ண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்களும் ஸ்வர்க்கநரகங்களும்
முதலான போகபூமிகளும் தத்ப்ராப்திஹேதுவான புண்யபாபங்
களுமான விவற்றுக்கெல்லாம் பிரித்துநிலையில்லை ப்ரகாரதயா
உனக்கே சேஷமென்று ப்ரதிபத்திபண்ணுகிறோ மித்தனைபோ
க்கி அழுக்குப்பதித்த வுடம்பாயென்று ஹேயவஸ்துவஸமுதாய ஸ்வ
ரூபதிரோதாநகரியாய் விபரீதஜ்ஞாநஜநகமான ஜகதாகாரம் பருஞ்சுட
ருடம்புபோலே யெனக்கநுபாவ்யமோ (கூராராழி வெண்சங்கேந்திக்
கொடியேன்பால் வாராய் )என்று அஸாதாரணவிக்ரஹத்தோடே வர
வேணுமென்று (நீராய்நிலனாய் என்கிற திருவாய்மொழியிலே ப்ரார்த்தி
த்தாரிறே. பிராட்டிமார் நித்யமுக்தர் முமுக்ஷுக்கள் படிகளெல்லா
முடையவராகையாலே முக்ததஶாநுபவவேளையில் ஸமஸ்தவஸ்துக்க
ளும் பகவதாத்மகங்களென்று அநுஸந்திக்கு மாழ்வாரே மாத்ருஸ்தந்
யம் முதலான ப்ராக்ருதவஸ்துக்களெல்லாம் ஹேயங்களென்று பரித்ய
ஜித்து (உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்
ணன்)என்று தாரக போஷக போக்யங்கள் மூன்று மவனேயென்று அ
நுஸந்தித்துக்கொண்டு ப்ராக்ருதவஸ்துஜீவநரான ஸம்ஸாரிகளைக்கா
ணமாட்டாதே(கொடுவுலகங்காட்டேலே என்றும், இவையென்னவுலகி
யற்கை) என்றும், நாட்டாரோடியல்வொழிந்து, பணிகண்டாய்சாமா
றே)என்றும் சரீரவிமோசந ப்ரகாரத்தை ப்ரார்த்தித்தாரிறே. ஆகையா
லே ப்ரஹ்மாத்மகமென்று முமுக்ஷுவுக்கு ப்ராக்ருதஹேயவஸ்துக்க
ளுபாதேயமென்று சொல்லக்கூடாது. [ఆహారశుద్ధౌ సత్త్వశుద్ధిః - సత్త్వాత్సంజా
యతే జ్ఞానమ్ - జ్ఞానాన్మోక్షం] (ஆஹாரஶுத்தௌஸத்த்வஶுத்திঃ - ஸத்த்வா
த்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்-ஜ்ஞாநாந்மோக்ஷம்) ஆகையாலே ஜ்ஞாநவிரோ
திகள் த்யாஜ்யங்களிறே. அவர்களுக்கு மயர்வறமதிநலமருளினுகை
யாலே தாரகாதிகளெல்லா மவனேயாகக்கூடிற்று. அதில்லாத முமு

க்ஷுக்களெல்லாருக்கும் ஸத்யோத்ரிக்தவஸ்துக்களே பரிக்ராஹ்யங்களாயிருக்குமாகையாலே ஜாதிதுஷ்டங்கள் த்யாஜ்யங்களாயிருக்கும். ஆஶ்ரயதுஷ்டங்களாவன, அபிஶஸ்தபதிதசண்டாளாபிமாந தூஷிதங்களானவை. நிமித்ததுஷ்டங்களாவன, ஶ்ராத்தசாந்த்யாதி நிமித்தங்களாலே வருமவையும் கேஶோச்சிஷ்டாபக்ருஷ்ட ஸ்பர்ஶதுஷ்டங்களும். இவைமூன்றும் பரித்யஜிக்கை, ஆஹாரநியதி. ஸஹவாஸநியதியாவது, தேஹாத்மாபிமாநிகள், தேவதாந்தர ப்ரயோஜநாந்தர ஸாதநாந்தரபரர் ஸ்வதந்த்ரர், முதலான ப்ரதிகூலரைக்கண்டால் ஸர்பாக்நிகளைக் கண்டாப்போலே அஞ்சுவெருவி ஜ்ஞாநாநுஷ்டாநங்களை வடிவிலே தொடைகொள்ளலாம்படியிருக்கிறபரமார்த்தரோடே ஸஹவஸிக்கை. அநுவர்த்தநநியதியாவது, அர்த்தார்ஜநாதிகளுக்காக ராஜத்வாரங்களிலே மண்டி ஸம்ஸாரிகளை அநுவர்த்தித்துக்கொண்டு திரியாதே த்ருஷ்டம் கர்மாதீநமாகையாலே அதுக்குக்கரையாதே ஸதாசார்யாநுவர்த்தநபரனாயிருக்கை. ஆகவிப்படி ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்நனாய்த்து ஸதாசார்யனென்றுசொல்லத்தக்கது. ஜ்ஞாநஹீநன் அந்தனோபாதி, அநுஷ்டாநஹீநன் பங்குவோபாதி, இரண்டு முண்டானாலிறே தானும் தன்னைப்பற்றினவனும் கரைசேருவது. [ఉభాభ్యామేవపక్షాభ్యాంయథాఖే పక్షిణాంగతిః । తథైవజ్ఞానకర్మభ్యాం ప్రాప్యతేభగవాన్హరిః] (உபாப்யாமேவபக்ஷாப்யா மாகாஶேபக்ஷிணாங்கதி: - ததைவஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே பகவாந்ஹரி:) என்றுசொல்லப்பட்டதிறே. [త్యజధర్మమధర్మంచ । ఉపాయాపాయనిర్ముక్తో మధ్యమాంస్థితిమాస్థితః । ఉపాయాపాయ సంయోగే నిష్ఠయాహీయతేనయా] (த்யஜதர்மமதர்மஞ்ச-உபாயாபாயநிர்முக்தோ மத்யமாம்ஸ்திதிமாஸ்தித: - உபாயாபாயஸம்யோகே நிஷ்டயாஹீயதேநயா) என்று ஶரணாகதனான முமுக்ஷுவுக்கு விதிநிஷேதங்களிரண்டும் த்யாஜ்யங்களாயிருக்க ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி [యయాధర్మ మధర్మంచ కార్యంచాకార్యమేవచ । అయథావత్ప్రజానాతిబుద్ధిస్సాపార్థరాజసీ] (யயாதர்மமதர்மஞ்ச கார்யஞ்சாகார்யமேவச - அயதாவத்ப்ரஜாநாதி புத்திஸ்ஸாபார்த்தராஜஸீ) என்றும் [అధర్మం ధర్మమితియా మన్యతేతమసావృతా । సర్వార్థాన్విపరీతాంశ్చ బుద్ధిస్సాపార్థతామసీ] (அதர்மம்தர்மமிதியா மந்யதேதமஸாவ்ருதா-ஸர்வார்த்தாந்விபரீதாம்ஶ்ச புத்திஸ்ஸாபார்த்ததாமஸீ) என்றுஞ் சொல்லுகிறபடியே உள்ளபடி நிரூபிக்கமாட்டாதே விபரீதாநுஷ்டானபரனாய் அதுவேயிறுக்குமுபதேசித்து [శ్రుతిస్స్మృతిర్మమైవాజ్ఞా యస్తాముల్లఙ్ఘ్యవర్తతే - ఆజ్ఞాచ్ఛేదీమమద్రోహీ మద్భక్తోపినవైష్ణవః] (ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்யவர்த்ததே-ஆஜ்ஞாச்சேதீமமத்ரோஹீ மத்பக்தோபி நவைஷ்ணவ:) என்றும் [ప్రియాయమమవిష్ణోశ్చ దేవదేవస్యశార్ఙ్గి-

ణః। మనీషీ వైదికాచారం మనసాపి నలఙ్ఘయేత్ ](ப்ரியாயமமவிஷ்ணோஶ்ச தேவ தேவஸ்யஶார்ங்கிணஃ - மநீஷீவைதிகாசாரம் மநஸாபி நலங்கயேத்) என்றும் [యథాహివల్లభో రాజ్ఞో నదీం రాజ్ఞా ప్రవర్తితాం। లోకోపయోగినీం రమ్యాం బహుసస్యవివర్ధినీమ్। లఙ్ఘయన్ శూలమారోహేదనపేక్షోపి తాం ప్రతి। ఏవం విలఙ్ఘయన్మర్త్యో మర్యాదాం వేదనిర్మితాం। ప్రియోపిన ప్రియోసౌ మే మదాజ్ఞావ్యతివర్తనాత్] (யதாஹிவல்லபோராஜ்ஞோ நதீம்ராஜ்ஞாப்ரவர்த்திதாம்-லோகோபயோகிநீம்ரம்யாம் பஹுஸஸ்யவிவர்த்திநீம்- லங்கயஞ்சூலமாரோஹே தநபேக்ஷோபிதாம்ப்ரதி-ஏவம்விலங்கயந்மர்த்யோ மர்யாதாம்வேதநிர்மிதாம் - ப்ரியோபிநப்ரியோஸௌமே மதாஜ்ஞாவ்யதிவர்த்தநாத்) என்கிறபடியே பகவதாஜ்ஞாரூபங்களான வைதிகமர்யாதைகளை யதிக்ரமித்து தத்விருத்தங்களான துஷ்ப்ரவ்ருத்திகளாலே பகவதநபிமதனுய் தானும் நசித்து தன்னையடைந்த சிஷ்யனையுங்கொன்று தன்னைக் கண்டபிறரில்தன்னையநுவர்த்தித்து சிலரும் அநாதரித்து சிலரும் நசிக்கும்படி அபதேசப்ரவ்ருத்தனுய் தன்னையாசார்யனுகவபிமானித்து க்யாதி லாபபூஜாநுவர்த்தநங்களை அபேக்ஷித்து விபரீதப்ரவ்ருத்தரான சிஷ்யரைக்கூட்டிக்கொண்டு அவர்களுடைய துரபிமாநதூஷிதத்ரவ்யத்தை பரிக்ரஹித்து அத்தாலே தேஹயாத்ரைநடப்பித்துக்கொண்டு போருமவனன்றிக்கே நாத யாமுந யதிவர கூரநாத கோவிந்த பட்டாரக லோககுரு வரவரமுனி ப்ரப்ருதிகளுடைய வசநாநுஷ்டாநங்களை பரிசீலித்து மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களிலும் ததர்த்தவிஶதீகரணங்களான ஸ்ரீவசநபூஷணாதி அகிலரஹஸ்யங்களிலும் ஸம்ஸாரிசேதநோஜ்ஜீவநார்த்தமாக விதிக்கப்பட்ட மர்யாதைகளை அதிக்ரமணம்பண்ணுதே வேதஶாஸ்த்ரவிருத்தங்களான துராநுஷ்டாநங்களை நன்ருகபரித்யஜித்து ஆந்ருசம்ஸ்யத்தாலே சிஷ்யபுத்ரோஜ்ஜீவநார்த்தமாகவும் லோகஸங்க்ரஹார்த்தமாகவும் சிஷ்டராலே பரிக்ரஹீதமான விஹிதகர்மங்களில் உபாயத்வபுத்தியை மஹாபாதகாதிகளைப்போலே ஸவாஸநமாகவிட்டு யதோசிதமாக ப்ரவர்த்தித்துக்கொண்டு தன்னை ஆசார்யபரதந்த்ரனுகவும் சிஷ்யனை ஸப்ரஹ்மசாரியாகவும் உபதேசபலம் மங்களாஶாஸநார்ஹதையாகவும் புத்திபண்ணி தன்னுலே திருத்தப்பட்ட ஸச்சிஷ்யன் தனக்குள்ளதெல்லாம் ஆசார்யனுக்கு ஶேஷமென்று ஸமர்ப்பித்து நிர்ப்பரனுயிருக்க அத்தையெல்லாம் தான் நிரீக்ஷித்து அவனுக்குதிரியவும் கொடுத்து உம்முடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஆசார்யாதீநமானபின்பு யதோசிதமாக பகவத்பாகவத விஷயங்களிலும் உம்முடைய தேஹயாத்ரையிலும்விநியோகங்கொள்ளுமென்று நியமிக்க அவருடைய நியோகத்தாலே தகும்படி பகவத்பாகவதவிஷ

யங்களிலும் ஸ்வதேஹயாத்ரையிலும் அந்வயித்துக்கொண்டு திரியவும் தன்னைப்ரார்த்தித்து(எனதாசியார்யானர் தந்தநீகொண்டாக்கினையே)என்று நிர்மமனாய் கிஞ்சித்கரித்த த்ரவ்யம் அங்கீகரியாதபோது விட்டுக்கொடானென்று தாம் அத்தை பகவத்பாகவதாசார்யவிஷயங்களில் கிஞ்சித்காரம் பண்ணிக்கொண்டு [ఋతామృతాభ్యాం జీవేత ప్రమృతేన యావదాయుషం] (ருதாம்ருதாப்யாம்ஜீவேத ப்ரபங்ரோயாவதாயுஷம்) என்கிறபடியே [ఋతముఞ్ఛశిలం జ్ఞేయ మమృతం స్యాదయాచితమ్] (ருதமுஞ்சஶிலம்ஜ்ஞேயம் அம்ருதம்ஸ்யாதயாசிதம்) என்று உஞ்சஶிலவ்ருத்திகளாலும் அயாசிதமாக ஸத்வநிஷ்டரான பரிசுத்தர் கிஞ்சித்கரித்த த்ரவ்யத்தாலும் நடப்பித்துக்கொண்டு சிஷ்யன்பக்கல் க்ருபையும் ஸ்வாசார்யன்பக்கல் பாரதந்த்ரயமும் ஸ்வதேஹயாத்ரையில் ஜிஹாஸையுமுடையவனாய் அஹங்காரார்த்தகாமோபஹதனன்றிக்கே லோகபரிக்ரஹமுடையனாய் ப்ரக்ருதிவாஸனையாலே சிஷ்யனுக்கொரு ஸ்காலித்யம்வந்தாலும் வருந்தியவனை ஸ்வரூபாநுரூபமாகத் திருத்திக்கொண்டுபிரியாதே ஸ்வரூபத்தை நோக்கிக்கொண்டு போருமவன் ஆசார்யன். அதுதான் கடகத்வ உபாயத்வ பேதேந த்விவிதம். கடகத்வமாவது, திருத்திப்பணிகொள்ளுகைக்கு யோக்யரானவரை [సంవత్సరం తదర్ధం వా మాసత్రయమథాపి వా] (ஸம்வத்ஸரம்ததர்த்தம்வாமாஸத்ரயமதாபிவா) என்று ஹ்ருதயத்தை பரீக்ஷித்து அவர்கள் ப்ரக்ருதிவாஸநாருசிகள் தலைமடிந்து பரமார்த்தரானபடியைக்கண்டு அநந்யப்ரயோஜநராய் மங்களாஶாஸநபராரென்று தோற்றினபின்பு அவனை பகவானோடேசேர்த்து அவனை ஶரணவரணம்பண்ணுவித்து ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி சிக்ஷித்துக்கொண்டுபோருகை. உபாயத்வமாவது, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷங்களைச் சொன்னால் அறியத்தக்க ஜ்ஞானவைஶத்யமும் அநுஷ்டிக்கத்தக்க சக்தியுமில்லாத பாலமூகஜடாந்த பங்கு பதிராதிகள் பகவந்நிர்ஹேதுக கடாக்ஷ ப்ரஸரணமுண்டாய் ஸாம்ஸாரிககர்ம ப்ரவ்ருத்தியில் விரக்தியும் ஜந்மஜராமரணாதி சோகங்களில் பீதியும் ஜநித்து ஆர்த்தரான விவ்ரைகைக்கொண்டு தயாபரவசராய் ஜ்ஞாநாநுஷ்டாநோபதேச யோக்யதையில்லாமையாலே அவர்களுக்காக தாமே ஶரணவரணம்பண்ணி ஔஷதஸேவாயோக்யதையில்லாத ஸ்தநந்தயப்ரஜைக்கு வ்யாதியுண்டானால் தான் ஔஷதஸேவைபண்ணி தன் ஸ்தந்யபானத்தாலே ரோகத்தை நிவ்ருத்திப்பிக்கும் மாதாவைப்போலே இவர்களைத் தாமபிமானித்து தம்முடைய தீர்த்தப்ரஸாத ஸேவாமாஹாத்ம்யத்தாலே இவர்கள் ஸம்ஸாராநுத்தீர்ணராம்படிபண்ணுகை. ஊமையாயிருப்பானொருவன் ஆர்த்தனும்படியைக்கண்டு எம்பெருமானார் தயாபரராய் தம்முடைய திருவடிகளைக்காட்டி காஸம்ஜ்ஞையாலே

இவை ஹ்ருதயத்திலே இட்டுக்கொள்ளுமென்று அவன் தலையிலேவைக்க அத்தை கூரத்தாழ்வான்கண்டு அய்யோ நாம்கூரகுலத்திலேபிறந்து ஸாஸ்த்ராப்யாஸம்பண்ணிக்கெட்டோம், நாமுமொரு ஊமையாய்ப்பிறந்தால் பரகதஸ்வீகாரம் லபிக்குமிறே என்று பரிதபித்தார். இவர்கள் ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு ஆஸக்தரானாலும் ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு ஆஸ்ரயபூதரான சேதநராகையாலே ப்ராதிகூல்யநிவ்ருத்தியுண்டாகவேணும். ப்ராதிகூல்யங்களாவன, அஹங்காரமமகாரம் பரஹிம்ஸை பரநிந்தை பரஸ்தோத்ரம் பரதாரபரிக்ரஹம் பரத்ரவ்யாபஹாரம் முதலானவையும் ஸத்வஹாநிகரங்களும் ரஜஸ்தமோத்ரேககரங்களுமான அபக்ஷ்யபக்ஷண அபேயபாநங்களும் தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தர ப்ராவண்யங்களும் பகவத்பாகவதாபசாரங்களும் முதலானவை. இவற்றினுடைய நிவ்ருத்தியில்லாதபோது ஸதாசார்யாபிமானமும் ரக்ஷகமாகமாட்டாது. ஒரு செய்நிரம்ப நீர்நின்றால் ததாஸக்தியாலே அசல்செய் நீரில்லாவிட்டால் பொசிந்து பலபர்யந்தமாமித்தனையொழிய செங்காயம் முதலான களைகள் விஞ்சி வேர்ப்புழுப்பற்றி உருவிப்போமிடத்தில் அசல் ஜலஸம்ருத்தி ரக்ஷிக்கமாட்டாதே. ஆனால் [అచ్ఛేద్యస్యచ్ఛేద్యపి శరీరవర్గే శ్రీయస్సూరిసద్గురుపాదసేవా - సమిత్వ శుచ్ఛేదక శస్త్రియుక్తే - రసేన హేమీకరణం సమానం] (அச்சேப்யநச்சேபிஸரீரிவர்க்கே ஸ்ரேயஸ்கரீஸத்குருபாதஸேவா - ஸமித்பஸ்ச்சேதகஸஸ்த்ரயுக்தே ரஸேநஹைமீகரணம்ஸமாநம்) என்று ரஸகுளிகையானது ஸமித்பஸ்ச்சேதகவிபாகமற லோஹஸஸ்த்ரங்களைப் பொன்னாக்குமாப்போலே புண்யபாபபுருஷவிபாகமற ஸதாசார்யஸம்பந்தம் உத்தாரகமென்று சொல்லாநின்றதிறேயென்ன-த்ருஷ்டாந்தத்தில் ஸமித்ஸச்சேதகஸஸ்த்ரங்கள் அசேதநங்களாகையாலே சேதகத்வம்கர்த்ருசேதநாதீநமாய் ரஸஸக்தியாலே பொன்னாய்விட்டது. அப்படியே இவனும் ஸ்வாசார்யாதீநஸத்தாதிகனாய் தானொன்றுஞ்செய்யாத அசித்வத்பாரதந்த்ரனானால் அவனுக்கு ஜ்ஞாநாநுஷ்டாநங்களில்லையென்கிற குறையற்று ஸதாசார்யஸம்பந்தத்தாலே முக்தனாய்விடும். ப்ரதிகூலப்ரவ்ருத்திகளுண்டானால் விநாஸமேபலிக்கும். சிஷ்யாசார்யலக்ஷணத்துக்கு ஸீமாபூமியான கூரத்தாழ்வான்ஸம்பந்தமுடையனாய்வைத்து பாகவதாபசாரத்தாலே வீரஸுந்தரனென்கிற ராஜா நசித்துப்போனானிறே, ஆகையாலே நிஷித்தாநுஷ்டாநபரனுக்கு ஸதாசார்யஸம்பந்தமுண்டென்று ஈடேறவிரகில்லை. அச்சேப்யநச்சேபியென்று ஸக்தனானாலும் அஸக்தனானாலும் முக்தனாமென்று சொல்லாநின்றதேயென்னில், அது பூர்வவ்ருத்தவிஷயம். [పాపిష్ఠః క్షత్రబన్ధుశ్చ పుండరీకశ్చ

పుణ్యకృత్ । ఆచార్యవత్తయా ముక్తౌ తస్మాదాచార్యవాన్ భవేత్] (பாபிஷ்ட꞉க்ஷத்ரபந்துஶ்ச புண்டரீகஶ்சபுண்யக்ருத் - ஆசார்யவத்தயாமுக்தௌ தஸ்மாதாசார்யவாந்பவேத்) என்கிறபடியே ஸமாஶ்ரயணத்துக்கு பூர்வத்தில் பாபிஷ்டனானாலும் புண்யக்ருத்தானாலும் ஸதாசார்யனையாஶ்ரயித்து தத்பாரதந்த்ரனானால் பூர்வக்ருதபுண்யாபுண்யங்கள் நசித்து க்ஷத்ரபந்து புண்டரீகனென்கிற பாபபுண்யபுருஷர் ஸதாசார்யஸம்பந்தத்தாலே முக்தரானாப்போலே முக்தராவரென்று சொல்லப்பட்டதித்தனை. [దురాచారోపి సర్వాశీ కృతఘ్నో నాస్తికః పురా । సమాశ్రయేదాదిదేవం శ్రద్ధయా శరణం యది । నిర్దోషం విద్ధి తం జన్తుం ప్రభావాత్పరమాత్మనః] (துராசாரோபிஸர்வாஶீ க்ருதக்நோநாஸ்திக꞉புரா - ஸமாஶ்ரயேதாதிதேவம் ஶ்ரத்தயாஶரணம்யதி - நிர்தோஷம்வித்திதம்ஜந்தும் ப்ரபாவாத்பரமாத்மந꞉) என்று நிஸ்ஸம்ஶயமாக புராவென்றுசொல்லப்பட்டதிறே. பயிலுந்திருவுடையார் யவரேலுமென்கிறவிடத்திலும் இது பொருளாமித்தனை. ஆஶ்ரயணாந்தரத்திலும் புத்திபூர்வகமாக நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினனாகில் ஸமாஶ்ரயணமே யில்லையாம். ஆகையாலே ஸம்ஸாரபத்தனாய் தேஹாத்மாபிமாநியாய் தாரபுத்ரதநாதிஸக்தனாய் விஷயப்ரவணனாய் ராகத்வேஷயுக்தனாய் ப்ரவர்த்தித்துக்கொண்டு நமக்கு ஸதாசார்யஸம்பந்தமுண்டென்றும் பகவத் ஸம்பந்த முண்டென்றும் நினைத்து துரபிமாநியாய் இருக்கவிரகில்லை. ஆகையாலேயிறே ப்ரபந்நனுக்கு ஸம்ஸாரபீஜம் நசிக்கவேணுமென்று திருக்கோட்டியூர்நம்பி யருளிச்செய்தது. [అనాత్మన్యాత్మబుద్ధిర్యా అస్వే స్వమితి యా మతిః॥] (அநாத்மந்யாத்மபுத்திர்யா அஸ்வேஸ்வமிதியாமதி꞉) என்கிற புத்திகளேயிறே ஸம்ஸாரபீஜம், இவையிரண்டுமிறே ஸர்வாநர்த்தமூலம். [అవిద్యాతరుసంభూతిబీజమేతద్ద్విధా స్థితం] (அவித்யாதருஸம்பூதி பீஜமேதத்விதாஸ்திதம்) என்று இவையிரண்டு முளளவளவும் எப்படிப்பட்ட ஜ்ஞாநாதிகருக்கும் ஸம்ஸாரஸம்பந்தம் நசித்து பகவத்ப்ராப்தி வருமென்றுநினைக்க வழியில்லை. இவ்வர்த்தம் திருவுள்ளம்பற்றியிறே ஆழ்வார் (நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்து இறைசேர்மினென்று) பகவதாஶ்ரயணம் பண்ணினாலு மிவ்விரண்டு ஸம்ஸாரபீஜமுண்டானால் கார்யகரமாகாதென்று இவற்றை ருசிவாஸனைகளோடே நசிப்பித்துக்கொண்டு ததநந்தரத்தில் பகவதாஶ்ரயணம்பண்ணுங்கோளென்று ஸம்ஶயவிபர்யயமற வருளிச்செய்தது. இப்படியான அஹங்கார மமகாரங்களும் இவை ஹேதுவாகவருகிற அர்த்தகாமபாரவஶ்ய பாகவதாபசாராதிகளொன்று மின்றிக்கே இருக்கச்செய்தேயு மிவைவருகைக்கு யோக்யமான ஶரீரத்தோடிருந்ததே ஹேதுவாகக்கொண்டு பீதபீதராய்

(யானே என்தனதே யென்றிருந்தேன் - பலநீகாட்டிப்படுப்பாயோ-இன்னங்கெடுப்பாயோ - விண்ணுளார்பெருமாற் கடிமைசெய்வாரையும் செறு மைம்புலனிவை - மண்ணுளென்னைப் பெற்றாலென்செய்யா - குலமுதலடுந்தீவினைக்கொடு வன்குழியினில்வீழ்க்கு மைவரை வலமுதல்கெடுக்கும்வரமேதந்தருள்கண்டாய் - அருளாயுய்யுமாறெனக்கே) என்று நம்மாழ்வாரும் [అమర్యాదః క్షుద్రః - నృపశురపశస్యాస్పదమపి । అనిచ్ఛన్నప్యేవం - కృపయాత్వమేవైవం భూతన్ధరణిధర మే శిక్షయ మనః] (அமர்யாதஃ க்ஷுத்ரஃ ந்ருபஶுரபஶஸ்யாஸ்பதமபி - அநிச்சந்நப்யேவம் க்ருபயா த்வமேவைவம்பூதம் தரணிதர மே சிக்ஷய மநஃ) என்று பரமாசார்யரும் [శబ్దాదిభోగరుచి రన్వహమేధతేహ - వృత్త్యాపశుర్నరవపుః । దుఃఖావహోహమని శన్తవ । శబ్దాదిభోగవిషయారుచిరస్మదీయా నష్టాభవత్విహభవద్దయయాయతీన్ద్ర] (சப்தாதிபோகருசிரந்வஹமேததேஹ-வ்ருத்யாபஶுர்நரவபுஃ-துஃகாவஹோஹமநிஶந்தவ - ஶப்தாதிபோகவிஷயாருசிரஸ்மதீயா நஷ்டாபவத்விஹபவத்தயயாயதீந்த்ர)என்று அஸ்மதீயாசார்யரும் ப்ராதிகூல்யங்களநினைத்து துஃகப்பட்டு தந்நிவ்ருத்தியை ப்ரார்த்தித்தாரிறே. இத்தால் பகவத்ஸம்பந்தமும் ஸதாசார்யாபிமாநமும் ப்ராதிகூல்யஸ்பர்ஶமுள்ளவிடத்தில் கார்யகரமாகாதென்று தோற்றுகிறது. இப்படியானபின்பு சிஷ்யாசார்யர்களிருவரும் உடன்கேடராகையாலே ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டு சிஷ்யன்பக்கல் அபதேப்ரவ்ருத்திபிறந்தால் ஆசார்யன்நிக்ரஹித்து ஶிக்ஷித்தும் ப்ரக்ருதிவிஶிஷ்டனாகையாலே ப்ராமாதிகமாக 'வாசார்யன்பக்கல்வந்தால்[గురుంరహసిబోధయేత్](குரும்ரஹஸிபோதயேத்)என்கிறபடியே ஏகாந்தத்திலே திருவடிகளைப்பிடித்துக்கொண்டு ஹிதவசநத்தை விண்ணப்பம்செய்து இவருக்கிந்த துர்புத்தி நீங்கி நிர்மலராம்படி அவன்கண்களாலே அமலங்களாகவிழிக்குமென்கிறபடியேவிசேஷகடாக்ஷம்பண்ணவேணுமென்று, ஹிதத்தைமாறுபாடுடைத்தக்கடவனென்று சொல்லுகிறபடியே எம்பெருமானை அர்த்தித்தும் ஜாகருகனாய்வர்த்திக்கவேணும். இப்படிப்பட்ட வதிகாரியான ஸதாசார்யஸம்பந்தமுடைய ஸச்சிஷ்யலக்ஷண லக்ஷிதனை முமுக்ஷுவுக்கு(தானேவைகுந்தந்தரும்) என்கிறபடியே அவன் ஸ்வப்ராப்தியைக் கொடுப்பது. சேதநரான வாசியைப்பற்ற ஆசார்யமுகோல்லாஸத்துக்காக ஜ்ஞாநவ்யவஸாய ப்ரேமஸமாசாரங்களும் அவற்றில் அஜ்ஞாநத்தும்அஶக்தருக்கும் ப்ராதிகூல்யநிவ்ருத்தியும் ஆசார்யாபிமாநநிஷ்டருக்கும் அபேக்ஷிதம். திர்யக்ஸ்தாவரஜந்மாக்களுக்கானால் ப்ராதிகூல்யகந்தமில்லாமையாலே கேவல ததபிமாநமே உத்தாரகம். முன்பொருகாலத்திலே நம்பிள்ளை பெருமாள்கோயிலில்நின்றும் கோயிலுக்கெழுந்தரு

ளாநிற்க வொருநாள் நெடுந்தூரம்நடந்து பருஷோதக்ர நிதாகதப்தராய்
வருமளவில் ஒரு வடவ்ருக்ஷம் டணைந்துத்தழைத்து முதலிகளுக்கும்
நமக்கும் ஶ்ரமஹரமாம்படி நிழல்செய்திருக்கையாலே அதின்கீழே யெ
ல்லாரும் இருந்து இளைப்பாற்றி அங்கே பெருமாளுக்கமுதுசெய்யப்ப
ண்ணி தாமுமமுதுசெய்து அன்றிரா அங்கே சாய்ந்தருளி மற்றைநா
ள் பயணம்போகிறவிடத்தில் நம்பிள்ளை முதலிகளைப்பார்த்து இது நம
க்கெல்லாருக்கும் க்ஷுத்பிபாஸாதி ஸகலதாபநிவாரகமானபடி கண்
டிகோளே. இதுக்கு நாமென்னசெய்தோமென்று [గచ్ఛలోకాననుత్తమాన్]
(கச்சலோகாநநுத்தமாந்) என்று விசேஷகடாக்ஷம்பண்ணி இரண்டுதி
ருக்கையாலும் தழுவிப்போகிறவளவிலே ஸமீபக்ராமஸ்தன் ஒரு ப்ராம
ணன்கண்டு பரிஹஸித்துப்போனான். பிள்ளையுங் கோயிலுக்கெழுந்தரு
ளினார். அவ்விரவு, சூழ்விசும்பணிமுகில்படியே பெரியமஹோத்ஸவ
கோஷம்பிறக்க பரிஹஸித்த ப்ராஹ்மணனும் அவ்வூரிலுள்ளாரெல்லா
ருங் காணவந்துநிற்க ஆகாசத்திலே திவ்யதேஜஸ்ஸு வெளிப்பட அ
த்தையெல்லாருங்கண்டு விஸ்மயப்பட்டுக்கொண்டிருக்கிறவளவிலே அ
வ்ருக்ஷம் பிளந்து இரண்டுகூறாய் பெரியவாரவாரத்தோடே திவ்ய
தேஜஸ்ஸு புறப்பட்டு ஆகாசத்தின்மேலே போய் ஆதித்யதேஜஸ்ஸி
லே கலந்துபோனபடியைக்கண்டு காணவந்தவர் விஸ்ராந்தசித்தராய்
இதென்னென்றுவிசாரிக்க, அந்த ப்ராஹ்மணன் பிள்ளைகடாக்ஷித்தபடி
யைச்சொல்ல எல்லாருங்கேட்டு விஸ்மிதராய்ப்போனார்கள். மற்றைநா
ளிவ்வார்த்தையை, பிள்ளைகேட்டு எண்ணெய்க்காப்பு ஸ்ரீசூர்ணபரிபா
லநம்பண்ணி திருவத்யயநம்நடப்பித்துப்போனாரென்று ஜீயரருளிச்செ
ய்வர். இந்தநிரதிஶயபுருஷார்த்தம் ஸதநுஷ்டாநஸம்பந்நனை புருஷ
னாலே அர்த்திக்கப்பட்டுவருவதொன்றாயிருக்க ஸ்தாவரத்துக் கிப்பே
று லபிக்கக்கூடுமோவென்று சங்கிக்கவேண்டா. ஸர்வேஶ்வரனுவான்
திவ்யஶக்தியுக்தனாய் நிரங்குஶஸ்வதந்த்ரனாய் பரமதயாளுவானவ னொ
ருவனாகையாலே அவனபிமாநத்தாலே இவ்வாத்மாவை உஜ்ஜீவிப்பிக்க
வேணுமென்று நினைத்தானாகில் எதுவாகிலுங்கூடுமிறே. கர்மஜ்ஞாநப
க்திகளென்றும் ப்ரபத்தியென்றும் ஆசார்யாபிமாநமென்றும் ஸர்வமும்
அதிப்ரஸங்கம்வாராதபடி ஒருவ்யாஜத்தை ஸங்கல்பித்து பரிக்ரஹிக்க
நினைத்தவளவிலே அங்கீகரிக்குமவனாகையாலே (உன்மனத்தாலென்னி
னைந்திருந்தாய்) என்கிறபடியே அவன்நினைவே உத்தாரகம். [నాసౌపురు
షకారేణ నచాప్యన్యేన హేతునా] (நாஸௌபுருஷகாரேண நசாப்யந்யேந
ஹேதுநா)என்று ப்ரதமகடாக்ஷம் நிர்ஹேதுகமாகப்பண்ணினபின்பு அ
த்வேஷாபிமுக்ய ஸத்ஸங்கதி ஸதாசார்யோபதேசஸம்மந்த்ரார்த்தஜ்

ஞான தததநுரூபாநுஷ்டானங்களாலே பரிசுத்தனுக்கி ஸ்வவஸம்ஸ்லேஷ விஸ்லேஷைக ஸுகதுக்கனும்படி பண்ணி ஸ்வவ்யதிரிக்தங்கள் [భోగాః పురన్దరాదీనాం తే సర్వే నిరయోపమాః] (போகா꞉புரந்தராதீநாம் தேஸர்வே நிரயோபமா꞉) என்கிறபடியே நிரயப்ராயமாயிருக்கும்படி தோற்றுவித்து க்ஷுத்ரவிஷய ப்ரவணன் ஸ்வாபிமதவிஷயாலாபத்தாலே [దృఙ్మనస్సఙ్గసఙ్కల్పా జాగరః కృశతారతిః। హ్రీత్యాగోన్మాదమూర్ఛాన్తా ఇత్యనఙ్గదశా దశ] (த்ருங்மநஸ்ஸங்கஸங்கல்ப ஜாகர꞉க்ருஶதாரதி꞉ - ஹ்ரீத்யாகோந்மாதமூர்ச்சாந்தா - இத்யநங்கதஶாதஶ) என்கிறபடியே தஶாவஸ்தைகளை அநுபவிக்குமாப்போலே பகவதத்யந்த ப்ரவணனை விஷ்வதிகாரியும் (காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்து என்றும் எண்ணேகொண்டசிந்தையதாய் நின்றியம்புமென்றும் அடியேனடிகூடுவதென்றுகொலோ) என்றும், கங்குலும்பகலுங்கண்டு யிலறியாள் என்றும், மையுங்கண்ணீர்மல்கநின்று என்றும், திமிர்கொண்டாலொத்துநிற்கும் என்றும், வட்கிலளிறையு மென்றும், ஏறியபித்தினேடு என்றும், இட்டகாலிட்டகையளாயிருக்கும் என்றும், நின்னலால் இலேன்காண் என்றும், சொல்லுகிறபடியே இப்படிப்பட்ட வவஸ்தைகளை யடையும்படி பண்ணி அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதானனை தான் அநுபவிக்கைக்கு யோக்யனும்படி பரமார்த்தனுக்கி தன்னோடேசேர்த்துககொள்ளும். அயோத்யையில் சராசரங்களைக் கூட்டிக்கொள்ளவேணுமென்று நினைத்து அவற்றின்பக்க லொருஹேதுவின்றிக்கேயிருக்க [అపి వృక్షాః పరిమ్లానాః - ఉపతప్తోదకా నద్యః - అకాలఫలినో వృక్షాః] (அபிவ்ருக்ஷா꞉பரிம்லாநா꞉ - உபதப்தோதகாநத்ய꞉ - அகாலபலிநோவ்ருக்ஷா꞉) என்றும் [రామో రామో రామ ఇతి ప్రజానామభవన్ కథాః। రామభూతం జగదభూత్ రామే రాజ్యం ప్రశాసతి](ராமோ ராமோராமஇதி ப்ரஜாநாமபவந்கதா꞉-ராமபூதம்ஜகதபூத்ராமேராஜ்யம்ப்ரஶாஸதி),என்றும் சராசரவிபாகமற ஸ்வஸம்ஸ்லேஷவிஸ்லேஷைக ஸுகதுக்கராம்படிபண்ணி கூட்டிக்கொண்டுபோனுரென்று (புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே -நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும்-நற்பாலுக்குய்த்த னன்னான்முகனூர்பெற்றநாட்டுளே) என்று ஆழ்வார் அருளிச்செய்தார்மே. இவ்விபூதியி லிப்படிகூடுமோவென்று சங்கிக்கவேண்டா. அகடிதகடனா ஸாமர்த்யமுடைய ஸர்வஶக்தியுக்தன் லீலையிலே விநியோகங்கொள்ளவேணுமென்று நினைத்து கர்மாநுகுணமாக நிர்வஹிக்குமளவில் ஸ்வயத்நத்தாலே கூடாதித்தனைபோக்கி (விதிவாய்க்கின்று காப்பாரார் என்கிறபடியே க்ருபைகரையழிந்துபெருகப்புக்கால் (எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்மெய்ம்மாலாயொ

த்ரிந்தேன்) என்று எப்படிப்பட்ட பாபிஷ்டரானாலும் க்ருபைபலிக்கும் போது இவ்வாகாரங்களெல்லாம் லபித்துஜ்ஜீவிக்கும் [சித்த:பரமஸில்லாபே ப்ரபத்திரபிநோபதி: । விபர்யயேதுநைவாஸ்ய ப்ரதிஷேதாயபாதகம்] (சிதஃபரமஸில்லாபே ப்ரபத்திரபிநோபதிஃ - விபர்யயேதுநைவாஸ்ய ப்ரதிஷேதாயபாதகம்) என்கிறபடியே (அவனிவனைப்பெற நினைக்கும்போது) அநாதிகாலார்ஜித ப்ராப்திப்ரதிபந்தக கர்மம் ப்ரதிஷேதிக்கமாட்டாமையாலே தானேமேல்விழுந்து இவனைஸாதுகர்மங்களைப்பண்ணுவித்து தன்னை ப்ராபிக்கும்படிபண்ணும் [ஏஷஏவஸாதுகர்ம காரயதி தம்யமேப்யோலோகேப்ய உந்நிநீஷதி](ஏஷஏவஸாதுகர்மகாரயதி தம்யமேப்யோலோகேப்யா உந்நிநீஷதி) என்று ச்ருதியும்சொல்லிற்றிறே. (என்சொல்லால் யான்சொன்ன வின்கவியென்பித்துத் தன்சொல்லால் தான்தன்னைக்கீர்த்தித்த மாயன் - தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி யொப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு போகிய அப்பனையென்று மறப்பன்)என்றும், இந்தகவித்வம் ஆழ்வார் தன்சொல்லாலேசொன்னாரென்னும்படி. தானேதன்னைக்கீர்த்தித்துக்கொண்ட வாஸ்சர்யபூதன் தப்பில்லாதபடிதன் கவித்வத்தை தானேசொல்லி அஸத்ருஸபாபிஷ்டனானவென்னை யுஜ்ஜீவிப்பிக்கிற உபகாரகனென்று ஆழ்வாரருளிச்செய்தாரிறே. இத்தால்தான் உஜ்ஜீவிப்பிக்கநினைத்தவரை ஹேயோபாதேயங்களறிந்து நடக்கும்படி அந்தஃப்ரவிஷ்டனாய் நியமித்து முக்தனாக்குமென்று சொல்லப்பட்டதாய்த்து. ஆகையாலே ஸதாசார்யோபதேசத்தாலல்லது இவையொன்றும் தெரியாமையாலே அசார்யாபிமாநாந்தர்பூதனாக்கி ததநுருப ஜ்ஞாநாநுஷ்டாநங்களுண்டாபடிபண்ணி உஜ்ஜீவிப்பிக்கும். இப்படிப்பட்ட வதிகாரிகளிக்காலத்திலே துர்லபமிறேயென்னில் [வாஸுதேவஸ்ஸர்வமிதிஸமஹாத்மாஸுதுர்லப:] (வாஸுதேவஸ்ஸர்வமிதி- ஸமஹாத்மா ஸுதுர்லபஃ) என்றும் [கஸ்சிந்மாம்வேத்தி தத்வத:] (கஸ்சிந்மாம்வேத்தித்தத்வதஃ) என்றும்(ஓரொருவருண்டாகில் அத்தனை)என்றும் ஸுதுர்லபமாகவே சொல்லப்பட்டதிறே. ஆகையாலே ஆசார்யவரணம்பண்ணி பஞ்சஸம்ஸ்கார நாமரூப தாரணமாத்ரமுடையராயிருந்து வைத்தும் மந்த்ரவிருத்தங்களான தேஹாத்மாபிமாந அந்யஸேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்ய அஹங்காரமமகார த்வேஷ காமக்ரோத மத மாத்ஸர்ய யுக்தராய் பத்தஸம்ஸாரியாய் புத்ரதாராத்யாதி ஸக்தராய் ஒருவநுக்கொருவர் அர்த்தகாமநிமித்தமாகவும் அஹங்காரத்தைப்பற்றவும் ஸ்பர்த்தித்துக்கொண்டு அஸேவ்யஸேவாநிரதரானவர் இன்னமும் நாலுநாள் லீலைக்கு விஷயபூதராவர். தேஹாவஸாநகாலத்துக்கானாலும் [பிதரம் மாதரம் தாராந் புத்ராந்] (பிதரம் மாதரம் தாராந் புத்ராந்) இத்யா

திப்படியே ப்ராதிகூல்யங்களில் விரக்திஜநித்துபரமார்த்தராளுல்(ஆறு
நீர்வரவணித்தாளுல் அதுக்கிடான அடையாளங்களுண்டாமாப்போ
லே)முக்தபுருஷலக்ஷணங்களெல்லாம் [సదాపరగుణావిష్టో ద్రష్టవ్యస్సర్వదేహి
భిః] (ஸதாபரகுணுவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபிஃ) என்கிற
படியே, எல்லாருக்குங் காணப்பட்டு தனக்கும் இது சரமஶரீரமென்று
அறுதியிடலாயிருக்கும். அக்காலத்துக்கு மதுவே யாத்ரையாளுல்
ஜந்மாந்தரத்தை ப்ராபிக்கும் [నఖలుభాగవతాయమవిషయంగచ్ఛన్తి] (நகலு
பாகவதா யமவிஷயம்கச்சந்தி) என்று சொல்லுகையாலே அவிநீதனு
ளுலும் யாம்ய லோகப்ராப்தியில்லையென்று ப்ரமேயரத்நத்திலே அ
ருளிச்செய்தார். "பெரியவாச்சாம்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவன்
வந்து ஸ்வாமிந் நாம் லீலைக்குவிஷயமோ க்ருபைக்குவிஷயமோவெ
ன்று கேட்க, உடலைப்பற்றியிருந்தோமாகில் லீலைக்குவிஷயமாகிறோ
ம் உயிரைப்பற்றியிருந்தோமாகில் க்ருபைக்குவிஷயமாகிறோம்" என்று
அருளிச்செய்தார். இத்தால் [త్వఙ్మాంసరుధిరస్నాయు మేదోమజ్జాస్థిసంహ
తే । దేహేచేత్ప్రీతిమాన్మూఢో భవితానరకేపిసః] (த்வங்மாம்ஸருதிரஸ்நாயு
மேதோமஜ்ஜாஸ்திஸம்ஹதே - தேஹேசேத்ப்ரீதிமாந்மூடோ பவி
தாநரகேபிஸஃ) என்கிறபடியே தேஹாபிமாநியாய்க்கொண்டு தைல
க்ருதாதிகளாலே யுடம்பைப்பெருக்கி விஷயப்ரவணராய் தேஹாநு
பந்திகளான பார்யாபுத்ராதிகளில் அநுரக்தசித்தராய் ஶாஸ்த்ரவஶ்
யரின்றிக்கே ஸ்வைரம் ஸஞ்சரித்தாராகில் லீலாவிஷயமாய்ப் போவ
ர்கள். ஆத்மஸ்வரூபத்துக்கு அநுரூபமாத்ரமாக ஆகாரத்ரய ஸம்
பந்நராய் அர்த்தபஞ்சகதத்வஜ்ஞராய் ஹேயோபாதேயங்களறிந்து
ஸ்வரூபவிரோதிகளான ப்ராதிகூல்யங்களெல்லாம் த்யஜித்து தில
தைலவத் துர்விவேசமாய் த்யஜிக்கவொண்ணுத தம் தேஹத்தைக்
கண்டால் ஶத்ருவைக்கண்டாப்போலே ஹயப்பட்டு அத்தை வளர்த்
துக்கொள்ளாதே நியதாஹாரங்களை ஸத்தாதாரகமாத்ரம் ஸ்வீகரி
த்து ஶாஸ்த்ரவஶ்யராய் நிரஹங்காரத்தாலே ப்ரவர்த்தித்தாராகில்
க்ருபாவிஷயமாவரென்று அருளிச்செய்தாரென்கை. ஆகையாலே
ஸதாசார்யவரணம்பண்ணி ததுபதிஷ்டமாக்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்டா
ந ஸம்பந்நராளுலாயிற்று முக்தியோக்யராவது. இவ்வாசார்யவரண
ம்பண்ணுகிற வதிகாரிகள் ப்ரதமப்ரபந்நரென்றும், சரமப்ரபந்நரென்
றும், த்விவிதம். முதலதிகாரி ஸ்வாசார்ய னருளிச்செய்தபடியே
பகவதத்யந்தபரதந்த்ரனுய் ததேகப்ரவணனுய் (சேலேய்கண்ணிய
ரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையு மவரே
யினியாவாரே) என்றும் [వాసుదేవస్సర్వమ్] (வாஸுதேவஸ்ஸர்வம்)என்

றுஞ் சொல்லுகிறபடியே ஆழ்வார்போலேயிருக்குமவன். இரண்டாமதிகாரி ஆசாரியன் உபகரித்த பகவத்விஷய வைலக்ஷண்யம் நன்றாக நெஞ்சில்பட்டு இப்படி பரமவிலக்ஷணமான வஸ்துவை உபகரித்த மஹோபகாரத்தை நினைத்து இதுக்கு நாம் என்செய்வோமென்று தலை தடுமாறி [మాతా పితా యువతయస్సర్వం] (மாதா பிதா யுவதயஸ்ஸர்வம்) என்று அவிதிதவிஷயாந்தரராய் ததிதராங்ய தேவதாந்தரராய் மதுரகவிகள்போலே யிருக்குமவர்கள். இருவருக்கும் பர்வபேதமொழிய ப்ராதிகூல்யநிவ்ருத்தி முதலான அதிகாரவிசேஷங்களெல்லாம் அபேக்ஷிதங்களாயிருக்கும். ஆனால் பகவதாச்ரயணம் துர்லபம், இது ஸுலபமென்று சொல்லுகிறபடி யென்னென்னில், ஒரு அர்த்தஞ்சொன்னால் அறியத்தக்க ஜ்ஞானமும் அநுஷ்டிக்கத்தக்க சக்தியுமில்லாத பதிராந்தயோக்யருக்கும் கார்யகரமாமென்று சாஸ்த்ரகம்யனன்றிக்கே சக்ஷுர்க்கம்யனென்றும் இவன் அபதேப்ரவ்ருத்தனானல் ருசியைப்பார்த்து அநுமதி ப்ரதாநம்பண்ணுமவனன்றிக்கே மராணுந்தமாக நிர்ப்பந்தித்து திருத்தி அவனுக்கு இஷ்டவிநியோகயோக்யனாக்குமென்று நினைத்து ஸதாசார்யாநுவர்த்தனம் அமோகமென்று, [సిద్ధిర్భవతివానేతి సంశయోచ్యుతసేవినాం । నసంశయోஸ்తి తద్భక్త పరిచర్యారతాత్మనాం॥] (ஸித்திர்ப்பவதிவாநேதி ஸம்சயோச்யுதஸேவிநாம் - நஸம்சயோஸ்திதத்பக்த பரிசர்யாரதாத்மநாம்) என்று சொல்லுகிறதித்தனை. நியமிக்கத்தக்க யோக்யதையுண்டாய்ஸதாசார்யனானவன் ஸாரதமசாஸ்த்ரோக்தரீத்யா நியமித்தால் நியமநப்ரகாரத்தில் நில்லாதே சோம்பராய் யதேச்சாசாரிகளாய்த் திரிந்தாலும் கார்யகரமாமென்று சொல்லவொண்ணாதிறே. அப்படிசொல்லுமளவில் பாகவதாபசாராதி ப்ராதிகூல்யங்களுண்டானாலும் குறையில்லையென்றும் அர்த்தம்ப்ரஸக்தமாம், பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்டாநங்களோடே விரோதிக்கும். "பகவத்விஷயம் துர்லபமென்றது காணவொண்ணாதவனாய் அர்ச்சாரூபேண காணவந்தாலும் வாய்திறந்தொருவார்த்தை யருளிச்செய்யாதே இவன் துர்வாஸனையாலே விஷயப்ரவணனாய் அபதேப்ரவ்ருத்தனானாலும் இவன் ருசியைப்பார்த்து அநுமதிப்ரதாநம்பண்ணி கர்மாநுகுண பலப்ரதாநம்பண்ணுமவனாகையாலே ஸர்வேச்வரனுக் கிச்சேதநன் போகார்ஹனானாலும் லீலார்ஹனானாலும் இரண்டும் ஸமமாகையாலே சாஸ்த்ரவச்யனா யதிகாரியானால் போகத்திலே கூட்டிக்கொள்ளும், ஆஜ்ஞாதிக்ரமணம்பண்ணி அபதேப்ரவ்ருத்தனானால் லீலையிலே விநியோகங்கொள்ளும், ஸதாசார்யனானவன் ஸ்வாச்ரிதன் லீலார்ஹனாம்படி விட்டுக்கொடாதே போ

கார்ஶமாக்குவதே பணியாகையாலே ராஜாவானவன் பிணிபட்டிருக்கிற வேஶ்யையின்மேலே கண்வைத்து இவளை போகார்ஹையாம்படி பாங்காகப்பண்ணித்தரவேணுமென்று பிஷக்ஸ்வரனுக்கு நியமித்தால் இவ்யௌஷதத்தையிட்டு பத்யக்ரமத்திலே நிறுத்தி நன்றாகஶோதித்து நிர்தோஷையானபின்பு அவனுக்கர்ஹையாமென்று கொடுக்குமதொழிய உள்ளிருக்கிறவை யுண்டாயிருக்க புறப்பூச்சு மஞ்சள் குங்குமம் சாந்து அஞ்சநம் முதலானவை பூசி ஸ்ரக்வஸ்த்ராபரணாதிகளாலே அலங்கரித்து போகார்ஹையானளென்று அவன்பக்கலிலே போகவிட்டால் இருவருக்கும் சிரச்சேதபர்யந்தம் வருமாப்போலே பரதந்த்ரனை ஸ்வாசார்யனும் இச்சேதநனை நிகிலஹேயப்ரத்யநீகனானவனுக்கு அர்ஹனாக்கும்போது நெடுநாள் அந்யபரனாய் திரிந்த இவனுடைய அவித்யா கர்மவாஸநாருசிகளாகிற தோஷங்களுள்ளே கிடக்கச்செய்தேயும் நாமரூபங்களுண்டாம்படி பண்ணினதேயோருமென்று ஸமர்ப்பித்தாலிருவருக்கும் விநாஶமேபலிக்குமென்று நன்றாகத் திருத்திக்கொடுக்குமாகையாலே ஸதாசார்யஸம்பந்தம் ஶீக்ரபலப்ரதமென்றபேக்ஷிக்கப்பட்டது. "எம்பெருமானார் ஸம்பந்தமுடையனாயிருந்துவைத்து அரங்கமாளிகையென்பானொருவன் விஷயப்ரவணனாய் வர்த்திக்கக்கண்டு பஹுஶஶ்ஶிக்ஷித்து கீதாத்யாயங்கள் பதினெட்டுமோதுவித்து அதிலர்த்தம் நெஞ்சில்படுத்தி ஊணுமுறக்கமு மறியாதே வீதராகனாக்கி க்ருபாபரதந்த்ரனும்படி யருளினாரிறே." ஆகையாலிவன் அவிநீதனானாலும் ரக்ஷிக்க ஶக்தரென்னுமது ஸத்யம். இவ்வர்த்தம் (இநிமேயினியசுவர்க்கத்திலின்னம்) என்கிறபாட்டிலே, இனி எம்பெருமானை ஶரணமென்றத்யவஸித்தால் நம்வஶத்திலே நம்மைவிட்டு நான்விஷயவாஸனையாலே துர்மார்க்கத்திலே திரிந்து ஸ்வர்கநரகங்களிலே ப்ரவேஶிக்க ஸம்மதிப்பரோ ஸந்மார்க்கத்திலே ப்ரவர்த்திக்கும்படி திருத்திப்பணிகொள்வாரானபின்பு பகவத்ப்ராப்த்யர்த்தமாக நீக்ருஶமாகவேண்டாவென்று அமுதனாருளிச்செய்தாரிறே. இன்னமும் பகவத்ப்ரபந்நனுக்கு சிலப்ராமாதிகமாக ஐஹிகதோஷமுண்டானாலும் [అవిజ్ఞాతా హి భక్తానామాగస్సు కమలేక్షణః] (அவிஜ்ஞாதாஹிபக்தாநா மாகஸ்ஸுகமலேக்ஷணஃ) என்றும், [దోషో యద్యపి తస్య స్యాత్] (தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்) என்றும், [సాధురేవ స మన్తవ్యః] ஸாதுரேவஸமந்தவ்யஃ) என்றும் (செய்தாரேல் நன்றுசெய்தார்) என்றும் ஸர்வசக்தியுக்தன் நிவாரகரில்லாத நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தோடே கூடின பரமக்ருபாவானாகையாலே மித்ரபாவமே யமையுமென்று எதிரிட்டவரோடே மன்றாடி தன்பின்னே வைத்துக்கொண்டு ரக்ஷிக்கிலும் ரக்ஷிக்கும். ஆசார்யன் பகவத்பரதந்த்ர ஜந்மனாகை

யாலே பொன்வாணியன் ராஜாவுக்குப் பணிசெய்கிறவிடத்தில் புடபாக சுத்தமாம்படி பொன்னையோடவைத்துப் பணிசெய்து ராஜாவுக்குக்கொடுக்குமாப்போலே இவனை பகவத்போகார்ஹனும்படி ப்ராக்ருதபோகபராங்முகனுக்கி மற்றும் அபேக்ஷிதமான ப்ரபந்நாலங்காரங்களையெல்லாமுண்டாம்படிபண்ணி, ஆஜ்ஞாபாரதந்த்ரனுயிருந்தால் பகவத்விஷயத்திலே யந்வயிக்கும்படி விசேஷகடாக்ஷம்பண்ணி இவன் வீரஸுந்தரன்போலே ப்ரதிகூலனுனல் கடாக்ஷம்பண்ணிப் போருமவனுகையாலே ஆசார்யப்ரபந்நனுக்கே மிகவும் அதிகாரிஸம்பத்தியுண்டாகவேணும். தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே பரிக்ரஹிக்குமவனிலுங் காட்டில் ஸதாசார்யனுலே ஸுசிக்ஷிதனுன வதிகாரிபக்கல் ஸர்வேச்வரன் மிகவுமுகந்திருக்கும். இவ்வதிகாரி தன்னோடே பரிமாறுமளவில் நன்ருக த்யாஜ்யோபாதேயங்களறிந்து தனக்கு உகப்பாம்படி பரிமாறுமென்னு மத்தாலே [మమమద్భక్తభక్తేషు ప్రీతిరభ్యధికా భవేత్] (மமமத்பக்தபக்தேஷு ப்ரீதிரப்யதிகாபவேத்) என்று தானே அருளிச்செய்தானிறே, ஆகையாலே சரமப்ரபந்நனுன வதிகாரியே விலக்ஷணுநுஷ்டாந ஸம்பந்நனுயிருக்கவேணும். இவ்வதிகாரிக்கு முந்நறமுன்னம் ரஹஸ்யத்ரய மநுஸந்திக்கைக்கு (புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும்) என்று துடங்கி சொல்லப்பட்ட வைஷ்ணவாதிகாரி லக்ஷணங்களுண்டாகவேணும். அவையாவன, [పితౄన్మాతౄర్దారాన్ పుత్రాన్ బన్ధూన్] (பித்ரம்மாதரம் தாராந் புத்ராந்பந்தூந்) என்றும், [క్షేత్రాణి మిత్రాణి ధనాని] (க்ஷேத்ராணி மித்ராணி தநாநி)என்றுஞ் சொல்லப்பட்ட பித்ரு மாத்ரு தார புத்ர ரத்ந தந தாந்ய க்ரஹ க்ஷேத்ர மித்ர பசு பந்துவர்க்காதிகளெல்லாம் அக்நிகல்பமாய் தோற்றி ருசிவாஸனைகளோடே பரித்யஜிக்கையும், இவையெல்லாமெம்பெருமான் என்று பற்றுகையும் அப்படி த்யாகஸ்வீகாரங்களுண்டானுல் பின்பு பலந்தப்பாதென்று அத்யவஸித்திருக்கையும், ப்ராப்யலாபத்துக்கு த்வரிக்கையும், இங்கிருக்கிறகாலத்திலே திவ்யதேசங்களிலே ப்ராவண்யமும், அவனுடைய குணுநுபவ கைங்கர்யங்களாலே காலக்ஷேபம்பண்ணுகையும், இப்படியிருக்கும் விலக்ஷணரேற்றம்கண்டுகந்திருக்கையும், மந்த்ரத்ரயத்திலும் நியதனுயிருக்கையும், ஆசார்யனோடே ஸஹவஸித்திருக்கையும், முதலானவை) என்று முமுக்ஷுப்படியிலே அருளிச்செய்தாரிறே. இனி ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களுக்கு அதிகாரிகள் ஜீவந்முக்தர். அவராரென்னில், [నశబ్దశాస్త్రాభిరతస్య మోక్షో నచైవరమ్యావసథప్రియస్య । నభోజనాచ్ఛాదన తత్పరస్య నలోకచిత్తగ్రహణేరతస్య । ఏకాన్తశీలస్య దృఢవ్రతస్య [illegible])

యప్రీతి నివర్తకస్య । అధ్యాత్మవిద్యారతమానసస్య మోక్షో ధ్రువో నిత్యమహింసకస్య ॥
శమదమనియతాత్మా సర్వభూతానుకమ్పీ విషయసుఖవిరక్తో జ్ఞానతృప్తః ప్రశాన్తః ।
అనియతనియతాన్నో నైవరుష్టో నహృష్టః ప్రణీత ఇవగేహాద్గచ్ఛతేయస్సముక్తః]
(ஶப்தஶாஸ்த்ராபிரதஸ்ய மோக்ஷோ நசைவரம்பா ஸதப்ரியஸ்ய - ந போஜநாச்சாதநதத்பரஸ்ய நலோகசித்தக்ரஹணேரதஸ்ய - ஏகாந்தஶீலஸ்ய த்ருடவ்ரதஸ்ய பஞ்சேந்த்ரியப்ரீதிநிவர்த்தகஸ்ய - அத்யாத்மவித்யாரதமாநஸஸ்ய மோக்ஷோ த்ருவோ நித்ய மஹிம்ஸகஸ்ய - ஶமதமநியதாத்மா ஸர்வபூதாநுகம்பீ விஷயஸுகவிரக்தோ ஜ்ஞாநத்ருப்த꞉ ப்ரஶாந்த꞉ - அநியதநியதாந்நோ நைவருஷ்டோ நஹ்ருஷ்ட꞉ ப்ரவஸித இவகேஹாவர்த்ததேயஸ்ஸமுக்த꞉) என்கிறபடியே ப்ராக்ருதஶாஸ்த்ரருசியுடையவனுக்கும், க்ரஹத்திலே ஸக்தனானவனுக்கும், அஶநாச்சாதநவநிதாதிகளில் தத்பரனானவனுக்கும் ஸம்ஸாரிகதுஷ்கர்மப்ரவ்ருத்தியில் அபிரதியுடையவனுக்கும், மோக்ஷயோக்யதையில்லாமையாலே அவற்றைவிட்டு ஸம்ஸாரிகளோடே கலந்து திரியாதே ஏகாந்தஶீலனாய் ஈஶ்வரனுஞ் சலிப்பிக்கவொண்ணாதபடி ஶிஷ்டாசாரத்தில் த்ருடசித்தனாய் ஶப்தாதிவிஷயங்களில் விரக்தனாய் அத்யாத்மஶாஸ்த்ரவிசாரநிரதனாய் பூதத்ரோஹியாகாதே பரமதயாபரனுக்கே மோக்ஷஸித்தி தப்பாதென்று நிஶ்சயித்துக்கொண்டு ஶமதமாத்யாத்மகுணபரிபூர்ணனாய் ஸர்வபூததயாபரனாய் விஷயஸுகவிரக்தனாய் விஜ்ஞாநபரிபூர்ணனாய் அஜ்ஞாந ஸம்ஸாரிகள் தர்ஜநபர்த்ஸநாதிகளாலே தன்னை பரிபவித்தாலும் தான் கலங்காதே ப்ரஶாந்தசித்தனாய் போக்யவஸ்துக்களை யாகவேணுமென்கிற நியதியின்றிக்கே ஏதானாலும் க்ஷுத்பீடா நிவ்ருத்யர்த்தமாக பரிசுத்தவஸ்துஜீவந நியதியையுடையனாய் த்ருஷ்டபலலாபாலாபங்களில் ஹர்ஷஶோகமில்லாதவன் க்ரஹத்தில்வர்த்தித்தாலும் ஜீவந்முக்தரென்று சொல்லப்படும். இந்தவதிகாரியே ஆழ்வார்களுடைய அருளிச்செயலநுபவத்துக்கு யோக்யரென்று குருபரம்பராப்ரபாவத்திலே பின்பழகிய நாயனாரருளிச்செய்தாரிறே. ப்ரபந்நனானவன் மந்த்ரங்களாலும் ப்ரபந்தங்களாலும் அர்த்தாநுஸந்தாநத்தோடே சப்தாநுஸந்தாநம் பண்ணவேணுமிறே. [ద్వయమర్థానుసన్ధానేనసహ] (த்வயமர்த்தாநுஸந்தாநேநஸஹ என்றும் (இப்பத்துடன் வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே)என்றும் எம்பெருமானாரும் ஆழ்வாரும் அருளிச்செய்தாரிறே. ஜபஹோமாதிகளில் ஶப்தஶக்தியாலே ரக்ஷகமாவது உபாஸகனுக்கிறே. ப்ரபந்நனுக்கு அர்த்தாவபோதநத்தாலே த்யாஜ்யோபாதேய விவேகம் பிறப்பித்து த்யாஜ்யங்களை விடுவித்து உபாதேயங்களை ஸ்வீகரிப்பித்து ரக்ஷகமாயித்தனே.

ரக்ஷிக்கையாவது ரக்ஷகனுடைய அநுக்ரஹத்துக்கு பாத்ரபூதனுக்குகை. எங்ஙனேயென்னில் [దేహాసక్తాత్మబుద్ధిర్యదిభవతిపదంసాధువిద్యాత్తృతీయం। స్వాతన్త్ర్యాన్ధోయదిస్యాత్ప్రథమమితర శేషత్వధీశ్చేద్ద్వితీయం-ఆత్మత్రాణోన్ముఖశ్చేన్నమ ఇతిచపదం బాన్ధవాభాసలోలః శబ్దం నారాయణాఖ్యం విషయచపలధీశ్చేచ్చతుర్థీం ప్రపన్నః] (தேஹாஸக்தாத்மபுத்திர்ய திபவதிபதம் ஸாதுவித்யாத்ருதீயம்- ஸ்வாதந்த்ர்யாந்தோயதிஸ்யாத் ப்ரதமமிதரஶேஷத்வதீஶ்சேத்விதீயம்-ஆத்மத்ராணோந்முகஶ்சேந்நம இதிசபதம் பாந்தவாபாஸலோலஶ் ஶப்தம்நாராயணாக்யம் விஷயசபலதீஶ்சேச்சதுர்த்தீம்ப்ரபந்ந:) என்று ப்ரபந்நனவனும் ப்ரக்ருதிவிஶிஷ்டனாயிருக்கையாலே ஸ்வரூபவிரோதிகள் புகுரும், அவ்வோதஶைகளிலே தந்நிவர்த்தகமான மந்த்ரத்தினுடைய பதங்களில் அர்த்தத்தை யநுஸந்தித்து மீட்கவேணும். மீட்கமாட்டானாகில் யதாபூர்வம் அஜ்ஞானமே பலிக்கும். தேஹத்திலாத்மபுத்திபிறந்தால் மகாரார்த்தத்தை யநுஸந்தித்து மீட்கவேணும். மீட்கமாட்டானாகில் யதாபூர்வம் அஜ்ஞாநமே பலிக்கும் தேஹத்திலாத்மபுத்திபிறந்தால் மகாரார்த்தத்தை யநுஸந்தித்து நாம் ஜ்ஞாநாநந்தலக்ஷணரல்லோமோ தேஹேந்த்ரியமந: ப்ராணபுத்தி விலக்ஷணரல்லோமோ வென்று அத்தைத்தவிர்த்துக்கொள்ளவேணும். தவிர்த்துக்கொள்ளுகையாவது தேஹாநுபந்தி வர்ணாஶ்ரமாபிமாநம் மேலிட்டுக்கொண்டு [ఆఢ్యోభిజనవానస్మి కోన్యోస్తి సదృశో మయా] (ஆட்யோபிஜநவாநஸ்மி-கோந்யோஸ்திஸத்ருஶோமயா) என்கிற அஹங்காரமும் இத்தேஹத்தை பருஷோக்திகளாலே பரிபவிக்குமவர்களை ஶத்ருக்களாகநினைத்து தேஹாத்மாபிமாநத்தாலே நம்மைஅவன் பரிபவிப்பதே யென்று அவன்மேலே சீறு மஹங்காரமும் நிவர்த்திப்பித்துக்கொண்டு [నాహంవిప్రోనచనరపతిర్నాపివైశ్యోనశూద్రః] (நாஹம்விப்ரோநசநரபதிர் நாபிவைஶ்யோநஶூத்ர:) என்று துடங்கி [లక్ష్మీభర్తుర్నరహరితనోర్దాసదాసస్యదాసః] (லக்ஷ்மீபர்துர்நரஹரிதநோர்தாஸதாஸஸ்யதாஸ:) என்னுமளவாக ப்ராஹ்மணாதி வர்ணங்கள் தேஹவிகாரங்களாகையாலே தேஹாதிரிக்தரான நமக்கு இவையொன்றுமில்லை. நாம் வைஷ்ணவதாஸனென்று நினைத்திருக்கையும் இந்த தேஹத்தை நிக்ரஹிக்குமவர்களைக்கண்டு பரமபந்துக்களாக புத்திபண்ணி இந்த தேஹம் நமக்குப் புறம்பாய் த்யாஜ்யமாய் ஹேயமாய் விபரீதஜ்ஞாநஜநகமுமாய் காமக்ரோதாதி ஶத்ருதுர்வர்க்கமுமாய் ஸ்வபரஸ்வரூபதிரோதாநகரியாய் சிறைகூடம்போலே அநர்த்தஹேதுவாயிருப்பதொன்றன்றோ. இத்தைநலியுமதுவும் நம்பணியன்றோ என்று அவர் பக்கல்பொறையுங் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கும்

இவையுண்டானாலாய்த்து மகாரார்த்த ஜ்ஞாநஸித்தி, இந்த தேஹாபி
மாந நிவ்ருத்தியே ப்ரதமாதிகாரம். இதுண்டாகவே ஸம்ஸாரபீஜம்
நஶித்து ஸ்வரூபஸித்தியுண்டாம். ஸ்வதந்த்ரனென்கிற புத்திபிறந்தா
ல் காரணத்வ ரக்ஷகத்வ ஶேஷித்வ வாசியான அகாரார்த்தத்தை யநு
ஸந்தித்து நாம் பகவச்சேஷபூதரல்லோமோ நமக்கு ஸ்வாதந்த்ர்யங்கூ
டுமோ வென்று அந்தபுத்திதவிர்த்துக்கொள்ளவேணும். அந்யஶேஷத்
வபுத்தி பிறந்தால் அநந்யார்ஹவாசியான உகாரார்த்தத்தை யநுஸந்தி
த்து நாம் அநந்யார்ஹரல்லோமோ அந்யஶேஷத்வங்கூடுமோ வென்று
அத்தைத் தவிர்த்துக்கொள்ளவேணும். ஸ்வரக்ஷணத்தில் தனக்கந்வ
யமுண்டென்கிறபுத்தி பிறந்தால் நமஶ்ஶப்தார்த்தத்தை யநுஸந்தித்து
க்கொண்டு [𑌮𑌮 𑌭𑌗𑌵𑌾𑌨𑍇𑌵 𑌰𑌕𑍍𑌷𑌕𑌃-𑌨𑌮𑌮] (மமபகவாநேவரக்ஷக:-நமம)
என்று அந்தபுத்தி தவிர்த்துக்கொள்ளவேணும். ஆபத்ரக்ஷகங்க
ளில் பந்துத்வப்ரதிபத்திபிறந்தால் அயந பதார்த்தத்தை யநுஸந்தித்
து ப்ராப்யனானவனே ஸர்வவிதபந்துவுமென்று அத்தைத்தவிர்த்துக்
கொள்ளவேணும். விஷயங்களில் சாபல்யம் பிறந்தால் வ்யக்தச
துர்த்தியை அநுஸந்தித்து நாம் அநந்யபோகரல்லோமோ அவனுக்கி
ஷ்ட விநியோகார்ஹமாயிருக்கவேணுமொழிய நமக்கு வேறே சி
ல விஷயாநுபவங் கூடுமோவென்று அத்தை நிவர்த்திப்பித்துக்
கொள்ளவேணும். இப்படி மந்த்ரார்த்த ஜ்ஞாநத்தாலே த்யாஜ்
யோபாதேயங்களறிந்து தேஹாபிமாநாதிகளை பரித்யஜித்து ஶேஷ
த்வ பாரதந்த்ர்ய கைங்கர்யங்களை அங்கீகரித்து ப்ரவர்த்தித்தால் ஸ்
வரூபஸித்தியுண்டாய் பகவதநுக்ரஹபாத்ரராய் முக்தியோக்யராவர்.
ததநுரூபாநுஷ்டாந மில்லாதபோது மந்த்ரார்த்த காலக்ஷேபம் நித்
யம் ஶதாபிஷேகம் பண்ணினாலும் நித்யஸம்ஸாரிகளாய்ப் போ
வர்களென்று பட்டரருளிச்செய்வர். இனி ப்ரபந்தங்கள் கற்றதுக்கு
பலம் அவற்றி லருளிச்செய்தபடியே “அறியக்கற்று வல்லரானால்
வைஷ்ணவத்வஸித்தி” என்கிறபடியே அறியவும் அநுஷ்டாநம்பண்
ணவும் ஶக்தரானாலாய்த்து வைஷ்ணவத்வஸித்தி யுண்டாய் (தழு
வப்பாடி யாடவல்லார் வைகுந்தமேறுவரே) என்கிறபடியே முக்தரா
வது கேவல பாடமாத்ரமானால் [𑌦𑌰𑍍𑌵𑍀 𑌪𑌾𑌕𑌰𑌸𑌂 𑌯𑌥𑌾] (தர்வீபாகரஸம்
யதா) என்கிறபடியே நமக்கு நாலாயிரம் வரும் மூவாயிரம்வரு
மென்று அதுவுமொரு அஹங்காரத்துக்கு ஹேதுவாய் அப்ரயோஜ
கமாய்விடும். [𑌪𑌾𑌠𑌾𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑌮𑌃] (பாடாதேவப்ரஸித்ததம:) என்று
சொல்லாநின்றதே யென்னில்? சப்தார்த்தஜ்ஞாநமில்லாதபோது ஹே
யோபாதேயங்க ளிவையென்று தெளிந்து வ்யவஹரிக்க யோக்யதை

யில்லாமையாலே தமோநிவ்ருத்தியாகாதிறே. ஆனாலு மிப்படிசொல்லுகிறது தத்ப்ரபாவபரம், (கூறுதல் வல்லாருளரேல் கூடுவர் வைகுந்தமே) என்று இப்பத்துப்பாட்டும் அநுஸந்தித்தவர் முக்தராவரென்று அருளிச்செய்தாரென்று அப்பத்துப்பாட்டும் அநுஸந்தித்து தத்விருத்தமான பாகவதாபசாராதி ப்ரவ்ருத்தியில் அந்வயித்தால் முக்தராகமாட்டாரிறே. ப்ரதிகூலநிவ்ருத்தி யுண்டானல் பாடமேபோருமென்று சொல்லிலும் சொல்லலாம். ஆகையாலே இப்பத்தும் வல்லாரென்றது ததர்த்தஜ்ஞாந ததநுரூபாநுஷ்டாந பர்யந்தம் விவக்ஷிதம். அருளிச்செய்தபடியை விட்டு அநுஷ்டாநபர்யந்தம் விவக்ஷிதமென்று சொல்லுகிறதென்னென்னில்? பலஞ்சொல்லுகிற வளவில் (காமர்மானேய்நோக்கியர்க்கே) என்றும் (மதநர்மின்னிடையவர்க்கே) என்றும் அருளிச்செய்தாரென்று அதுவே பொருளாகச் சொல்லவொண்ணாதிறே. காமுகர் காமிநிகளுக்கு போக்யராமாப்போலே இப்பத்தும் அப்யஸிக்கவல்லவர்கள் நித்யஸூரிகளுக்கு போக்யராவரென்று தாத்பர்யங்கொள்ளவேணுமாகையால் ததர்த்தஜ்ஞான ததநுஷ்டாந பர்யந்த மென்றபடி. இப்படியே வேதங்களும் ருஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தத்தத்ப்ரஸம்ஸைவருமளவில் அருளிச்செய்வர்கள். [చక్రం బిభర్తి వపుషాభితప్తం బలం దేవానామమృతస్య విష్ణోః-సవేతి నాకం దురితా విధూయ విశన్తి యద్యతయో వీతరాగాః] (சக்ரம் பிபர்த்தி வபுஷாபிதப்தம் பலம்தேவாநா மம்ருதஸ்ய விஷ்ணோ: - ஸவேதிநாகம் துரிதாவிதூய விஸந்தியத்யதயோவீதராகா:) என்று தப்தசக்ரதாரண மாத்ரத்தாலே வீதராகரான ஸந்யஸ்தர் ப்ராபிக்கிற பரமபதத்தை ப்ராபிப்பரென்று வேதஞ்சொல்லிற்றென்று தேவதாந்தர பரருக்கும் பரஹிம்ஸாதி நிஷித்தாநுஷ்டாநரதருக்கும் தத்ப்ராப்தி சொல்லப்போகாதிறே. தததநுரூபமென்று சொல்லுகிற இத்தனையொழிய இதுவே போருமென்று சொல்லவொண்ணாமையாலே தத்ப்ரபாவ ப்ரசம்ஸா பரவாக்யங்களென்று கொள்ளவேணும். [యేపాపినో౽పి శిశుపాల సుయోధనాద్యాః వైరానుబన్ధమతయః పరుషం వదన్తః-ముక్తిం గతాయే] (யேபாபிநோபி ஸிஸுபாலஸுயோதநாத்யா: வைராநுபந்தமதய: பருஷம்வதந்த:-முக்திங்கதாயே)என்று பாபிஷ்டரான ஸிஸுபாலாதிகளும் ப்ரதிகூலராய் பருஷித்து முக்தரானரென்று சொல்லினது தத்ஸ்மரண ப்ரபாவத்தைப்பற்றிச்சொல்லுகிறதொழிய பகவத்த்ரோஹிகளுக்கும் தத்ப்ராப்தி சொல்லவொண்ணாதிறே. (திங்கள்சேர் மணிமாடநீடு) என்று ஆழ்வார் சிரீவரமங்கலத்தில் மாடங்களை ப்ரஸம்ஸிக்கும்போது சிறிது ஓக்கமுடைய

மாடங்கள் சந்த்ரமண்டலத்தோடே சேர்ந்திருக்குமென்றும் (வெள்ளி
யேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்) என்று ஶுக்ரமண்டலத்தோ
டே சேர்ந்த ப்ராகாரங்களென்றும், சொல்லுகிறவை ப்ரத்யக்ஷ விருத்த
ங்களாகையாலே ப்ரஶம்ஸாபரங்களென்று கொள்ளவேணுமிறே. அ
த்யௌசித்யத்துக்கு ஸ்வாபதேஶத்திலே தாத்பர்யம். [𑌯𑌥𑌾𑌤𑌥𑌾𑌵𑌾
𑌪𑌿𑌸𑌕𑍃𑌤𑍍𑌕𑍃𑌤𑍋𑌽𑌞𑍍𑌜𑌲𑌿𑌃] (யதாததாவாபிஸக்ருத்க்ருதோஞ்சலி:) என்று
அஞ்ஜலியை ப்ரஶம்ஸிக்குமளவில், [𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍] (கேநசித்) என்றொ ரென்
றும் [𑌕𑌦𑌾𑌪𑌿] (கதாபி) என்றொ ரென்றும் ஒருகாலத்தில் ஓரஞ்ஜலி
யைப் பண்ணி ததாஜ்ஞாதிலங்கநபரனாய்த் திரிகிற அபசாரப்ரவ்ருத்த
னுக்கும் பாகவதாபசாரபரனுக்கும் ஸர்வாநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகே
ஷ்டப்ராப்தி சொல்லவொண்ணாதிறே. சொல்லப்புக்கால் அஞ்ஜலிமாத்
ரம் பண்ணுதா ரொருவரு மில்லாமையாலே தேவதாந்தர பரரோடு
ப்ரயோஜநாந்தரபரரோடு நிஷித்தாநுஷ்டாநபரரோடு பாகவதாபசார
பரரோடு வாசியற ஸகலசேதநரும் முக்தராய்ப்போவரென்னு ம
ர்த்தம் ப்ரஸக்தமாய் வைஷ்ணவத்வாத்யதிகாரங்களெல்லாம் அப்ர
யோஜகமாய்விடுமென்கை. ஆகையாலே, [𑌮𑌹𑌤𑌾𑌮𑌪𑌿 𑌕𑍇𑌷𑌾𑌞𑍍𑌚𑌿𑌦𑌤𑌿𑌵𑌾
𑌦𑌾𑌨𑍍𑌪𑍃𑌥𑌗𑍍𑌵𑌿𑌧𑌾𑌨𑍍 - 𑌤𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌶𑌂𑌸𑌾𑌦𑌿 𑌤𑌤𑍍𑌪𑌰𑌤𑍍𑌵𑌾𑌦𑌬𑌾𑌧𑌿𑌤𑌾𑌃] (மஹதாமபிகேஷாஞ்
சிததிவாதாந் ப்ருதக்விதாந் - தத்தத்தத்ப்ரஶம்ஸாதி தத்பரத்வாதபா
திதா:) என்று இப்படிசொன்னவை யெல்லாம் ப்ரஶம்ஸா பரவாக்
யங்களென்று சொன்னால் அதில் பாதகமில்லை. ப்ரபந்தங்க ளறிந்தப
டி அநுஷ்டாநம் பண்ணுகையாவது, (பொய்ந்நின்ற ஞானமும்) என்று
துடங்கி தேஹாத்மாபிமாநரூபமான அஸத்யஜ்ஞானமும் ஸாம்ஸா
ரிக துஷ்கர்ம ப்ரவ்ருத்தி மாலிந்ய ஶரீரம்முதலானவை த்யாஜ்ய
ங்களென்றறிந்து இவை நிவர்த்திப்பிக்க வேணுமென்று ஸர்வேஶ்வ
ரனை அர்த்தித்துக்கொண்டு (வீடுமின் முற்றவும் வீடுசெய்து உம்மு
யிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே) என்று பித்ரு மாத்ரு தார பு
த்ர க்ருஹ க்ஷேத்ராதி பகவத் வ்யதிரிக்தங்களெல்லாம் பரித்யஜித்
தே ஆத்மஸமர்ப்பணம்பண்ணி (நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்
த்து) என்று ஸம்ஸாரபீஜமான அஹங்கார மமகாரங்கள் கீழ்வே
ரோடே மூலச்சேதமாம்படி அறுத்துப்புகட்டு மநனகமலமறக்கழுவி
என்று ஸ்வகுண பரதோஷங்களை நிரீக்ஷிக்கிற மநோதோஷம் போ
க்கிக்கொண்டு (அருவினையேன் - நீசனேன் - பாவியேன்) என்று ஸ்
வதோஷங்களை யநுஸந்தித்துக் கொண்டு (எந்நாள் யானுன்னை இ
னிவந்து கூடுவன்) என்று ப்ரதிகூலமான தேஹேந்த்ரியாதிகளை
நிவர்த்தித்து நானுன்னைக் கூடுவதெப்போதோவென்று மோஹித்துக்

*கொண்டு (வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்) என்று ஸர்வவித தாஸ்யருசியையுடையராய் (யாவையும் யவருந்தானே) என்று ஸர்வமும் பகவதாத்மகமென்று ராகத்வேஷ ஶூந்யராய் (நெஞ்சிஞல் நினைப்பான் யவன் அவனாகும்) என்று அர்ச்சாவதார குணபூர்த்தியறிந்து அத்யாதரமுடையவராய் (பயிலுந் திருவுடையர் யவரேலு மவர் கண்டீர் - எம்மையாளும் பரமரே) என்று பகவத்குணாநுபவபரரான பரமவிலக்ஷண ஜந்மரே ப்ராப்யபூதரென்று அநுஸந்திக்குமவராய் (பாரிலோர்ப்பற்றையை பச்சைப்பசும்பொய்கள் பேசுயான்கிலேன்) என்று அஸேவ்யஸேவையிலே நிவ்ருத்த மநோரதராய் (ஐங்கருவிகண்டவின்பம் - அளவில்லாச் சிற்றின்பம்) என்று ஐஶ்வர்ய கைவல்யங்களை த்ருணீகரித்தவராய் (இவையென்ன வுலகியற்கை - கொடுவுலகங்காட்டேலே) என்று இந்த லோகவ்யாபாரம் ஸஹிக்கமாட்டாதே இது உருக்காட்டா தொழியவேணுமென்று அத்யந்த ஜிஹாஸையையுடையராய் (நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்) என்று ஆகிஞ்சந்யாதிகளை அநுஸந்தித்துக்கொண்டு இருக்குமவராய் (பலநீகாட்டிப்படுப்பாயோ - இன்னங்கெடுப்பாயோ) என்று விஷயாந்தர தர்சனத்தில் ஶோகிக்குமவராய் (கங்குலும் பகலுங் கண்டுயிலறியாள்) என்று பகவதலாபக்லேஶத்தாலே நித்ராஹாராதிகளில் நசையற்று (அப்பனே காணுமாறருளாய்) என்று கூப்பிட்டுக்கொண்டு (மல்லிகை கமழ்தென்றலீருமாலோ) என்று தத்விஶ்லேஷதஶயில் போக்யபதார்த்தாதிகளெல்லாம் அக்நிகல்பங்களாய் (ஒன்றும் மாயஞ் செய்யேல் - திருவாணை நின்னாணைகண்டாய். நின்னலாலறிகின்றிலேன்யான்) என்று ஆணையினால் மறுத்து ப்ரார்த்தித்து ப்ரக்ருதிஸம்பந்த விமோசநத்தைப் பண்ணுவித்துக்கொள்ளும்படியான பரமார்த்தியையுடையராகை, இதுவாய்த்து ப்ரபந்தங் கற்றதுக்கு பலம். இந்த தர்ஶந ப்ரபந்தங்களில் ஆர்த்த ஜ்ஞானமில்லாதே ஸம்ஸாரபத்தராணர்க்கும் இவ்வர்த்தங்களறிந்துவைத்தும் விஷயாஸக்த சித்தராய் தார புத்ராதிகளோடே பொருந்தி பத்தஸம்ஸாரிகளாய் அஹங்காரார்த்தகாம பரவஶராய்க்கொண்டு பாகவதாபசாராதிகளுக்கும் அஞ்சாதே ஒருவருக்கொருவர் ஸ்பர்த்தித்துக்கொண்டு ஶாஸ்த்ரவாதங்களாலே பிறரைத்தோற்பித்து,* [గురుంత్వఙ్కృత్యహుఙ్కృత్యవిప్రాన్నిర్జిత్యవాదతః - అరణ్యే నిర్జలేదేశే భవతి బ్రహ్మరాక్షసః] *(குரும்த்வங்க்ருத்ய ஹுங்க்ருத்யவிப்ராந் நிர்ஜித்ய வாததஃ - அரண்யே நிர்ஜலேதேஶே பவதிப்ரம்ஹராக்ஷஸஃ) என்கிற வர்த்தம் நெஞ்சில் கொள்ளாதே ராஜத்வாரங்களிலே கிடந்து*

அஸேவ்ய ஸேவாநிரதராய் (கொள்ளும்பயனில்லைக் குப்பைகிளர்த்தன்ன செல்வத்தை வள்ளல் புகழ்ந்து நும்வாய்மை இழக்கும் புலவீர்காள்) என்கிறபடியே புருஷாதமனாய் கதிபயக்ராமேஶனாய் அல்பார்த்தப்ரதனான க்ஷுத்ரமநுஷ்யனை அவனுடைய துர்க்குணங்களெல்லாம் வெளியிடும்படி நீயே ஸர்வோத்க்ருஷ்டனென்று ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு தேஹயாத்ராபரராய் திரிகிற ஆஸ்திக நாஸ்திகருக்கும் நெடுவாசியுண்டு. அஜ்ஞனானவனைத் திருத்தலாம் இவனைத் திருத்தவொண்ணாதிறே. [విదుషో౽తిక్రమే దణ్డభూయస్త్వమ్] (விதுஷோதிக்ரமே தண்டபூயஸ்த்வம்) என்று இவனுக்கு அபராதபாஹுள்யமுண்டு ஆகையாலே ஒருநாளும் ஆஸ்திக நாஸ்திகரோடே ஸஹவஸிக்கக்கூடாது, ஸஹவஸித்தால் (தீயகந்த முள்ளதொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்கு தீயகந்தமேறுந் திறமதுபோல்) என்கிறபடியே அவனுடைய துர்வாஸனை இவனுக்கு மேலிட்டு பத்தஸம்ஸாரியாய்விடும். இவ்வர்த்தம் பகவதபிப்ராய ஸித்தம். [మహత్సేవాం ద్వారమాహుర్విముక్తేః తమోద్వారం యోషితాం సఙ్గిసఙ్గమ్। మహాన్తస్తే సమచిత్తాః ప్రశాన్తాః విమన్యవస్సుహృదస్సాధవో యే। యే వా మయీశే కృతసౌహృదార్థాః జనేషు దేహమ్భరవార్తికేషు । గృహేషు జాయాత్మజరాతిమత్సు న ప్రీతియుక్తా యావదర్థాశ్చ లోకే] (மஹத்ஸேவாம் த்வாரமாஹுர்விமுக்தே: தமோத்வாரம் யோஷிதாம் ஸங்கிஸங்கம் - மஹாந்தஸ்தே ஸமசித்தா: ப்ரஶாந்தா விமந்யவஸ்ஸுஹ்ருதஸ்ஸாதவோயே-யே வாமயீஶே க்ருத ஸௌஹ்ருதார்த்தா: ஜநேஷு தேஹம்பரவார்த்திகேஷு-க்ருஹேஷு ஜாயாத்மஜ ராதிமத்ஸு நப்ரீதியுதா யாவதர்த்தாஶ்ச லோகே) என்று மஹாத்மாக்களுடைய ஸேவை முக்தித்வாரமாயிருக்கும், தாராபுத்ராதி ஸக்தரான ஸம்ஸாரிகளுடைய ஸஹவாஸம், அந்ததமோத்வாரமாயிருக்கும், மஹாத்மாக்களாரென்னில்? [సమశ్శత్రౌ చ మిత్రే చ తథా మానావమానయోః। శీతోష్ణసుఖదుఃఖేషు సమస్సఙ్గవివర్జితః। తుల్యనిన్దాస్తుతిర్మౌనీ సన్తుష్టో యేన కేనచిత్] ஸமஶ்ஶத்ரௌச மித்ரேச ததாமாநாவமாநயோ: - ஶீதோஷ்ண ஸுகதுக்கேஷு ஸமஸ்ஸங்கவிவர்ஜித: - துல்யநிந்தாஸ்துதிர்மௌநீ ஸந்துஷ்டோயேநகேநசித்) என்கிறபடியே சத்ருமித்ர மாநாவமாந ஶீதோஷ்ண ஸுகதுக்க லாபாலாப நிந்தாஸ்துதிகளில் ஸமசித்தராய் ப்ரஶாந்தராய் க்ரோதவிவர்ஜிதராய் ஸர்வபூதஸுஹ்ருத்துக்களாய் பரமஸாதுக்களாய் என்பக்கல் அத்யந்த ப்ரீதியுக்தராய் தார புத்ர க்ருஹக்ஷேத்ர தநதாந்யாதிகளில் விரக்தராய் யாத்ருச்சிகலாபஸந்துஷ்டராய் திரியுமவர்கள் இப்படிப்பட்ட மஹாத்மாக்களுடைய ஸஹவாஸம் முக்தித்வாரமென்று ஸர்வேஶ்வரன் தானே அருளிச்செய்தானிறே. (நா

த்திகரும் கற்கலேயின் நன்னெறிசேராத்திகரும், ஆத்திகநாத்திகருமா யிவரை-ஓர்த்துநெஞ்சே, முன்னவரும் பின்னவரும் மூர்க்கரெனவிட்டு நடுச் சொன்னவரை நாளுந்துடர்,) என்று ஶாஸ்த்ரஜ்ஞாநமின்றிக்கே நிஷித்தாநுஷ்டாநபரரான நாஸ்திகரையும் ஸாரதமஶாஸ்த்ர ப்ரதிபாத்ய ஸந்மார்க்கவர்த்திகளான ஆஸ்திகரையும் ஶாஸ்த்ரார்த்த வித்துக்களாயிருந்துவைத்து ஸ்வைரஸஞ்சாரிகளான ஆஸ்திக நாஸ்திகரையும் நன்றாக ஶோதித்து பூர்வோத்தரங்களில் சொன்ன மூர்க்கரைவிட்டு நடுவில்சொன்ன ஆஸ்திகரை அநுவர்த்திக்க வேணுமென்று அஸ்மதாசார்யரான பெரியஜீயரருளிச்செய்தாரிறே. ஆகையால் மோக்ஷார்த்தியானவன் ஸாரதமஶாஸ்த்ர மார்க்காநுஸாரிகளான பரமவிலக்ஷணரோடே ஸஹவாஸம்பண்ணி (க்ருதகோஶாதகீவத்) ஆசார்யபதமேறிட்டுக்கொண்டு தல்லக்ஷண மொன்றுமில்லாதே (முன்னோர் மொழிந்த முறைதப்பாமற் கேட்டு பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே - தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி இது சுத்தவுபதேஶ வரவாற்றதென்பர் மூர்க்கராவார்) என்று பூர்வாசார்யர்களருளிச்செய்த க்ரமம்தப்பாதபடிகேட்டு அநந்தரம் அவ்வர்த்தத்துக்கு பூர்வோத்தர விரோதம்வாராதபடி நன்றாக விசாரித்து அவிருத்தமான வர்த்தத்தைச் சொல்லாதே தன்னெஞ்சில் தோற்றின வர்த்தத்தையே சொல்லி அது சுத்தஸம்ப்ரதாயவார்த்தைக ளென்னுமவர்கள் மூர்க்கரென்று ஜீயரருளிச்செய்தபடியே உள்ளபடி நிரூபிக்கமாட்டாதே அறிந்த அம்சம் துஶ்ஶகமென்று பரித்யஜித்து ஓரிடத்தில் ஒரு பரமார்த்தம் சொன்னல் அதுக்கு ஶதஶஃ விபரீதார்த்தங்களை ஸங்கல்ப்பித்து ப்ராதிகூல்யங்களான தேஹாத்மாபிமாநாதிகளை பரித்யஜிக்கமாட்டாதே பத்தஸம்ஸாரிகளாய் ஸதாசார்ய கடாக்ஷமுண்டு நமக்கென்ன பயமென்று (மோஹாந்தரிவ்விட மேகாந்தமிருளென்று பயமற்றிருந்து செய்வார்கள் தாம்பாவத்திறம்) என்கிறபடியே மோஹாந்தராய் தாமும் பயமற்று தம்மை பற்றின ஶிஷ்யனுக்கும் பயங்கெடுத்து இருவரு முடன்கள்ளராய் உத்தேஶ்யரான மூவர்க்கும் அநிஷ்டமான நிஷித்தாநுஷ்டாநத்தாலே ஶிஷ்யனைக்கொன்று தானும் முடிந்துபோகிற விபரீதார்த்த போதகரை விஶ்வஸியாதே கீழ்ச் சொன்ன வாசார்யலக்ஷணலக்ஷிதரான ஸதாசார்யனை ஆஶ்ரயித்து நிர்ப்பரனாய் (தமர்களில்தலேவராய் சாதியந்தணர்களேலும்) என் கிறபடியே உத்க்ருஷ்டவர்ண ஸஞ்ஜாதருமாய் பாகவதாக்ரகண்யரென்னும்படி நாமரூபங்களை தரித்துக்கொண்டு ஶமதமஶாந்த்யாதி மஹாபாகவத லக்ஷணங்க ளொன்றுமின்றிக்கே நன்றாக கா

லேயும் கையையும் கழுவி பரியட்டங்களைப் பாங்காக வலம்பி இருவரையிலே ஸாவலங்கதமாகச் சாத்திக்கொண்டு த்வாதஶோர்த்வ புண்டரகங்களும் சாத்திக்கொண்டு திருமணிவடங்களும் திருப்பவித்ரங்களுந் தரித்து பவித்ரபாணிகளாய் அத்யயநாத்யாபநங்களை யுடையவராய் வேஶ்யாலங்காரங்கள்போலே ஸகலஜந மநோஹர வேஷதாரிகளாய்க் கொண்டு அஹங்கார மமகார க்ருஹ க்ஷேத்ர தார புத்ராதி ஸக்தராய் ராகத்வேஷ யுக்தராய் அர்த்தார்ஜந தத்பரராய் ஒருவருடைமையை ஒருவர் பரிக்ரஹித்துக்கொண்டு அஹங்காரார்த்தகாமங்களடியாக பாகவதாபசாரபரராய்த் திரிகிற பத்தஸம்ஸாரிகளைக்கண்டு அனுக பயப்பட்டு நாமரூபங்கள் உடையவராகையாலே அவமதிபண்ணவும் போகாதே அநுகூல ப்ரதிகூலங்க ளொன்றுமின்றிக்கே ஸத்த்வகுணமாக கிஞ்சித்கரித்து ஸவிநயராய் ப்ரணிபதநாதிகளாலே உகப்பித்து உள்கலந்து பரிமாறப் போகாதே கடக்கநின்று குலாலகீடவத் ப்ரவர்த்தித்து அர்த்தபஞ்சகதத்வஜ்ஞாநராய் ஆகாரத்ரயஸம்பந்நரான மஹாபாகவதரோடே கூடி, [బోధయన్తః పరస్పరం] (போதயந்தঃபரஸ்பரம்) என்கிறபடியே ஸ்வரூபவிருத்தக்ருத்யங்கள் வாராதபடி ஒருவர்க்கொருவர் போதகராய் இங்கிருக்கிற நாலுநாளும் குணாநுபவ கைங்கர்யங்களாலே போதுபோக்கிக்கொண்டு நிரஹங்காரராய் பாகவதாபசாரபீருக்களாய் திரியுமவர்கள் மோக்ஷாதிகாரிகளென்று அஸ்மதாசார்யோக்தம். ஆனால் ஆழ்வார்கள் ஆசார்யர்களிரண்டு மூன்று திருநாமமொழிய அனேகர் ஸம்ஸாரத்தில் புத்ரதாராதிகளோடே ப்ரவர்த்தித்து போந்தாரே யவர்கள் முக்தியோக்யரன்றோ வென்னில்? ஸ்ரீமந்நாதமுனிகள் தொடக்கமாக அஸ்மதாசார்யர்களவும் எல்லாரும் ஸந்யஸ்தரே யென்று நினைக்கவேணும். அதுவென்னென்னில்? [నివృత్తరాగస్యగృహంతపోవనం-ప్రవసితఇవగేహేవర్తతేయస్సముక్తః] (நிவ்ருத்தராகஸ்யக்ருஹம்தபோவநம் - ப்ரவஸிதஇவகேஹே வர்த்ததேயஸ்ஸமுக்தঃ)என்றுஞ் சொல்லுகிறபடியே நிவ்ருத்தராகராய் அஹங்கார மமகார ஶூந்யராய் ஶமதமாத்யாத்மகுணோபேதராய் ஸர்வபூததயாபரராய் ஶத்ருமித்ரஸமராய் அர்த்தகாமநிரபேக்ஷராய் உஞ்சவ்ருத்திவிலாதி ஸாதுஜீவநராய் ஆசார்யப்ரீதி நிபந்தநமாகவும் ஆந்ருஶம்ஸ்யத்தாலுமாகவும் - ஒருவரிருவர் ஸந்தாநத்தளவும் போக்யதாதர்மபுத்திகளைவிட்டு ஸ்வதாரவிஷயத்தில் நாலுநாள்வர்த்தித்துவிஹிதவிஷயத்யாகம் பண்ணுவாரும் ஸந்யஸிப்பாருமாய் ஸ்காலித்யங்களில் தம்மை ஶிக்ஷிக்கவல்ல ஜ்ஞாநாதிகையானவளானால் பரஸ்பரம் விஷயவிரக்தராய் ஆழ்வானும் ஆண்டாளும்போலே குணாநுபவகைங்கர்ய

நிரதராய்ப் போருகிறதொழிய நித்யஸம்ஸாரிகளாய், [అహం మమేతి చ ణ్డాళః] (அஹம்மமேதிசண்டாளஃ) என்கிறபடியே கர்மசண்டாளனு ம்படி பண்ணுமதாய் [నరహరితనోర్దాసదాసస్య దాసః] (நரஹரிதநோர் தாஸதாஸஸ்யதாஸஃ) என்று ததீயசேஷத்வைக நிரூபணீயமான ஆத்மஸ்வரூபத்தையறியாதபடி பண்ணுகிற, [విద్యామదో ధనమదః తృ తీయో ఽభిజనో మదః] (வித்யாமதோ தநமத: த்ருதீயோ பிஜநோமத:) என்று அஹங்கார மதிராபாநமத்தராய் யாதவபலம்போலே ஒருவர்க் கொருவர் பாதகராய் பத்து பன்னிரண்டு ஸந்தாநம்பிறந்து அதிஹே யாஸ்பதமாய் தேஹஸவர்த்தகியாய் ஸ்வரூபவிரோதியாயிருக்கிற தாரை யையும் ஸம்ஸாரவர்த்தகராய் ஸ்வரூபத்துக்கு அத்யந்தம் ப்ரதிகூ லரான புத்ரர்களையும் அநுவர்த்தித்துக்கொண்டு அத்யந்தபாரதந்த்ரரா ய் அத்யந்தாநுரக்தசித்தராய் தேஹாவஸாநத்தளவும் விடமாட்டா தே ஸ்வரூபவிரோதிகளென்கிற வநுதாபமுமன்றிக்கே ஸ்வரூபயாதா த்ம்ய தர்சிகளான சிஷ்டர்கள் கர்ஹிப்பர்களென்கிற லஜ்ஜைகளெ ல்லாம் விட்டு தன்னைபற்றவேணுமென்றிருக்கிற ஸர்வேச்வரனுக்கு அநபிமதமான இந்த ஸாம்ஸாரிக துஷ்கர்ம ப்ரவ்ருத்தி யென்செய்யா நின்றதோ என்கிறபயத்தையும் விட்டு விஷசஸ்த்ராக்நிகளும் ததீ யங்களேயாய் ஸகலசேதநாசேதநங்களெல்லாம் ததீயமேயாய் விசே ஷித்து நாட்டிலுள்ள பாகவதரெல்லாரும் ததீயரேயாயிருக்க ஒரு ப்ரபந்நனை போஷிக்கைக்கும் சக்தனன்றிக்கே தார புத்ராதிகளு ம் ததீயங்களன்றோவென்று விபரீதபுத்தியைப்பண்ணி அஹங்கார விஷயப்ராவண்யங்களுக்கும் விளைநிலமான (தன்னைக் கண்டால் சத் ருவைக்கண்டாபோலேயும் ததநுபந்திகளைக் கண்டால் ஸர்ப்பாக்நி களைக்கண்டாப்போலேயும்) பயப்பட்டிருக்கை ப்ராப்தமாயிருக்க அ துசெய்யாதே தத்ரக்ஷணார்த்தமாக ராஜத்வாரங்களிலே பலகாலும் வருவதும்போவதுமாய் அஸேவ்யஸேவைபண்ணி பிறருடைமை அ பஹரித்து அயோக்யரையாசிப்பதும் அநதிகாரிசிஷ்யாபிமாநதூஷி த த்ரவ்யத்தை பரிக்ரஹிப்பதும் செய்யாநின்றுகொண்டு திரிகிறார்க ளில்லையே. ஆகையாலே பூர்வர்களை த்ருஷ்டாந்தமாகச்சொல்லி நா மும் ஸம்ஸரித்தால் குறையென்னென்றிருந்தால், [నశ్యేత్యచ్చరన్మౌఢ్యాత్ యథారుద్రోఽబ్ధిజం విషం] (நச்யேத்யச்சரந்மௌட்யாத் யதாருத்ரோப்தி ஜம்விஷம்) என்று ருத்ரன் காலகூட விஷம் பக்ஷித்தானென்று ஒரு க்ஷுத்ரன் பக்ஷித்தானாகில் நசித்துப்போமாப்போலே ஸ்வரூபநா சம் தப்பாது. அதுவென் தார புத்ராதிகளை மதீயமென்னில் ஸ் வரூபநாசமித்தனையொழிய ததீயப்ரதிபத்திபிறந்தால் அநுவர்த்திக்க

லாக்ரோவென்னில் [तदुपकरणं वैष्णवमिदं] (ததுபகரணம் வைஷ்ணவமிதம்) என்று எல்லாத்திலும் ததீயத்வபுத்தி பண்ணவேணுமென்றது ஒருவஸ்துவும் தனக்கும் பிறர்க்கும் சேஷமாயிருப்பதில்லை, அவனுக்கே சேஷமென்று ஸ்வசேஷத்வ அந்யசேஷத்வ நிவ்ருத்திக்காகச் சொல்லுகிறதித்தனையொழிய ஸ்வரூபவிரோதிகளுக்கு எல்லைநிலமான தன் சரீரத்தையும் தநுபந்திகளான பார்யாபுத்ராதிகளையும் அநுவர்த்திக்கவேணுமென்று ஒரு ரஹஸ்யத்திலேயும் சொல்லிற்றில்லையே. அப்படிசொல்லுமன்று (நரகும் சுவர்க்கமுமாய்) என்று அஷ்டாவிம்சதி மஹாநரகங்களும் ததீயமேயாகையாலே அவையும் அநுபாவ்யமாய் வருமாகையாலே அது விபரீதஜ்ஞாநகார்யம். எல்லாம் அவனது என்று ப்ரதிபத்திமாத்ரம் அபேக்ஷிதம். எல்லாம் ததீயத்வாகாரேண அநுபவிக்கைக்கு நம்மாழ்வாருக்கு மேல்பட்டாரில்லையிறே. ஆழ்வார் தாம்பிராட்டிபுருஷகாரமாக சரணவரணம்பண்ணிபின்பு தம்மைச் சேர்த்துக்கொள்ளாதபடியைக்கண்டு நமக்காத்மாத்மீயங்களில் ஏதேனுமொன்றில் நசையுண்டாகநினைத்து ஸ்வப்ராப்த்தியைக் கொடாதிருக்கிறானென்று நிச்சயித்து (இடையில்லை யான்வளர்த்த கிளிகாள் பூவைகள்காள் குயில்காள் மயில்காள்) என்று துடங்கி நான் வளர்த்த கிளிதுடக்கமான பக்ஷிகாள் நெஞ்சுதுடக்கமான நமக்குள்ளவையெல்லாம் தான்கொண்டு பரமபதம் முதலான ப்ராப்யஸ்தலங்களிலே உங்களிடத்தி லாசாபாசங்களை ருசிவாஸனைகளோடே விட்டபின்பொழியக் காணவுமொட்டாதிருக்கிறான் ஆகையாலே இன்றுதுடங்கி உமக்கும் நமக்கும் பணியில்லையென்று தம்முடைய ஆத்மாத்மீயங்களி லாசை பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமென்று நைராச்யத்தை யருளிச்செய்கையாலே அவையுந் ததீயங்களேயென்று மோஹங்கதராயிருக்கவிரகில்லை. (மடக்கிளியைக் கைகூப்பிவணங்கினாள்)என்று ஜ்ஞாநாதிகரானல் அநுவர்த்திக்கக் குறையில்லையேயென்ன விஷயப்ரவணையான பெண்டாட்டியும் ஸ்வகார்யபரரான புத்ரர்களும் இவன் வீதராகனுப்நின்றான் நாம் ப்ரதிகூலமாகவர்த்தித்தால் விட்டுப்போம் இவனை வஞ்சிக்கவேணுமென்று [महासाहसिकः कङ्कः] (மஹாஸாஹஸிக் கஙகஞ்சுகவஞ்சிதாங்யா) என்கிற குலிங்கசகுநியைப்போலே (தொழுத்தையோம்தொண்டரோம்)என்று வஞ்சகராய் தாழ்ச்சியாக ஒருவார்த்தைசொன்னலத்தைக்கேட்டு ப்ரமித்து சிஷ்யபுத்ரர்களாகிலும் ஜ்ஞாநாதிகர் ததீயத்வேந அநுவர்த்தநீயரென்று அருளிச்செய்தாரே இவரைக்கூட்டிக்கொள்ளக் குறையென்னென்று அவர்களுக்கு இஷ்டவிநியோகார்ஹனாய் வி

ஷயப்ரவணனாய் பத்தாநுராகத்தாலே திரிந்தால் பூர்வஸித்தஸம்ஸாரபந்தம் மேலிட்டு ப்ரஷ்டனாய்ப்போம். ஆகையாலே (சுதிரிளமடவார் தாழ்ச்சியை மதியாது) என்கிறபடியே அப்படிப்பட்ட வஞ்சகரைக் கூட்டிக்கொள்ளப் போகாதிறே. அவர்களானாலும் [ఆహ్లాదశీతనేత్రాంబుః పులకీకృతగాత్రవాః] (ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புளகீக்ருதகாத்ரவாங்களாய்) ஜ்ஞாநாநுஷ்டாநங்களை வடிவிலேதொடைகொள்ளலாம்படி பரமவிரக்தராய் பகவத்த்யந்தப்ரவணராய் த்யாஜ்யோபாதேயத்யாக ஸ்வீகாரங்களையுடையராய் பட்டரைப்போலே ப்ரவர்த்திக்குமவரானால் நாட்டிலுள்ள ஜ்ஞாநாதிகரெல்லாரையும் ப்ரதிபத்திபண்ணுமாப்போலே விசேஷப்ரதிபத்திபண்ணுமதொழிய ப்ரேமாந்தனாய்விஷயப்ரவணனாய் அவர்களோடே ஸம்ஸரிக்கக்கூடாதிறே. அதுவென்(வீடுமின்முற்றவு)மென்று த்யாகத்தைச்சொல்லி த்யாகப்ரகாரத்தை அருளிச்செய்யுமிடத்தில் (நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்து) என்று(அஹம்மம)என்கிற அபிஸந்திகுலைந்து அவனதென்கிற ப்ரதிபத்திமாத்ரமே போரும், ஸவாஸநமாகவிட்டுப்போன பரதஸௌபரி ப்ரப்ருதிகளுக்கும் பின்னை ஸம்ஸாரம்மேலிடுகையாலே த்யாஜ்யமென்கிற புத்திவிசேஷமே த்யாகமென்றருளிச்செய்தாரிறே. அதுபோராதோவென்னில்? அதுக்கர்த்தம் நன்றாகத்தெளிந்தா லதுவேபோரும். (வீடுமின்முற்றவும்) என்று சண்டாளவாடிகையை ப்ராஹ்மணர்க்காக்கும்போது சிலகழித்துச் சிலகூட்டிக்கொள்ளவொண்ணாதாப்போலே எல்லாம் விடச்சொன்னால் வேணுமாகில் மமகாரதூஷிதங்களான தாரபுத்ரக்ருஹக்ஷேத்ராதிகளை விடலாம் திலதைலவத் துர்விவேசமான தேஹத்தைவிடும்படி யென்னென்ன, காயிகமாக த்யஜிக்குமது த்யாகமாகமாட்டாது. தேஹத்தி லாத்மபுத்தியும் தததுபந்திகளில் மமதாபுத்தியுமே நன்றாக த்யஜிக்கவேணும் [కర్మేన్ద్రియాణి సంయమ్య య ఆస్తే మనసా స్మరన్। ఇన్ద్రియార్థాన్విమూఢాత్మా మిథ్యాచారస్స ఉచ్యతే] (கர்மேந்த்ரியாணிஸம்யம்ய யஆஸ்தேமநஸாஸ்மரந்-இந்த்ரியார்த்தாந்விமூடாத்மா மித்யாசாரஸ்ஸ உச்யதே) என்கிறபடியே பாஹ்யவிஷயங்களிலே கர்மேந்த்ரியங்களை போகாதபடி நியமித்துக்கொண்டு நெஞ்சிலே நினைக்குமவன் மித்யாசாரனென்று சொல்லப்படுமவனாகையாலே அம்மாத்ரம்போராது அவஸ்யம் புத்தித்யாகமே வேணும். காயிகமாக வெல்லாம்விட்டுப்போன ஸௌபரிபரதாதிகளுக்கு மனஸ்ஸங்கமுண்டாய் பந்தம்வருகையாலே பஹிஸ்த்யாகம் பரித்யாகமாகாதென்று [మన ఏవ మనుష్యాణాం కారణం బన్ధమోక్షయోః] (மநஏவமநுஷ்யாணாம் காரணம்பந்தமோக்ஷயோ:) என்கிறபடியே காயிகமாக த்யஜிக்குமதிலும் புத்தித்யாகத்தினுடைய ப்ராதா

க்யம் சொல்லுகிறதித்தனையொழிய த்யாஜ்யங்களென்றறிந்தே போருமென்று பந்தஸம்ஸாரியாய் விஷயப்ரவணனாய் திரியப்போகாதிறே. த்யாஜ்யங்களென்றறிந்ததுக்கு பலம் தத்ப்ரதிபத்தியுண்டாகவேணுமிறே. ப்ரதிபத்தியாவது ஸ்வரூபநாஶகங்களான அஹங்கார விஷயப்ராவண்ய பாகவதாபசாராதிகளுக்கு விளைநிலம் தேகவிஶிஷ்டனானாகையாலே தன்னைக்கண்டால் இறுக்கின கச்சையும் முறுக்கின மீசையும் சுழன்ற கண்களும் தாழ்த்திக்கட்டின தொப்பாரமும் அழுத்திப்பிடித்த கத்தியும் கையுமாய் கொல்லவந்த சத்ருவைக்கண்டாப்போலே பயப்பட்டு நிவர்த்திப்பித்து ரக்ஷிக்குமவனாகையாலும் தனக்கு ஶக்திப்ராப்திகளிரண்டு மில்லாமையாலும் அவனையே காலகட்டிக்கொண்டு (பணிகண்டாய்சாமாறே) என்றும் (உன்னடிக்கே கூய்ப் பணிகொள்ளே) என்றும் (கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ) என்றும் (அடியேனடிகூடுவதென்றுகொலோ) என்றும் [కృతకృత్యాః ప్రతీక్షన్తే మృత్యుం ప్రియమివాతిథిం] (க்ருதக்ருத்யா:ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும்ப்ரியமிவாதிதிம்) என்று சொன்னாப்போலே இதினுடைய நிவ்ருத்தியை ப்ரார்த்தித்துக்கொண்டு இதின் ம்ருத்யுவை ப்ரதீக்ஷித்திருக்கையும் தேஹஸம்பந்திகளான தாரபுத்ராதிகளைக்கண்டால் [దేహబన్ధుసమాజో౽యం ముముక్షోస్సంసృతావిహ। వైదేహ్యా ఇవ లఙ్కాయాం ఏకకర్ణ్యాదిసఙ్గమః] (தேஹபந்துஸமாஜோயம் முமுக்ஷோஸ்ஸம்ஸ்ருதாவிஹ - வைதேஹ்யாஇவலங்காயாம் ஏககர்ண்யாதிஸங்கம:) என்று இந்தஸம்ஸாரத்திலே முமுக்ஷுவுக்கு தேஹபந்துஸமாஜம் லங்கையில் பிராட்டிக்கு ஏககர்ண்யாதி ராக்ஷஸஸ்த்ரீ ஸஹவாஸம்போலே து:க்ககரமென்கையாலே துஸ்ஸஹமாய்தோற்றி [రాక్షసానాం వధం కృత్వా సూదయిత్వా చ రావణం। లఙ్కామున్మూలితాం కృత్వా కదా ద్రక్ష్యతి మాం పతిః] (ராக்ஷஸானாம்வதம்க்ருத்வா ஸூதயித்வாசராவணம் - லங்காமுந்மூலிதாம்க்ருத்வா கதாத்ரக்ஷ்யதிமாம்பதி:) என்று பிராட்டியைப்போலே ப்ரார்த்தித்துக்கொண்டு காலநிரீக்ஷணம் பண்ணுகையும் இவையெல்லாம் நினைத்திறே(வேர்முதல்மாய்த்து)என்று கீழ்வேரோடே மூலச்சேதமாம்படி பரித்யஜிக்கவேணுமென்று அருளிச்செய்தருளிற்று. அஹங்காரம் தேஹாத்மாபிமானரூபமாயும்-ஸ்வஸ்வாதந்த்ர்யரூபமாயும்-த்விவிதம்.தேஹாத்மாபிமானம் பண்ணினால் ப்ரச்சந்ந பௌத்தனாய் ஸம்ஸாரிகளிலும் நிக்ருஷ்டதமனாய்ப்போம்.ஸ்வதந்த்ரனென்று நினைத்தானாகில் பகவத்ரவ்யமான தன்னை அபஹரித்தவனாய்[కిం తేన న కృతం పాపం చోరేణాత్మాపహారిణా] (கிம்தேந நக்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா) என்கிறபடியே ஸீதாபஹரணம்பண்ணின ராவணனைப்போலே நஶிக்கும்.

இப்படிப்பட்ட அஹங்கார மமகாரங்களின் க்ரௌர்யத்தையறியாதே த்யாஜ்யமென்றறிகையே போருமென்று தைலக்ருதாதிகளாலே மாம்ஸளமாம்படி ஶரீரத்தைப் பெருக்கப்பண்ணி மைத்தெழுந்த கனத்த பிசல்களும் நெடிதாய் வலிய ஶரீரங்களுமாய் விஷயப்ரவணராய்த் திரிகிறவர்கள் நித்யஸம்ஸாரிகளாய்ப் போவர்கள். ஆனவிக்காலத்தில் ஜ்ஞாநாதிகராலும் விஷயாஸக்தசித்தராய் அர்த்தார்ஜந தத்பரராய் ஸம்ஸாரத்திலே பொருந்தி வர்த்தியாநின்றார்களே அவர்கள் ஜ்ஞாநாதிகர்களன்றோ இது விருத்தமானால் ஏதுக்காக ப்ரவர்த்தியாநின்றார்களென்னில்? அது பகவந் மாயாப்ரபாவம் (துயக்கறுமதியில் நல்ஞானத்துள் அமரரைத்துயக்கும் -மயக்குடைமாயைகள் வானிலும் பெரியன வல்லன்) என்றும் (உன்மாயங்கள் மேலை வானவருமறியார்) என்றும் (இன்னமுமெனைத்தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க நீவைத்த முன்னமாயம்) என்றும் (அகற்றநீவைத்த மாயவல்லைம்புலன்கள்) என்றும் சொல்லுகிறபடியே எப்படிப்பட்ட ஜ்ஞாநாதிகராலும் [अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते] (அநந்யாஶ்சிந்தயந்தோமாம் யேஜநாஃபர்யுபாஸதே) என்றும் [धर्म्यादनन्यमार्गस्थः] (பக்த்யாத் வநந்யயாஶக்யஃ)என்றும் அநந்யயோகாஸஹமான தன் ஸ்வரூபத்தை யறிந்துவைத்தும் அபரமாத்ம வைராக்யமில்லாதவனாய் விஷயாஸக்தசித்தனானால் ஸர்வேஶ்வரன் தன்னையகற்றவேணுமென்று நினைத்து நித்யஸூரிகளையும் மோஹிப்பிக்கவல்ல மாயாஶக்தியாலே துர்விஷயங்களில் அத்யந்த ப்ரவணராம்படி பண்ணுவித்து தன்மூலமாக தாரபுத்ராதி ஸக்தராய் தத்ரக்ஷணார்த்தமாக அர்த்தார்ஜந தத்பரராய் தந்மூலமாக அஸேவ்ய ஸேவைதன்னில் நிரதராய் தந்மூலமாக ராகத்வேஷயுக்தராய் தந்மூலமாக பூதத்ரோஹிகளாய் அன்றைக்கன்று அஜ்ஞாநவர்த்தகமாய் புத்திநாசம்பிறந்து [सङ्गात्सञ्जायते कामः](ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமஃ) என்றுதுடங்கி [बुद्धिनाशात्प्रणश्यति](புத்திநாஶாத் ப்ரணஶ்யதி) என்கிறபடியே விநாசத்தை யடைந்துபோவர்கள். ஆகையாலே அஸ்க்கலித ஜ்ஞாநரான நித்யஸூரிகளையும் மோஹிக்கப்பண்ணுகிற பகவந்மாயாப்ரபாவ மித்தனையொழிய அவர்கள் தோஷமன்று இந்த ஸாம்ஸாரிக துஷ்கர்மம் ப்ரக்ருதிதோஷம் அவர்மேலே ஆரோபித்து அவமதிபண்ணினானாகில் இவனுக்கதுவும் அநர்த்தஹேதுவாம். அநுஷ்டானஹீநமான ஜ்ஞாநாதிக்யத்தைக்கொண்டு [धर्मज्ञसमयः प्रमाणम्] (தர்மஜ்ஞஸமயஃ ப்ரமாணம்) என்று ஶிஷ்டாசாரம் ப்ரமாணமென்றும் [यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः] (யத்யதாசரதி ஶ்ரேஷ்டஃ தத்ததேவேதரோஜநாஃ) என்று ஶிஷ்டாசாரமே ப்ரமாணமா

கச் சொல்லப்பட்டதிறே என்று துர்வாஸஸையாலே கேழ்ப்பார் செவிபுதைக்கும்படியான விபரீதார்த்தங்களைச் சொல்லுகிற ஜ்ஞாநலவதுர்விதக்தரை தர்மஜ்ஞராகக்கொண்டு மாயாமோஹிதராய் அவராசரிக்கிற ஸாம்ஸாரிகநிஷித்தக்ருத்யங்களை ஶிஷ்டாசாரங்களாக புத்திபண்ணி [ శిష్టాచారానుసంధానం ప్రవర్తంతే ] (ஶிஷ்டாசாராநுஸந்தாநம் ப்ரவர்த்தந்தே) என்றுப்போலே தானுசரித்தானுகிலும்விநாஶமேபலிக்கும். ஆகையாலே ததநுஷ்டாநாவமாநாங்கீகாரங்க ளிரண்டுங் கூடாது [ యాన్యనవద్యాని కర్మాణి తాని సేవితవ్యాని నో ఇతరాణి । యాన్యస్మాకం సుచరితాని తాని త్వయోపాస్యాని ] (யாந்யநவத்யாநி கர்மாணி தாநி ஸேவிதவ்யாநி நோ இதராணி - யாந்யஸ்மாகம் ஸுசரிதாநி - தாநி த்வயோபாஸ்யாநி) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸாரதம ஶாஸ்த்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நரான மஹாத்மாக்கள் மேலெழச்சொல்லுகையன்றிக்கே சேதநருடைய ஹிதத்தைப்பார்த்து நன்றாக வருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளிலும் ஸ்வபரவிநாஶம் வாராதபடி குறிக்கொண்டு வர்த்திக்கிற ஸதநுஷ்டாநங்களுமே பரிஶீலித்துக்கொண்டு ஸிலஹாரியானவன் அதிதையே தேடிக்கொள்ளுமாப்போலே ப்ரமப்ரமாதாதிகளாலே சொல்லுகிற வாக்யங்களையும் திருமேனிஸ்வபாவத்தாலே செய்கிற வ்யாபாரங்களையும் விட்டு ஸதாசரிதங்களை ஆசரிக்கவேணுமென்று சொல்லாநின்றதிறே. பாகவதரையும் மாயை மோகிக்கப்பண்ணுமோவென்னில்? "ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் அஸ்கலிதப்ரஹ்மசாரியாய் கைங்கர்யநிரதரா யிருந்து வைத்தும் தேவதேவி யென்பாளொரு வேஶ்யையைக்கண்டு மோஹிதராய் பின்தொடர்ந்து ப்ராப்தவிஷயகைங்கர்யத்தைப் போகட்டு அத்யந்தப்ரவணராய் ஸகலதுக்கங்களையும் அநுபவித்தாரிறே." "பெரியதிருவடி ஸுமுகன் நிமித்தமாக எம்பெருமானோடே எதிரிட்டானிறே." மாயாப்ரபாவமிதுவேயிறே. ஸதாசார்யனபிமாநத்திலே பாதச்சாயைபோலே பிரியாதே வர்த்திக்கப்பெறில் அவன் லீலையிலே விநியோகங்கொள்ளுகைக்கு இடமறும்படி பண்ணுவனென்று ததபிமாநத்தையபேக்ஷிக்கிறது. ஸ்வாபிமாநத்திலே யொதுங்கினரையும் அவன் லீலையிலே விநியோகங்கொள்ளுமோவென்னில்? ஸகலேதரநிஸ்ப்ருஹராய் நிரஹங்காரராய் பரமார்த்தரானுலொழிய ப்ராக்ருத வஸ்துக்களிலே ருசியுடையரானாலும் தாம் உத்க்ருஷ்டரென்கிற வபிமாநமுடையரானாலும் தேஹத்திலும் தேஹஸம்பந்திகளிலும் பொருந்தியிருந்தாலும் நாலுநாள் லீலையிலே விநியோகங்கொள்ளுகைக்குக் குறையில்லை.(தெளிவுற்று வீவின்றி நின்றவர்க் கின்பக் கதிசெய்யும் - தீர்ந்த வடியவர் தம்

மைத் திருத்திப்பணி கொள்ளவல்ல) என்றும் அர்த்தபஞ்சகமுள்ளபடி தெளிந்து தெளிந்தபடி நின்ற அநந்யப்ரயோஜநரான ஶேஷபூதரையாய்த்து ஸ்வப்ராப்தியோக்யராம்படி திருத்தி நித்யகைங்கர்யம் கொண்டருளுவதென்று ஆழ்வாரருளிச்செய்தாரிறே. "நாம் பகவத்க்ருஹ த்வாரபாலநம் பண்ணுகிறோமென்கிற அஹங்காரமுடைய ஜயவிஜயர்களை முனிஶாப வ்யாஜத்தாலே ராக்ஷஸயோநிகளிலே தள்ளிவிட்டானிறே." "இந்த்ரத்யும்நனென்கிற ராஜா ஸர்வேஶ்வரன் தன்னையே த்யாநம்பண்ணிக்கொண்டிருந்து தன்னோடொத்த பக்திநிஷ்டனில்லையென்று நெஞ்சிலே யவனுக்குத் தோற்றினவாறே அகஸ்த்யஶாப வ்யாஜத்தாலே குஞ்ஜரயோநியிலே ஶிலகாலம்தள்ளிவிட்டு (பொய்கைமுதலைச் சிறைபட்டுநின்ற கைம்மாவுக்கருள்செய்த) என்று பொய்கையிலே மகரக்ரஸ்தனாய் களிப்பாறி (த்ராஹி த்ராஹீதி) கோஷத்தாலே ஸ்தோத்ரம்பண்ண அரைகுலையத் தலைகுலையவந்து [భగవత స్స్వరాత్మనః] (பகவதஸ்த்வராயைநமஃ) என்று ஜ்ஞாநாதிகளீடுபடும்படிவந்து ரக்ஷித்தானிறே." ஆகையாலே அஹங்கார விஷயப்ராவண்ய பாகவதாபசாராதிகளில் அந்வயமுண்டானால் ஜ்ஞாநபக்திகளிருந்தாலும் வ்யர்த்தமாய் லீலைக்கர்ஹராவர்கள். அவர்களிலும் பக்த்யதிஶயமுள்ளவரானால் சிலகாலம் லீலையிலே களிப்பாறும்படிபண்ணி பின்னையநுக்ரஹிக்கும். ஶுஷ்கஜ்ஞாந வைராக்யங்களேயானால் [పద్మకోటిశతేనాపి న క్షమామి] (பத்மகோடிஶதேநாபி நக்ஷமாமி) என்கிறபடியே யாவத்காலமும் லீலார்ஹனாய் நித்யஸம்ஸாரியாய்ப்போம். ஆகையாலே நாம் பகவதபிமாநாந்தர்ப்பூதரல்லோமோ நமக்கு பயமென்னென்று இறுமாந்திருந்து அஹங்கார விஷயப்ராவண்ய பாகவதாபசாராதிகளிலே அந்வயிக்கக்கூடாது. பத்தஸம்ஸாரிகளாயிருக்கவுங்கூடாது. "பூர்வகாலத்திலே ஜம்பாதிராக்ஷஸர் தனக்கு பக்தராயிருந்தும் பரத்ரோஹிகளானவாறே அவர்கள் தன்னையகன்றுபோம்படி மோஹஶாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்து விபரீதார்த்தநிஷ்டராம்படி பண்ணி பொகட்டானிறே. அப்படியே ஶாக்ருதவிஶேஷத்தாலே வைஷ்ணவக்ருஹங்களிலே பிறந்துவைத்தும் ஆஸுரப்ரக்ருதிகளாய் பூதத்ரோஹிகளாய் அர்த்தகாம நிமித்தமாக பாகவதாபசாரபரரானால் விபரீதஜ்ஞானத்தைப் பிறப்பித்து ஸகலஶப்தங்களுக்கும் விபரீதார்த்தங்களை தோன்றுவித்து நிஷித்தாநுஷ்டாநரதராம்படி பண்ணி தனக்கசலாம்படிபொகடும். அவன் புறம்போக்கிவிடுகைக்கு ஹேதுக்கள் மூன்றிறே. (மற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு) என்றும் (நெறிகாட்டிநீக்குதியோ) என்றும் (அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவை) என்றும் (பலநீகாட்டிப்படுப்பாயோ) என்றும்

சொல்லுகிற தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தரங்களிலே ப்ராவண்யம் தன்பக்கல் நின்றும் பிரிந்துபோகைக்கு (வைத்தமாயங்கள்) என்று ஆழ்வாரருளிச்செய்தாரிறே. இவை மூன்றும் தனித்தனியே அவன் விடுகைக்குடலாயிருந்தாலும் ஒன்றுக்கொன்று க்ரூரமாயிருக்கும். இவ்வர்த்தம் அவர் பாசுரங்களிலே தோன்றும். (போற்றிமற்றோர் தெவம் பேணப்புறத்திட்டு) என்கையாலே தேவதாந்தர ஸ்பர்சம் புறத்திட்டமாத்ரமாய் (நெறிகாட்டி நீக்குதியோ) என்று உபாயாந்தரங்களில் தள்ளிப்பொகடுகையாய்(பலகீகாட்டிப் படுப்பாயோ)என்றும் (இன்னங்கெடுப்பாயோ) என்றும் விஷயாந்தர ஸ்பர்சம் ஸ்வரூபநாசமாம்படி பண்ணிவிடுகையென்று நிஸ்ஸம்சயமாக வருளிச்செய்தாரிறே. இப்படி ஸ்வரூபநாசகமான விஷயாந்தரமிறே தாரபுத்ராதி ஸங்கம். லோகத்திலே ஒரு க்ஷுத்ரமநுஷ்யன் அபிமாநத்திலொதுங்கினவள் மற்றொருவரிடத்தில் ஸாகையாலுல் சித்ரவதம்பண்ணிப் போராநிற்க, ஸர்வஸ்வாமியாய் ஸகலேதரவிலக்ஷணனாய் பரமபோக்யபூதனாய் ஸர்வசக்தியான ஸர்வேச்வரனையாச்ரயித்து ததபிமாநத்திலே ஒதுங்கி ஆகாரஷட்கத்தாலே பிராட்டியோடொத்தஇச்சேதநன் மாயாமோஹிதனாய்க்கொண்டு அவனையும் தாரபுத்ராதிகளையும் தன்னுடைய ராகத்துக்கு விஷயமாக்கினால் ராஜஹார்யை அச்வமேராதகனிடத்தில் கண்வைத்தால் சித்ரவதம்பண்ணுமாப்போலே நிக்ரஹித்துப்பொகடுமதொழிய ஸ்வபோகத்தில் கூட்டிக்கொள்ளானிறே. அவனுக்கிப்படி அப்ராப்தவிஷயஸங்கம் அத்யந்த துஸ்ஸஹமென்று அறிந்தவராகையாலே (வீடுமின்முற்றவும்)என்றும்(நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்து)என்றும் (பற்றிலையாயவன்முற்றிலடங்கெ)என்றும் (உள்ளமுரைசெய லுள்ளவிம்மூன்றையு முள்ளிக்கெடுத்திறை யுள்ளிலொடுங்கே) என்றும் பாஹ்யவிஷய ஸவாஸநத்யாகத்தை விதிக்கிறாரிறே. அவரைப் பின்சென்ற வாசார்யர்களும், [పితరమ్మాతరందారా౯ పుత్రా౯ బన్ధూ౯] (பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந்) என்று தொடங்கி ஸகலேதரபரித்யாகபூர்வகமான ஸ்வீகாரத்தை யருளிச்செய்தாரிறே. ஆகையாலே நாமரூபங்களாலும் [సర్వధర్మాంశ్చ సన్త్యజ్యసర్వకామాంశ్చసాక్షరా౯ । లోకవిక్రాన్తచరణౌ శరణంతేవ్రజంవిభో] (ஸர்வதர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்சஸாக்ஷராந் - லோகவிக்ராந்தசரணௌ சரணம்தே வரஜம்விபோ) என்று இதில் சொன்னவர்த்தத்தை அநுஷ்டியாதே மித்யாவசநகள் சொல்லுகிற நைச்யோக்திகளாலும் ப்ரயோஜநமில்லை. ஆனல் [భూయిష్ఠాంతేనమ ఉక్తింవిధేమ] (பூயிஷ்டாந்தேநம உக்திம்விதேம) என்றும் [త్వదఙ్ఘ్రిముద్దిశ్యకదాపికేనచిత్ -యథాతథావాపిసకృత్కృతో...]

ஞ்ஜலி: - அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ] (த்வதங்க்ரிமுத்திஶ்ய கதாபி கேநசித் யதா ததா வாபி ஸக்ருத்க்ருதோஞ்ஜலி: - அஞ்ஜலிஃபரமாமுத்ரா க்ஷிப்ரம்தேவப்ரஸாதிநீ) என்றும் (எழுதுமென்னும் இதுமிகை) என்றும் அபியுக்தரும் அவன்தானும் ஆழ்வார்களும் அஞ்ஜலிமாத்ரமேபோருமென்றும் அதுவும்மிகையென்றும் பரிகணநவேளையிலே ஒன்றுஇரண்டென்றுதுடங்கி இருபத்தாறென்றால் இருபத்தாறுமவன் நானே என்று வருவனென்றும் அத்யந்த ஸுலபமாகச்சொல்லுகிறதென்னென்னில்? ஆஶ்ரயணோந்முக சேதநன் ஸ்வதோஷத்தையும் ஆகிஞ்சந்யத்தையும்கண்டு ஐயப்பட்டு மீளாதபடி ஶரண்யப்ரபாவஞ்சொல்லுகிறதித்தனை.ஶரணாகதரக்ஷணம் சொல்லுகிறவளவில் சொல்லுகிறவார்த்தைகளன்று. ஸ்வஶேஷத்வாந்யஶேஷத்வங்கள் நிவர்த்தமாய் பகவத்விஷயத்திலே கைவைத்தால் பின்னை க்ரமமாக (பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடிமெய்யே பெற்றொழிந்தேன்) என்கிறபடியே கண்டாதுபரியாக நல்வார்த்தைச்சொன்னாலும் அதுமெய்யாம்படி தலைக்கட்டவல்ல ஸர்வஶக்தியானவன் காருண்யத்தாலே அபேக்ஷிதமானவதிகாரங்களெல்லாம் தன்னடையே ஸித்திக்குமென்று அப்படி ஸுலபமாகச்சொல்லிற்றென்று கொள்ளவேணும். இப்படி கொள்ளாதே அதுவே பொருளென்றால கர்மஜ்ஞாநாதிகளும் வேண்டா, பக்திப்ரபத்திகளும் வேண்டா, ஆசார்யாபிமாநமும் வேண்டா, வைஷ்ணவத்வமும் வேண்டா, தேவதாந்தராதிநிவ்ருத்தியும்வேண்டா, ஶாஸ்த்ரார்த்தங்களும்வேண்டா, அக்ருத்யகரணாதி பாகவதாபசார பர்யந்தமான நிஷித்தாநுஷ்டாநத்துக்கும் பயப்படவேண்டா, இஷ்டமானபடி ப்ரவர்த்தித்து ஒருக்கால் ஓரஞ்ஜலிபண்ணினால் கார்யகரமாமென்னு மர்த்தம் ப்ரஸக்தமாய் மோக்ஷஶாஸ்த்ரத்துக்கு ப்ரயோஜநமில்லையாய் ஆழ்வாராசார்யர்களுடைய மறுவற்ற வசநாநுஷ்டாநங்களும் வ்யர்த்தமாய் விஷயவைலக்ஷண்யத்துக்கும் துச்சத்வம்வரும். வேதம்சொன்னால் அர்த்தவாதமென்னலாம், ருஷிகள்சொன்னால் ப்ரமவிப்ரலம்பாதிதோஷங்கள் சொல்லலாம், ஈஶ்வரன்சொன்னால் தாமஸஜநமோஹக வாக்யங்களென்னலாம், மயர்வறமதிநலமருளப்பெற்று சேதநருடைய ஹிதத்திலே ப்ரவர்த்திக்கிற யதார்த்தஶாஸ்த்ர ஸாமர்த்யமும் யதாத்ருஷ்டார்த்த வாதித்வங்களுமுடைய ஆழ்வார் (பொய்யில்பாடலாயிரம்) என்று அஸத்யகந்தமில்லாதபடி அருளிச்செய்த ப்ரபந்தத்தில் (தொழுதெழென்மனனே) **என்று** அஞ்ஜலிமாத்ரமே உஜ்ஜீவநஹேதுவாமென்றும் (பத்துடையடியவர்க்கெளியவன்) என்று பக்திலேஶமுடையார்க் கெளியனென்றும் (புரிவதுவும்புகைபூவே) என்று ஏதேனுமொரு புகையும் புஷ்பமும் ஆபிமுக்யஸூசக

மாக ஸமர்ப்பித்தால் அதுவே போருமென்றும் (கண்ணனுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில் எண்ணிலும்வரும்) என்று பரமபக்திபரிகணளோகளுக்கொக்க முகங்கொடுக்குமென்றும் (கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று - ஓரெண்ணானுமின்றியே வந்தியலுமாறு) என்று அவன் அபேக்ஷாநிரபேக்ஷமாக வருளும்படி கண்டாயே நெஞ்சமே என்றும் (சிற்றவேண்டா சிந்திப்பேயமையும்) என்று பரக்கவொருவ்யாபாரம் பண்ணவேண்டா, இச்சாமாத்ரமேபோருமென்றும், இப்புடைகளிலே ஆஸ்ரயணம் ஸுகரமாம்படி சொல்லி (சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்-மரணமானல் வைகுந்தங்கொடுக்கும்பிரான்) என்று தன்திருவடிகளைப் பற்றினர்க்கெல்லாம் அநிஷ்டநிவ்ருத்திபூர்வகேஷ்டப்ராப்திக்குத் தானே உபாயமாய் ஸரீரவிமோசநாநந்தரம் பரமபதங்கொடுக்குமென்று அருளிச்செய்தது பொய்யோவென்னில், இதுக்கு ஸமாதாநம் மதுரகவியாழ்வார் கண்ணிநுண்சிறுத்தாம்பில் அருளிச்செய்தாரிறே. எங்ஙனேயென்னில் (அன்னையாயத்தனு யென்னையாண்டிடும் தன்மையான்) என்று இவ்வாழ்வார் முந்தறமுன்ன மிச்சேதநரஞ்சாதபடி மாத்ருவத் வத்ஸலராய் ஸரண்யப்ரபாவஞ்சொல்லி வஸீகரித்து உபலாளநம்பண்ணி அநந்தரம் பத்தஸம்ஸாரிகளாய் போகாதபடி பித்ருவத் ஹிதபரராய் ஸரணகதரக்ஷணஞ்சொல்லி வஸீகரித்து ஸம்மதிக்கப்பண்ணி யென்னையாண்டாரென் றருளிச்செய்தாரிறே. அதாவது ப்ரஜையினுடைய க்ரந்தியை சிகித்ஸிப்பிக்கும்போது மாதாவானவள் வாயிலே ஸ்தந்யங்கொடுத்து பிதாவானவனருகேயிருந்து இருவருங்கூடி போய்த்துபோய்த்து என்று உபலாளித்து க்ரமக்ரமமாக ஸஸ்த்ராக்நிகர்ம்மங்களாலே நிர்த்துஷ்டமாக்கி ரக்ஷிக்குமாப்போலே இவ்வாழ்வார் முந்தறமுன்னம் (தொழுதெழு) என்று தொழுகையே போருமென்றுசொல்லி அநந்தரம் (வீடுமின்முற்றவும்) என்று தத்வதிரிக்தங்களான பஸு புத்ர மித்ர களத்ர க்ருஹ க்ஷேத்ராதியான ஸமஸ்தமும் விடுங்கோளென்ன அநாதியாக வாஸனைபண்ணிப் போந்த விஷயங்களைக் கடுகவிடப்போமோ அவனை யாஸ்ரயித்து க்ரமமாக விடுகிறோமென்ன அதுகூடாது சண்டாளர் வஸிக்குப்போந்த ஸ்தலத்தை ப்ராஹ்மணருக்காக்கும்போது சிலவற்றைக்கூட்டிக்கொடுக்கப்போமோ [𑌅𑌹𑌂𑌮𑌮𑍇𑌤𑌿𑌚𑌣𑍍𑌡𑌾𑌲𑌃] (அஹம்மமேதிசண்டாள:) என்று அஹங்கார மமகார தூஷிதங்களானவையெல்லாம் [𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌕𑍂𑌲𑌰𑍂𑌪𑌾𑌃] (பவந்திஸர்வே ப்ரதிகூலரூபா:) என்று நினைத்து (வீடுசெய்துஉம் முயிர்வீடுடையானிடை வீடுசெய்மினே) என்று அவையெல்லாம்விட்டு ஆத்மஸமர்ப்பணம் பண்ணுங்கோளென்றுபதேசித்து திலதைலவத் துர்வி

வேசமான தேஹத்தையும் தத்ஸம்பந்திகளாய் விடமாட்டாத பார்யாபுத்ராதிகளையும் தஜ்ஜீவனஹேதுவான க்ருஹக்ஷேத்ர தநதாந்யாதிகளையும் எப்படிவிடவேணுமென்ன (நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து இறைசேர்மின்) என்று தேஹத்தில் அஹம்புத்தியையும் ஆத்மாவில் ஸ்வாதந்த்ர்யபுத்தியையும் தத்ஸம்பந்திகளில் மமதாபுத்தியையும் ஸ்வரோடே மூலச்சேதமாம்படி நிவர்த்தித்துக்கொண்டு ஸ்வாமியை சேரப்பாருங்கோளென்று அருளிச்செய்தார். இவை வேர்முதல்மாய்த்திருக்கையாவது இந்த ஶத்ரு துர்வர்க்கமான ஶரீரத்தை தன்னை ஹிம்ஸிக்கிற ஶத்ருவாக நினைத்து ததி க்ஷீராஜ்யாதிகளாலே வளர்த்துக்கொள்ளாதே ஜாத்யாஶ்ரய நிமித்ததோஷங்களில்லாதபடி பரிசுத்தத்ரவ்யங்களை பெருமாளுக் கமுதுசெய்யப்பண்ணி ஸத்தாதாரணமாத்ரம் ப்ரஸாதப்ரதிபத்தியோடே லக்வாஶியாய் இந்த்ரியங்களுக் கிடங்கொடாதே இத்தை நிக்ரஹிக்கிறபேரைக் கண்டு பரமாப்தராக நினைத்து இதுக்கு வர்த்தகராநவரை ஶத்ருக்களாக புத்திபண்ணுகையுமாய்த்து. இவ்வாத்மவஸ்து ததேகஶேஷமாய் ததேக பரதந்த்ரமுமா யிருக்குமென்று புத்திபண்ணுகையுமாய்த்து, அஹங்காரம் த்யாஜ்யமென்று ப்ரதிபத்தி பண்ணுகை. இனி தத்ஸம்பந்திகளான தாரபுத்ராதிகளை லங்கையில் பிராட்டிக்கு ஹிம்ஸகரான ஏககர்ண்யாதி ராக்ஷஸிகளைப்போலே நமக்கு பாதகரென்று நினைத்து [అసక్తిరనభిష్వఙ్గః పుత్రదారగృహాదిషు] (அஸக்திரநபிஷ்வங்க꞉ - புத்ரதார க்ருஹாதிஷு) என்கிறபடியே தத்ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களில் ஸுகதுக்கங்களின்றிக்கே இவர்களோடிருக்குமிருப்பு அக்நிகல்பமாய் பரிதபித்துக்கொண்டிருக்குமன்றாயிற்று, மமகாரம் த்யாஜ்யமென்று ப்ரதிபத்திபண்ணுகை. ஆகையாலே [శరైస్తు సఙ్కులాం కృత్వా లఙ్కాం పరబలార్దనః । మాం నయేద్యది కాకుత్స్థః తత్తస్య సదృశం భవేత్] (ஶரைஸ்துஸங்குலாம்க்ருத்வா லங்காம்பரபலார்த்தந꞉ - மாம் நயேத்யதிகாகுத்ஸ்த꞉ தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்று அபேக்ஷித்திருக்கிற பிராட்டியைப்போலே சிறைக்கூடமான ஶரீரத்தையும் ராவணனைப்போலே ஆத்மாபஹாரியான துர்மோஹத்தையும் ராக்ஷஸிகளைப்போலே பாதகரான தாரபுத்ராதி ஸங்கத்தையும் விடுவித்து என்னை கடாக்ஷிப்பது எந்நாளாகவற்றோவென்று அபேக்ஷித்துக்கொண்டிருக்குமன்றாயிற்று அஹங்கார மமகாரங்களை வேர்முதல்மாய்க்கை யென்று சொல்லப்பட்டது. இப்படியான வார்த்திபிறவாதே வாங்மாத்ரத்தாலே பலிதமாகாதே, ஸர்ப்பதஷ்டம்புடவையால் துடைத்தால்போகாதிறே. அதுவென்? நமஸ்ஸாலே அசித்வத்பாரதந்த்ர்யத்தை விதித்திருக்க அவனை நிர்ப்பந்தித்து தாமார்த்தராய் ப்ரார்த்திக்கக்கூடுமோ இத்

நால் ஸ்வரக்ஷணேஸ்வாந்வயம்வாராதோவென்னில் இது வந்தேறியன்றிக்கே கைங்கர்யப்ரார்த்தனையைப்போலே தத்ப்ரதிபந்தகமான அவித்யாகர்மவாஸநாப்ரக்ருதி ஸம்பந்தநிவ்ருத்தி ப்ரார்த்தனை ஸ்வரூபாநுபந்தியாயிருக்கும், ஸ்வயத்னசதுர்த்தியிலே கைங்கர்யப்ரார்த்தனைபோலே இந்த நமஸ்ஸப்தத்திலேயிறே இந்த விரோதிநிவ்ருத்தி ப்ரார்த்தனைப்ரகாஶிப்பது. கைங்கர்யப்ரார்த்தனைபோலே இப்பதத்தில் ப்ரார்த்தனையென்றுமுண்டு- இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணுமென்று முமுக்ஷுப்படியிலே அருளிச்செய்தாரிறே. "எம்பெருமானாரும் கத்யத்ரயத்திலே நமஸ்ஸப்தார்த்தத்தை அருளிச்செய்கிறவிடத்தில் [மனோவாக்காய
...] (மனோவாக்காயைரித்யாதி சூர்ணையாலே இவ்விரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனையை அருளிச்செய்தாரிறே. இனி ஸ்வரக்ஷணேஸ்வாந்வயம் வருவது தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ளவேணுமென்று யஜ்ஞதாநதபோரூபமான கர்மயோகாத்யுபாயப்ரவ்ருத்தியில் அந்வயித்தாலிறே பாரதந்த்ரனுக்குக்கூடாது, கைங்கர்யப்ரார்த்தனையுந் தத்விரோதிநிவ்ருத்திப்ரார்த்தனையும் விட்டால் ஸ்வரூபமேநஶித்து உபாயோபேயங்களிலந்வயமின்றிக்கே யொழியுமிறே. ஸ்வரக்ஷணேஸ்வாந்வயநிவ்ருத்தியென்றது பகவத்ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியென்று அங்கீகரியாதே நமக்கு ரக்ஷணத்தி லந்வயமில்லை விரோதங்களென்று நிஷேதங்களை த்யஜிக்கை ஸ்வரக்ஷணமாகாதோவென்று அவற்றைச்செய்யப்புக்கால் ஸ்வரூபோபாயோபேயாதிகாரங்கள் மூன்றும் த்வம்ஸமாய் நிர்மூலங்களாய்ப் போமாகையாலே கைங்கர்ய வ்யதிரிக்த ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியேயென்று அங்கீகரிக்கவேணும். ஆனால் ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்தி ப்ரார்த்தனை அவனுக்கபிமதமென்று சொல்லுகிறதென்னென்னில்? ஆழ்வாரைப்போன்ற பரமார்த்தரூண்டானால் (திருமாலிருஞ்சோலைமலையே – திருப்பாற்கடலே யென்றலையே) என்கிறபடியே தம்முடைய ஶரீரைகதேஶத்திலே இரண்டுமூன்று திவ்யதேசங்களில் பண்ணுமாதரத்தைச் செய்தபடியாலே ஸர்வேஶ்வரனுக் கிந்தபரமார்த்தருடைய திருமேனி [க்ஷணேபி
தே யத்விரஹோ...] (க்ஷணேபிதே யத்விரஹோதிதுஸ்ஸஹ:) என்கிறபடியே அத்யந்தாபிமதமா யிருக்குமென்கைக்காகச் சொன்னதித்தனையொழிய ஆர்த்தராகக்கூடாதென்றால் விஷயவைலக்ஷண்யாநுகுணமான வார்த்தியே இல்லையானால் அதிகாரியன்றிக்கே மூடராய்ப்போம். அப்படி யவனுக்கபிமதமென்று அருளிச்செய்த வாழ்வாரே (மங்கவொட்டுன்மாமாயை) என்று கால்பிடித்து (திருவாணை நின்னாணை) என்று ஆணையிட்டு ப்ரார்த்தித்து ஶரீரவிமோசநம் பண்ணுவித்துக்

கொடுபோனாரிறே. இவனுக் கார்த்தியுண்டானவிறே அவனுக் கபிமத மாவது. இல்லையாகில் காமபரவசனானால் ஸம்ஸாரிகளிலே இவனொருவனாய்விடுமாகையால் ஆர்த்தனானவனே அதிகாரி, அவனுக்கு தேகத்திலும் தத்ஸம்பந்திகளிலும் ஸர்ப்பவத் பயமுண்டானால் அஹங்கார மமகாரங்கள் நசிக்கும். இல்லையாகில் அவித்யா தருவஸம் பூதி பீஜம் முளைத்து ஸதஸஃ பணைத்து அர்த்தகாமாபேக்ஷைகளும் ராகத்வேஷங்களும் ஸோகமோஹங்களும் பாபபுண்யங்களும் ஸுகதுக்கங்களும் அபிவ்ருத்தமாய் எப்படிப்பட்ட ஜ்ஞாநவானானாலும் பத்தஸம்ஸாரியாய் கெட்டுப்போம். இத்தையெல்லாம் நினைத்து (நீர்நுமதென்றிவை வேர் முதல்மாய்த்து) என்று ஸரணாகதலக்ஷணம் சொல்லுமிடத்தில் ஆழ்வார் அருளிச்செய்தார். இனி (பத்துடையடியவர்க்கெளியவன்) என்று ஸௌலப்யத்தைச் சொல்லி (வணக்குடைத்தவநெறிவழிநின்று) என்று கிராஸாஸ்த்ரோக்தமான ப இப்ரபத்திகளிலே யங்வயியுங்கோளென்று சொல்லி (புரிவதுவும் புகை பூவே) என்று ஸ்வாராதத்வஞ் சொல்லி (கழிமின்தொண்டர்கள் கழித்துத் தொழுமின்)என்று பாஹ்யவிஷய ஸங்கமற்றுத் தொழுதாராகில் ஸ்வப்ராப்தியைக் கொடுக்குமென்று சொல்லி (எண்ணிலும் வரும்)என்று சொல்லியும் (நீயும் நானு மின்னேர்நிற்கில் மேல்மற்றோர் நோயுஞ்சார்கொடான் நெஞ்சமே) என்றுசொல்லியும் (அற்றவேண்டா) என்று சொல்லி (புன்மையிலாதவர்க்கும் வாழ்துணையா) என்று சொல்லியும் (மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்)என்றுசொல்லி (மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும் புறமே தொழுவார்க்கெல்லாம்) என்றுசொல்லியும் இப்படி ப்ரதமத்திலே ஸரண்ய ப்ரபாவம் சொன்னபின்பு ஸரணாகதரக்ஷணம் ஸிக்ஷிக்கையாலே அது ருச்யுத்பாதநார்த்தமாகவும் இது தனக்குண்டாகவேண்டும் ஸ்வரூபமென்றுங் கொள்ளவேணும். ஆனால் ஸரண்யப்ரபாவம் பொய்யோவென்னில் அன்று [అపిచేత్సుదురాచారో భజతేమామనన్యభాక్] (அபிசேத்ஸுதுராசாரோ பஜதேமாமநந்யபாக்) என்றுதொடங்கி அருளிச்செய்தபடியே முன்பு மிகவும் துராசாரனானாலும் அநந்யபாக்காய் பஜித்தானாகில் கடுக விலக்ஷணனா யுஜ்ஜீவிக்கும் - உத்தரகாலத்திலும் அவ்வாஸனையே அநுவர்த்தித்தால் அது ஸமித்து அநுபவயோக்யனாமளவும் நாலுநாள் விளம்பமித்தனைபோக்கி பலஸித்தியிலே கண்ணழிவில்லை. ராஜபுத்ரனானவன் சில பெண்பிள்ளைகளை தன்னபிமானத்தி லிட்டுக்கொண்டு ப்ராப்த யௌவநரானால் போகத்திலே கூட்டிக்கொள்ளுமாப்போலேயும் கர்ஷகனானவன் க்ருஷிபண்ணுகிறவளவில் நெல் வித்தி முளைத்தவாறே அறுத்து புஜிக்கமாட்டானே வளர்த்து களையறு

த்து பலித்தபின்பு அநுபவயோக்யமாம்படி ஸரஸாங்கமாக்கி புஜிக்கு மாப்போலே ஸர்வேஶ்வரனும் வைலக்ஷண்யாநுகுணமாக இருந்தி வி நியோகங்கொள்ளும். ஆகையாலே இஜ்ஜன்மத்தில் சரமகாலத்திலே யாகிலும் இல்லையாகில் மற்றொருஜந்மத்திலாகிலும் யோக்யனும்படி இ ருத்திச் சேர்த்துக்கொள்ளுமவனாகையாலே ஸம்பந்தத்தி லக்ஷ்யமுண் டானால் யாவத்காலமும் பத்தஸம்ஸாரியாய் விஷயப்ராவண்யமுடைய னும்படி விட்டுக்கொடான். [नमेभक्तःप्रणश्यति] (நமேபக்த:ப்ரணஶ்ய தி) என்று சொல்லிவைத்தாரிறே. (அடியரைவல்வினைத்துப் பாம்புல வைந்தும் துஞ்சக்கொடான்) என்று ஆழ்வாரருளிச்செய்தாரிறே. நம் பிள்ளை பின்பழகிய நாயனார்பெருமாள் ஜீயர்மடத்திலே ஒருநாள் எழு ந்தருளியிருக்க ஸ்ரீபாதத்துமுதலிகளெல்லாரும் ப்ராப்யம் ஸித்திக்கும் போது ஆழ்வாருடைய அவஸ்த்தையுண்டாய்ப் போகவேண்டியிராநின் றது, அங்ஙனாதிகளோடே கூடியிருக்கும் நாங்கள் என்செய்யக்கட வதென்று விண்ணப்பஞ்செய்ய பிள்ளையும் இங்கு அந்தவவஸ்த்தை பிறந்ததில்லையேயாகிலும் ஸ்தூலஶரீரம் கழிந்துபோமிடத்தில் ஸ்வப் ராப்திக்குமுன்னே இவ்வவஸ்த்தையைப் பிறப்பித்து எம்பெருமான்கா ரியம் செய்யுமென்றருளிச்செய்தார். அதிகாரியைப் பெருமையாலே அவதாரங்களி லவனிருக்கும்படி யென்னென்னில், மெய்வெளுத்து நாக்குவற்றி யிருக்குமென்று பிள்ளையருளிச் செய்தார். அதாவது அதிகாரியைப் பெருமையாலே மெய்வெளுத்து பெற்றாலும் ப்ரயோஜ நாந்தரபரராகையாலே மயிர்பட்டசோறென்று நாக்குவற்றியிருக்கு மெ ன்று பிள்ளை யருளிச்செய்தாரென்கை. ஆகையாலே அநந்ய ப்ரயோ ஜநனாயிருக்கு மதிகாரி எம்பெருமான் தேடிப்பிடிக்கிலும் ஸுதுர்ல பமாயிருக்கும். "அநந்ய ப்ரயோஜநனை விரஜைக்கு அக்கரையிலே காணலாம் இவ்விபூதியில் காணவரிதென்று" ப்ரமேயரத்நத்திலே அருளிச்செய்கையாலே ஸுதுர்லபம். ப்ரபந்நனானாலும் இப்படிப் பட்ட வருமையுண்டானால் ஸுகரோபாயமென்கிறதென்னென்னில்? உபாயாந்தரங்கள்போலே துஷ்கரப்ரவ்ருத்தி ஸாத்யமின்றிக்கே நிவ்ரு த்தி ஸாத்யமாகையாலே ஸுகரமாயிருக்குமிறே. இவனுடைய துர் வாஸநாபலத்தாலே இது துஷ்கரமென்று தோன்றுமதொழிய யஜ்ஞ தாந தபோத்யாந க்ருச்ர சாந்த்ராயண பலமூலாசநாதி காயக்லேசங்க ளொன்றுமில்லையே, எல்லாவற்றினுடைய நிவ்ருத்தியேயிறே இதுக்கபே க்ஷிதம், இம்மாத்ரமு மில்லையானால் நித்ய ஸம்ஸாரியாய்ப் போமதுவே பலம். இது ஸுகரமானால் [समहात्मासुदुर्लभः] ஸமஹாத்மாஸு துர்லப:) என்றும் (ஓரொருவருண்டாகிலத்தனைகாண்) என்றும் சொல்

இங்கிறதென்னென்னில் [illegible] (த்ரிபிர் குணமயைர் பாவைஃ ஏபிஸ்ஸர்வமிதம்ஜகத் - மோஹிதம் நாபிஜாநாதி) என்று த்ரிகுணத்ரவ்யயநாதி பகவந்மாயாப் ரபாவத்தாலே நிவ்ருத்தி பிறவாதிறே, அத்தாலே துர்லபமென்றருளிச் செய்தார். ஆனால் ப்ராக்ருதிவஸ்யனான சேதநனுக்கு இவ்வதிகாரம் பிற க்கும்படி யென்னென்னில்? இதா னொன்றாலும் பிறராலும் பிறப்பித்துக் கொள்ள வொண்ணாது, பகவத்கடாக்ஷ மடியாக லபித்த ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே பிறக்கக் குறையில்லை. (மரங்களு மிரங்கும்வகை) என்று ஸதாசார்ய ஸந்நிதியில் ஸ்தாவரங்களுக்கூட ஆத்மகுணோபே தராகச் சொல்லாநின்றதிறே. கேவல பகவத்ப்ரஸாதமடியாக சோஸல கோஸல சராசரங்கள் தத்குணகதாரகராய் முக்தியோக்யராணரிறே. ஆனால் கடாக்ஷமடியாக வருமவற்றுக்கு இவன்மேலே ஸ்வாதந்தர் யத்தையிட்டு [illegible] (இதம்குரு - இதம்மாகார்ஷீ:) என்றும் ஶாஸ்த்ரங்களும் ருஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஶி க்ஷிக்கிறதென்னென்னில்? ஸர்வேஶ்வரன் சிலவாத்மாக்களை உஜ்ஜீவிப்பி க்கும்போது ஆத்மகுணங்களுண்டாகப்பண்ணி கைக்கொள்ளவேண் டுகையாலே தான் கண்காணவந்து வாய்திறந் தருளிச்செய்யாமையா லும் தான் உஜ்ஜீவிப்பிக்க நினைத்தவர் த்யாஜ்யோபாதேயங்க ளறிகை க்காக கொடியைக் கொள்கொம்பிலே ஏற்றுகைக்குச் சுள்ளிக்கால் நாட் டுவாரைப்போலே ஸாமாந்ய ஶாஸ்த்ரமும் தன்னைக் கடுகப்பெறுகைக் கு விஶேஷ ஶாஸ்த்ரமு முண்டாக்கி (ஜகதுத்பவ ஸ்திதி ப்ரணாஶ ஸ ம்ஸாரவிமோசநாதிகள்) அவனுக்கு லீலையாகையாலே ஒருகுழமணனை ப்பண்ணி காக்கைப்பொன்னையிட்டு பாலர் லீலாரஸங் கொண்டாடு மாப்போலே சதுர்முகனையுண்டாக்கி அவனுக்கும் ருத்ரனுக்கும் அந் தர்யாமியாய் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களும் ஸ்வேநரூபேண நின்று ஸ்திதி யும்பண்ணுமாப்போலே ஸம்ஸாரவிமோசநத்துக்கும் பராங்குச பரகா ல நாதயாமுந யதிவராதிகளை யுண்டாக்கி அவர்களாலே விஶேஷ ஶா ஸ்த்ரத்தை ப்ரவர்த்திப்பித்து தன்னைச்சேர்த்துக்கொள்ள நினைத்து இவர்களை தன்மூலமாக உஜ்ஜீவிக்கும்படி பண்ணுவித்த கட்டளையா லே க்ருபாபரதந்த்ரரான முக்தியோக்யர் ப்ரமாணபரதந்த்ரராய் ஶா ஸ்த்ரங்களும் ஶிஷ்டர்களும் சொல்லிவைத்த அர்த்தங்களென்று வி ஶ்வஸிக்கும்படி அந்தராத்மாவாய் ப்ரேரிக்க ததநுகுணமாக ப்ரவர்த்தி த்துக்கொண்டு இருக்கைக்காக ஶிக்ஷித்தாரித்தனை - வாஸநாதூஷித ருக்கு [illegible] (உபதேஶோநிரர்த்தக:) என்று அப்ரயோஜ கம். அவனுக்கு இவனுஜ்ஜீவிக்கவேணுமென்கிற க்ருபை நித்யமாய்ச்

செல்லாநின்றாலும் சேதநருடைய பூர்வக்ருத புண்யாபுண்யங்கள் இர வநுபவித்து வாஸநைகொண்டு ப்ரவர்த்திக்கவேண்டுமளவிலே யன்றி கடாக்ஷப்ரஸாரமாகாமையாலே தனக்கோர விடம்பெறுமளவும் அவஸரம்பார்த்துப் பெற்றவளவிலே விளம்பமாக முக்தியோக்யராவர், ஸாமாந்யஶாஸ்த்ர நிஷ்டராய் ஸாதநாந்தரபரராய் திரியும்படி கடாக்ஷித்து, கடுக தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணுமென்று விஶேஷஶாஸ்த்ரநிஷ்டராம்படி விஶேஷகடாக்ஷம்பண்ணி பரமார்த்தராய் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தாமாசரித்தும் அருளிச்செய்தும் போந்த அர்த்தவிஶேஷங்களை நன்றாகத்தெளிந்து ப்ராதிகூல்யங்களையடைய பரித்யஜித்து குணாநுபவ கைங்கர்யநிஷ்டராய் அநந்யப்ரயோஜநரா யுஜ்ஜீவிப்பர்கள். கீழ்ச்சொன்ன ஸாதநாந்தரநிஷ்டன் [జన్మాన్తరసహస్రేషు తపోజ్ఞానసమాధిభిః। నరాణాం క్షీణపాపానాం కృష్ణే భక్తిః ప్రజాయతే] (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி꞉ - நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி꞉ ப்ரஜாயதே) என்கிறபடியே அநேகஜந்மங்களிலே தபோஜ்ஞாநாதிகளாலே க்ஷீணபாபரானார்க்கொழிய ஆத்மஸாக்ஷாத்காரமும் அநவரதபாவனையும் அத்யர்த்தப்ரியத்வமும் அநந்யப்ரயோஜநமுமாம்படி வஸ்துஸாக்ஷாத்காரம் பெறுகையாலே சிரகாலமுபாஸித்துக்கொண்டு போந்த வுபாஸகனுக்கும் அங்கபூதப்ரபத்திநிஷ்டை யுண்டாகையாலே அநாதிகாலார்ஜித பாபபாஹுள்யத்தாலே விஷயதுர்வாஸநாதூஷிதமான அந்த꞉கரணத்துக்கு நைர்மல்யஸித்தி பிறவாதொழிந்தால் து꞉க்கப்பட்டு என்னுடைய மநோதோஷம் என்றாலே போக்கவரிது நீயே உபாயமாகவேணுமென் றபேக்ஷித்து க்ரமத்திலே ஸித்தோபாயநிஷ்டனும் அக்காலத்துக்கும் துர்வாஸநைமேலிட்டு ப்ரயோஜநாந்தரபரனாய் ஐஹிகபோகங்களிலே நெஞ்சுசென்று தாரபுத்ராதி ஸக்தனாய் துர்விஷயங்களை யநுபவித்துக்கொண்டிருந்தால் ஸித்தோபாயம் அந்யோபாகாஸஹமாகையாலே இவனுக்குவரும் உபாயாபாய ஸம்யோகத்தாலே அந்தநிஷ்டைநெகிழ்ந்து திரியவுந்தெளிந்து [ఉపాయాపాయసంయోగే నిష్ఠయా హీయతే౽యయా। అపాయసంప్లవే సద్యః ప్రాయశ్చిత్తం సమాచరేత్] (உபாயாபாயஸம்யோகே நிஷ்டயா ஹீயதேநயா - அபாயஸம்ப்லவே ஸத்ய꞉ ப்ராயஶ்சித்தம் ஸமாசரேத்) என்கிறபடியே புந꞉ ப்ரபதந ப்ராயஶ்சித்தம் பண்ணிக்கொண்டு பாகவதாபசாராதிகள் வந்தா லநேககால முறுமாய்ந்து திரியவும் ஸாதுதாபனாய் இப்படி அநேககாலம் பரிஶ்ரமணம்பண்ணி ஸித்தோபாயம்பலிக்குமளவானால் அப்போது திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே ஸ்வவ்யாபாரங்களடையவிட்டு பரமார்த்தனாய் பின்

ளை திருநறையூரரயரைப்போலே ஸ்வதேஹத்தை யுபேக்ஷித்து க்ரம க்ரமமாக முக்தனாய்ப்போம். முன்சொன்ன விஶேஷ கடாக்ஷபாத்ரனுக்கு பரமார்த்தியை ஜநிப்பித்து உபக்ரமகாலந்துடங்கி (பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்) என்று இவையெல்லாத்திலும் விரக்தனாய் (கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ) என்று காலத்தை நிரீக்ஷித்துக்கொண் டிருக்கையாலே இவ்வநர்த்தங்களொன்றும் புகுரவழியின்றிக்கே ஶரீரவிமோசநாநந்தரத்திலே முக்தனாய்ப்போம், ஆனால் ஸர்வஶக்தியான ஸித்தோபாயம் ஸ்வீகரிக்கச்செய்தேயும் விளம்ப ப்ரஸங்கமுண்டோவென்னில்? ஸ்வீகாரத்துக்கு இவன் அதிகாரியானால் பின்னை கார்யகாலத்திலே இதரநிரபேக்ஷமாக கடுக கார்யம் செய்யுமித்தனையொழிய உபாயாதிகாரத்தில் குறைப்பட்டிருந்தால் அதிகாரியாமளவும் கார்யகரமாகாதிறே. இந்த உபாயஸ்வீகாரம் ஸர்வபலஸாதாரணமாகையாலே ப்ரயோஜநாந்தரபரரான ஐஶ்வர்யகைவல்யார்த்திகளுக் குண்டாயிருக்க அவர்களுடைய துர்வாஸனையாலே ஸ்வாத்மானுபவ துச்சபோகாநுபவங்களிலே பர்யவஸித்துப்போந்ததிறே. ஆகையாலே இவன் ருசி ஸாம்ஸாரிக துஷ்கர்ம ப்ரவ்ருத்திகளில் நின்றும் மீண்டு அநந்யப்ரயோஜநனானால் ஶீக்ர பலப்ரதமாம். அநந்ய ப்ரயோஜநனாகையாவது புத்ரதாராதிஸங்கம் முதலாக ப்ரஹ்மாத்யைஶ்வர்யம் நடுவாக ஸ்வாத்மாநுபவ மீறாக இவையெல்லாம் விட்டு அவனே ப்ரயோஜனமாகப் பற்றுமவனிறே. ஆகையாலே புத்ரதாராதி ஸங்கமும் க்ஷுத்ரவிஷயாநுபவமும் ப்ரயோஜநாந்தரமாகையாலே ஸித்தோபாய ஸ்வீகாரம்பண்ணினனென்று ப்ரயோஜநாந்தரபரனுக்கு ப்ராப்தியோக்யதையில்லையிறே. இவ்வர்த்தம் [భోగాఞ్ఇమేన్విధిశివాదిపదఞ్చకిఞ్చ స్వాత్మానుభూతిరితియాకిలముక్తిరుక్తా-సర్వంతదూషజలజోషమహంజుషేయ హస్త్యద్రినాథతవదాస్యమహారసజ్ఞః । తృణీకృతవిరిఞ్చాదినిరఙ్కుశవిభూతయః - రామానుజపదామ్భోజసమాశ్రయణశాలినః] (போகா இமேவிதிஶிவாதிபதஞ்சகிஞ்ச ஸ்வாத்மாநுபூதிரிதியாகிலமுக்திருக்தா - ஸர்வந்ததூஷஜலஜோஷமஹம்ஜுஷேய ஹஸ்த்யத்ரிநாததவதாஸ்ய மஹாரஸஜ்ஞ: - த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குஶவிபூதய:-ராமாநுஜபதாம்போஜஸமாஶ்ரயணஶாலிந:) என்று சொல்லப்படா நின்றதிறே. இப்படியுண்டாகவேண்டியிருக்க பரமஹேயமான க்ஷுத்ரவிஷயங்களிலே ப்ரவணராய் தாரபுத்ராதிகளை விடமாட்டாதவர்கள் கைபுகுராமையாலே நமக்கு வேண்டாவென்கிற வித்தனையொழிய லபித்தால் இஹலோகாத்விலக்ஷணபோகங்களைத் யஜிப்பர்களோ, ஆகையாலே விஷயப்ரவணருக்கு உபாயோபேயாதிகாரங்களிரண்டிலும் அந்வயமில்லை, உபாயா

திகாரிஸ்வரூபம் ஸாரார்த்தசதுஷ்டயத்திலே அம்மங்கியம்மாள் விபரீ
தார்த்தங்கள் புகுராதபடி நன்றாகவருளிச்செய்தாரிறே. எங்ஙனேயென்
னில், "உபாயஜ்ஞானமென்றும், உபாய யாதாத்ம்ய ஜ்ஞானமென்றும், த்வி
விதம். அதிலுபாயஜ்ஞானம், ஸம்பந்தஜ்ஞானமென்றும், ஸம்பந்தயா
தாத்ம்யஜ்ஞானமென்றும், ஸம்பந்தஸ்வரூபஜ்ஞானமென்றும், ஸம்பந்தஸ்
வரூப யாதாத்ம்யஜ்ஞானமென்றும், நாலுபடியாயிருக்கும். இதில் ஸம்
பந்தஜ்ஞானமாவது அவனுடைய ஶேஷித்வத்தையும் தன்னுடைய ஶே
ஷத்வத்தையும் தெளிந்து இஷ்டவிநியோகார்ஹனாயிருக்கை. ஸம்பந்
த யாதாத்ம்ய ஜ்ஞானமாவது, ஶேஷமான தார புத்ர க்ருஹ க்ஷேத்ராதி
களைப்போலே ப்ருதக்ஸித்தமாயிருக்கையன்றிக்கே அவனுக்குந் தனக்
குமுண்டான ஶரீராத்மபாவத்தை தெளியவறிகை. ஸம்பந்தஸ்வரூப
ஜ்ஞானமாவது, ஶரீரி ஶரீரங்கள்போலே பிந்நத்ரவ்யங்களாய் வருந்த
சையில் பேதமுண்டென்று தோற்றும்படி இருக்கையன்றிக்கே அவ
ன் தர்மியாகவும் தான் தர்மமாகவும் தெளிந்திருக்கை. ஸம்பந்தஸ்வ
ரூப யாதாத்ம்யஜ்ஞானமாவது, தர்மி தர்மங்களுடைய வைக்யத்தை தெ
ளியவறிகை. அதாவது விஶிஷ்டவேஷத்தில் அவனேயாய் தானில்
லையென்னலாம்படி யிருக்கை. இவைநாலு முபாயஜ்ஞானம். உபாய
யாதாத்ம்யஜ்ஞானமாவது, தந்நிஷ்டை. அதாவது ஶேஷத்வத்தில் கர்த்
ருத்வநிவ்ருத்தியும், ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வநிவ்ருத்தியும், கர்த்ருத்
வத்தில் கர்த்ருத்வநிவ்ருத்தியும், போக்த்ருத்வத்தில் கர்த்ருத்வநிவ்ருத்
தியும். அறிகை. இவற்றில் ஶேஷத்வத்தில் கர்த்ருத்வமாவது, ராஜா
ஸக்தியையிட்டு ஜகத்தைபீடிக்கும் மந்த்ரிகளைப்போலே பகவதாஸக்
தியையிட்டு ஸதாசாரத்தை நெகிழுகை. அதாவது நாம் பகவச்சேஷ
பூதரல்லோமோ நமக்கு பயமென்னென்று ஶப்தாதிவிஷய ப்ரவணரா
ய் பயமற்றிருக்கையும் பகவத்பாகவத கைங்கர்யத்தில் ஆசைவிளையா
தொழிகையும். தந்நிவ்ருத்தியாவது, ப்ராமாதிகமாகவும் வருகிற விஷ
யஸ்பர்ஶத்திலும் பயப்பட்டிருக்கையும் ப்ராமாதிகமான கைங்கர்யவி
ஶ்லேஷத்தி லார்த்திவிளைகையும். ஜ்ஞாத்ருத்வத்தில் கர்த்ருத்வமாவ
து, நாம் ஜ்ஞானவானாகையாலேயன்றோ நம்மை யவன் பரிக்ரஹித்தானெ
ன்று தன்ஜ்ஞாத்ருத்வத்தையிட்டு இறுமாய்க்கை. தந்நிவ்ருத்தியாவது, தே
ஹாத்மாபிமாநிகளிலும் கடையாய் அசித்ரூபனாய் முதலழித்துக்கொண்
டு போருகிறவென்னை இரும்பைப்பொன்னாக்குவாரைப்போலே அஜ்ஞான
த்தைப்போக்கி ஜ்ஞாநத்தை தந்தானென்றிருக்கை. கர்த்ருத்வத்தில் கர்
த்ருத்வமாவது, நாம் நிஷித்தங்களைவிட்டு விஹிதங்களைப் பற்றினவாறே
யன்றோ நம்மை யவன் அங்கீகரித்ததென்று தன்ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி

களையிட்டு இறுமாய்க்கை. தந்நிவ்ருத்தியாவது நம் வ்யாபாரங்களொன்
றுமில்லை மரப்பாவையை யாட்டுவிப்பாரைப்போலே தான் நிஷித்தங்க
ளில் நின்றும் விடுவித்து விஹிதங்களைப்பற்றுவித்தானென்று இருக்
கை. போக்த்ருத்வத்தில் கர்த்ருத்வமாவது, நாமவனுக் கடிமைசெய்கி
றோமென்றிருக்கை. தந்நிவ்ருத்தியாவது, தன்கையாலே தன்மயிரைவ
குத்தால் தன்கை தனக்குவகுத்தோமென்றிராதாப்போலே அவயவபூத
னான வாத்மா அவயவியான வெம்பெருமானுக்கு எடுத்துக் கைநீட்டுகி
றானென்றிருக்கை" என்றருளிச்செய்தார். இத்தால் ஶேஷபூதனாய்
விஷயப்ரவணனாகாதே யிருக்கவேணும். தான் ஜ்ஞாதாவாய் நஶிற்றில
ன், நான்ஜ்ஞாநஹீநன், அவன் தந்தஜ்ஞாநமென்றிருக்கவேணும். தான் நி
ஷித்தாநுஷ்டாநத்யாகபூர்வகமாக ஸதநுஷ்டாநபரனாயிருந்ததும் நாம்
மரப்பாவைப்போலே பரதந்த்ரன் இந்த த்யாகஸ்வீகாரங்களிரண்டும்
அவனாலே வந்ததென்றிருக்கவேணும். தான் ஸர்வவித கைங்கர்யங்களு
ம் பண்ணிக்கொண்டிருந்து அவனே செய்வித்துக்கொண்டானென்றி
ருக்கவேணுமென்று அருளிச்செய்தராயிற்று. இதுவாய்த்து உபாயாதி
காரிலக்ஷணம். தத்வஸ்திதி யிதுவாயிருக்க ஶரீராத்மபாவமும் அவய
வாவயவி ரூபைக்யமறிந்தவர் நிஷித்தாநுஷ்டாநம்பண்ணினாலும் அவ
னதேயாயிருக்கக் குறையில்லையென்று மௌட்யத்தாலே சொல்லுவர்
கள். அப்படிசொல்லப்போகாது ஶரீராத்மபாவஞ்சொன்னது தல்
லக்ஷணங்களான ஆதேயத்வவிதேயத்வ ஶேஷத்வங்கள் தனக்கு ஸ்வ
ரூபமென்றறிகைக்காகவும் அவயவாவயவி ரூபைக்யஞ் சொன்னது தா
ன் செய்யுங் கைங்கர்யத்தில் [𑌅𑌹𑌂𑌕𑌰𑍍𑌤𑌾 𑌮𑌮𑌾𑌯𑌂𑌭𑍋𑌗𑌃] (அஹம்கர்த்தா
மமாயம்போக꞉) என்கிற அஹங்கார மமகாரங்கள் வாராதபடி கர்த்ரு
த்வ போக்த்ருத்வ ரஹித பாரதந்த்ர்யாது ஸந்தாநபரனாயிருக்கவே
ணுமென்றும் சொன்னதித்தனை யொழிய தான் துர்வாஸனையாலே விஷ
யப்ரவணனாய்ச் செய்யுமவையு மவனேயென்னில் விநாஶஹேதுவாமிறே.
நஹுஷ ந்ருக யயாதி ப்ரப்ருதிகள் அநேககாலம் பஹு யஜ்ஞ தாந
தபஸ்ஸுக்களைப்பண்ணி நாம் செய்கிறோமென்னு மஹங்காரத்தா
லே முஹூர்த்தமாத்ரத்திலே அவையெல்லாம் வ்யர்த்தமாய் அத꞉பதித்
தாராகையாலும், சித்ரகேதுவென்கிற ராஜா அநேககாலம் ராஜ்யம்பண்
ணி பின்பு விரக்தனாய் பகவதுபாஸநம்பண்ணி உபாஸநபலத்தாலே
திவ்யவிமாநத்தோடே ஊர்த்வலோகங்களெல்லாம் ஸஞ்சரித்துக்கொ
ண்டு ஒருநாள் கைலாஸமார்க்கத்திலே வரும்போது அங்கே பார்வதீஸ
மேதனாய் ப்ரமதகணபரிவ்ருதனாயிருக்கிற ருத்ரனைக்கண்டு தான்
விரக்தனான அஹங்காரத்தாலே நிர்லஜ்ஜனாய் பத்நீஸஹிதனா

யிருக்கிறானென்று பரிஹஸிக்க கௌரீமாபத்தாலே அந்த வுபாஸனமெல்லாம் நிர்மூலமாய் ராக்ஷஸயோநியிலே பிறக்கையாலும் தான் செய்கிற ஸத்கர்மங்கள் நாம் செய்கிறோமென்றிருந்தால் அவை நசித்துப்போகிறமாத்ரமன்றிக்கே மேலிட்டு அநர்த்தம்வருகையாலே ப்ரபந்நனானவன் தனக்குண்டான ஜ்ஞாந வ்யவஸாய ப்ரேம ஸமாசாரங்களெல்லாம் அவன் தலையிலேயிட்டு கர்மநிபந்தநமாக வருகிறநிஷித்தப்ரவ்ருத்திகளெல்லாம்(யானேயென்னை யறியகிலாதே யானே யென்றனதே யென்றிருந்தேன்) என்று அநுஸந்தித்தானாகில் ஸ்வரூபம் உஜ்ஜீவிக்கும். [ಯೋ ಯೋಜಲ್ಪಸ್ಸತುಜಪಃ ಯತ್ಯಾನಂತತ್ಸಮೀಕ್ಷಣಂ] (யோ யோஜல்பஸ்ஸதுஜப: யத்யாநம்தத்ஸமீக்ஷணம்) என்று இவன் பண்ணுகிறவையெல்லாம் அவனுக்கேயாயிருக்குமென்று சொல்லி நின்றதிறேயென்னை? முதலிலே [ನಾರಾಯಣೈಕನಿಷ್ಠಸ್ಯ] (நாராயணைகநிஷ்டஸ்ய) என்று ஏகபதத்தாலே அதிகாரியை நிர்த்தேசித்தாரிறே. தத்வ்யதிரிக்த ஸமஸ்தமும் பரித்யஜித்து அவனேயெல்லாமாக அநுபவிக்கு மாழ்வார்போல்வாரிறே நாராயணைகநிஷ்டராவது. அந்த வதிகாரிகள் நிஷித்தப்ரவ்ருத்தி லங்கயிக்குமவரல்லரே. இனி(அழுவன் தொழுவனாடிக்காண்பன் பாடியலற்றுவன் தழுவல்வினையால் பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன்) என்று அவர்படுகிற வ்யாபாரமெல்லாம் அவனைக்குறித்தாகையாலே அவையெல்லாம் அவனுக்கதிஶயகரங்களாய் இஷ்டகைங்கர்யங்களோபாதி அவன்முகமலர்த்திக்கு ஹேதுவாயிருக்குமென்று சொல்லப்பட்டதித்தனையொழிய [ಶಬ್ದಾದಿಭೋಗನಿರತಸ್ಸಂಸಾರಕಾರಣಃ] (ஶப்தாதிபோகநிரதஸ்ஸம்ஸாரகாரண:) என்று துர்விஷயப்ரவணருமாய் ஸம்ஸாரகருமாய் துக்கப்ரதரான நம்போல்வார் செய்கிற பரஹிம்ஸா பரதாரகமநாதிகள் அவனுக்கு கைங்கர்யமாய்விடுமென்றால் சித்ரகுப்தாதிஸ்ராவரிறே. ஆனால் அஜாமிளாதிகள் துர்மார்க்கவர்த்திகளாய் புத்ரஸ்நேஹத்தாலே நாமோச்சாரணம்பண்ண அதை வ்யாஜமாக்கி அநுக்ரஹித்தானிறே யென்னில்? அவனை யமபடர் கைக்கொண்டுபோகாதபடி நிக்ரஹித்து விடுவிக்க அவன் தெளிந்து விஸ்மயப்பட்டு பகவத்ப்ரபாவமறிந்து அபராமாத்மவிரக்தனாய் பரமாத்மஸக்தசித்தனாய் முக்தனானானென்று சொல்லப்பட்டதிறே. நீரிப்படி யருளிச்செய்கிறதென்? ஆழ்வார்தொடங்கியெல்லாரு மவனுடைய ஸௌலப்யமே சொல்லாநிற்க பகவத்விஷயம் துர்லபமாகச் சொல்லப்போமோவென்ன, அவனுக்கு ஸௌலப்யாதிகுணங்களில்லையென்று நான்சொன்னேனோ அவனுடைய ஸ்வரூபம் [ಶಿಶುಪಾಲಮಪಿಪ್ರಾಪ್ತಃ] (ஶிஶுபாலமபிப்ராப்த:) என்று அவன் ஸுலபனாயிருந்தாலும் இவன் தன் ஸ்வரூபத்துக்கு அநுகுணமாக வர்த்திக்கவேணுமிறே, அவன் பிராட்டிபக்

கல் அபசாரம்பண்ணின காகத்தை ரக்ஷித்தானென்று இவனுமப்படி மாத்ருத்ரோஹம் பண்ணவேணுமோ [ప్రపన్నశ్చాతకో యద్వత్ ప్రపత్తవ్యః కపోతవత్] (ப்ரபந்நஶ்சாதகோயத்வத் ப்ரபத்தவ்யஃகபோதவத்) என்றிவன் தன் ஸ்வரூபமறியாமல் நின்றாலவனுக் குகப்பாயித்தனையொழிய ஒருக்காலொருவனை நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தாலே ரக்ஷித்தானென்று எல்லாருக்கு மதுவே யாத்ரையானால் அனர்த்தஹேதுவாமிறே. [నబిభేతి కుతశ్చనేతి- ఏతగ్ంహ వావ న తపతి-కిమహగ్ంసాధు నాకరవం - కిమహం పాపమకరవమితి] (நபிபேதிகுதஶ்சநேதி-ஏதக்ம்ஹவாவநதபதி- கிமஹக்ம்ஸாதுநாகரவம்- கிமஹம்பாபமகரவமிதி) என்று புத்திபூர்வோத்தராகத்துக்கு மஞ்ச வேண்டாவென்று சொல்லிற்றிறேயென்னெ? இதுக்கர்த்தம் [ఆనన్దం బ్రహ్మణో విద్వాన్] (ஆநந்தம்ப்ரம்ஹணோவித்வாந்) [తాదృశానన్దగుణకబ్రహ్మోపాసనేన సర్వక్లేశభయాత్యన్తనివృత్తిర్భవతీత్యర్థః] (தாத்ருஶ ஆநந்தகுணகப்ரஹ்மோபாஸநேந ஸர்வக்லேஶபயாத்யந்தநிவ்ருத்திர்பவதீத்யர்த்தஃ) என்று ஆநந்தவல்லியில் சொல்லப்பட்ட நிரதிஶயாநந்தகுண விஶிஷ்டபர ப்ரஹ்மோபாஸநத்தாலே உபாஸகனுக்கு ஸர்வக்லேஶபயாத்யந்தநிவ்ருத்தி சொல்லுகிறதொழிய ப்ரபந்நனவன் புத்திபூர்வகமாக நிஷித்தாநுஷ்டாநம் பண்ணிக்கொண்டு பயப்படானென்று சொல்லிற்றில்லையே. உபாஸகன் [శాన్తో దాన్త ఉపరతస్తితిక్షుస్సమాహితో భూత్వాऽऽత్మన్యేవాత్మానం పశ్యేత్] (ஶாந்தோதாந்த உபரதஸ்திதிக்ஷுஸ்ஸமாஹிதோ பூத்வாத்மந்யே வாத்மாநம்பஶ்யேத்) என்று உபக்ரமமேதுடங்கி ஜிதேந்த்ரியனாய் உபாஸித்துக்கொண்டிருக்கும் அதிகாரி உத்தரகாலத்தில் பாபத்தைப்பண்ணானிறே. ஆனால் ஜிதேந்த்ரியத்வ முபாஸகனுக்கொழிய ப்ரபந்நனுக்கு வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லையேயென்னெ? ஸித்தஸாதந பரிக்ரஹத்துக்கு நிரபேக்ஷமானாலும் உபேயாதிகாரத்துக்கு அத்யந்தாபேக்ஷிதமாயிருக்கும் (வலமுதல்கெடுக்கும் வரமேதந்தருள்கண்டாய்) என்றருளிச்செய்தாரிறே. ஆனால் [అపి పాపేష్వభిరతాః మద్భక్తాః పాణ్డునన్దన। ముచ్యన్తే పాతకైస్సర్వైః పద్మపత్రమివామ్భసా] (அபிபாபேஷ்வபிரதாஃ மத்பக்தாஃபாண்டுநந்தந - முச்யந்தேபாதகைஸ்ஸர்வைஃ பத்மபத்ரமிவாம்பஸா) என்னுமாப்போலே [యే నృశంసా దురాత్మానః పాపాచారరతాస్తథా తేऽపి యాన్తి పరం ధామ నరా నారాయణాశ్రయాః] (யேந்ருஶம்ஸாதுராத்மாநஃ பாபாசாரரதாஸ்ததா - தேபியாந்திபரம்தாம நராநாராயணாஶ்ரயாஃ) என்று என்னை யாஶ்ரயித்தவன் மஹா பாபிஷ்டனானாலும் முக்தனாமென்று அவந்தானே அருளிச்செய்யாநிற்க நீரஞ்சும்படி பண்ணுகிறதென்னென்ன? மஹாபாபிஷ்டனானாலும் தன்னையாஶ்ரயித்தால் [క్షిప్రం భవతి ధర్మాత్మా శశ్వచ్ఛాన్తిం నిగచ్ఛతి] (க்ஷிப்ரம்பவதிதர்மாத்மா ஶஶ்வச்சாந்திம்நிக

ச்சதி) என்று தன்னுடைய ப்ரஸாதத்தாலே சீக்ரமாகவே தர்மாத்மா வாய் ப்ரஶாந்தசித்தனாய் முக்தனுமென்று சொல்லுகிறதொழிய யாவச் சரீரபாத மதுவேயாய் முக்தனுமென்று சொல்லுகிறதன்றே. இதுபொ ருளென்று உமக்குத்தோற்றில் அபதேசப்ரவ்ருத்தியில் ருசியுண்டானால் என்னைக்கேட்கவேண்டா, உமக்கு வைஷ்ணவத்வமும் வேண்டா, ஆ சார்யாபிமானமும் வேண்டா, ஆழ்வாராசார்யர்களுடைய வசனானு ஷ்டானங்கள் வேண்டா, இத்தர்ஶனத்தில் உட்புகுந்து இதினு டைய வைலக்ஷண்யங்கெடும்படி விபரீதார்த்தங்கள் சங்கியாதே க டக்கநின்று அஜாமிள கண்டாகர்ணாதிகளை ரக்ஷித்தவன் நம்மை ரக்ஷியானோவென்றும் ப்ரஹ்மஹத்யாதிகளும் தாஸீகமநாதிகளும் பண்ணிக்கொண்டு ந்ருஶம்ஸராய் துராத்மாக்களாய் பாபாசாரதராய் யதேச்சையாக ப்ரவர்த்தித்துக்கொண்டு ஸுகமேயிருந்தால் அக்கால த்துக்கு அவன் திருவுள்ளமானபடி விநியோகங்கொள்ளுகிறான். தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே முக்தனும்படி பண்ணவேணுமென்று நினைத்தா னாகில் அதுவுஞ் செய்யவல்லன், (க்ஷிபாமி-நக்ஷமாமி) என்று நிக்கிரஹி க்கவும்வல்லன், அவன் நிரங்குஶஸ்வாதந்த்ர்யத்தால் முக்தனும்படி பண்ணும்போது தேவதாந்தரபரரென்றும் விஷயாந்தரப்ரவணரென் றும் ப்ரஹ்மஹத்யாதி பாபஶீலரென்றும் பாகவதாபசாரபரரென்றும் நினையாதே ஸ்வப்ராப்தியைக்கொடுக்கும் ஸ்வபாவனானபின்பு நமக்குந் தேவதாந்தரஸ்பர்ஶங்கூடாது, ஸாதநாந்தரகந்தம்கூடாது, பாகவதாப சாரங்கூடாது, ப்ராக்ருதஸஹவாஸம் பண்ணவொண்ணாதென்று சில நியமங்கள் சொல்லிக்கொண்டு தேஹபரிமாணவாதியான வேதபாஹ்ய ன் ஹிம்ஸா விதூரத்வ திகம்பரத்வ பாணிபாத்ரபோஜந கேஶோல் லுஞ்சநாதி நியமங்கள் சொல்லிக்கொண்டு வர்த்திக்கிறாப்போலே நீரும் சிலநியமங்கள் சொல்லிக்கொண்டு திரியாதே எல்லாம்விட்டு உமக்குத் தோற்றினபடி ஸுகமேயிருங்கோள். கோஸல கோகுல சராசரங்களு க்கும் விதுரமாலாகார ததிபாண்டாதிகளுக்கும் பஞ்சஸம்ஸ்காரங்களு ம் ஆசார்யாபிமானமுமுண்டாக்கி க்ருபைபண்ணுகிறானல்லனே, அப்ப டியே அவன் ஸுலபனாயிருந்தாலும் நம்பூர்வாசார்யர்கள் அவன் கொ டுக்கிற முக்தியை யபேக்ஷியாதே அவன்உகப்பிலே யூன்றி ஸ்வரூபமுஜ் வலமாம்படியாக (எம்மாவீட்டுத்திறமும் செப்பம்) (சிறப்பில்வீடு சுவர் க்கநரகம்-இறப்பிலெய்துக வெய்தற்க-தனக்கேயாகவெனைக் கொள்ளு மீதே)என்றும் வைகுண்ட ஸம்ஸார விரக்தசித்தை:-என்கிறபடியே எல் லாத்திலும் விரக்தராய் ததேகாநுபவபரராய் ஸம்யக்ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நராய்[ప్రియోహిజ్ఞానినోత్యర్థ మహంస చమమప్రియః](ப்ரியோஹிஜ்ஞா

நிநோத்யர்த்த மஹம் ஸசமமப்ரியஃ) என்றும் [జ్ఞానినేయద్విరహోతిదుస్సహః] (ஜ்ஞாணைபிர்யத்விரஹோ திதுஸ்ஸஹ:) என்றுஞ் சொல்லுகிற படியே அவனுக்கத்யந்த ப்ரியதமராய்போனார்கள். இவர்கள் நடந்த வழி உங்களுக்கிஷ்டமானல் இவர்களருளிச்செய்தவழியில் நடந்து க்ருதார்த்தராங்கோள், நாம் பஞ்சமோபாயநிஷ்டர்வழியிலே நடக்கிறோமெ ன்று பேரையிட்டுக்கொண்டு பூர்வாசார்யர்களுடைய உக்த்யநுஷ்டாந ங்களில் நிஷித்தப்ரவ்ருத்திகள் புகுராமையாலே அவற்றைவிட்டு ஸர்வ சக்தியான ஸர்வேஶ்வரனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களும் தத்ப்ர பாவ ப்ரஶம்ஸா பரவாக்கியங்களும் சொல்லிக்கொண்டு அவற்றுக்கு ம் சில விபரீதார்த்தங்களை ஸங்கல்பித்து அதுக்குக்கருத்தென் இதுக்கு தாத்பர்யமென் இதுக்காஶ்ரயமென்னென்று ப்ராதிகூல்யங்களிலொன் றும் த்யஜிக்கமாட்டாதே புத்திபேதத்தாலே எல்லாம் பொருந்துமெ ன்று நிஷித்தப்ரவ்ருத்திகளில் கண்வைத்துத் திரியாதே ஏதேனுமொரு வழியிலே நடக்கவேணுமென்ன-திரியவுந் தண்டம் ஸமர்ப்பித்து அடி யேன் அஜ்ஞதையாலும் தேவரீர் மாத்ருவத்வத் ஸலராகையாலும் தி ருவுள்ளத்தில் சீறியருளாதே நெஞ்சில் தோற்றினவையெல்லாம் விண் ணப்பஞ்செய்கிறேன் க்ருபையாலே அவற்றுக்கெல்லாம் ஸமாதாநம்ப ண்ணவேணுமென்று திருவடிகளைப் பிடிக்க அவரும் சிரித்து கேளுங் கோளென்ன[దోషబుద్ధ్యోభయాతీతో నిషిద్ధాన్న నివర్తతే। గుణబుద్ధ్యాతు విహితం నకరోతి యథార్భకః] (தோஷபுத்த்யாபயாத்தேதோ: நிஷித்தாந்நிவர்த் ததே - குணபுத்யாதுவிஹிதம் நகரோதியதார்பக:) என்று ஜ்ஞாநாதி கன் விதிநிஷேதவஶ்யனன்றிக்கே அர்பகனைப்போலே திரிகிறனெ ன்று சொல்லப்பட்டதிறேயென்ன ஜ்ஞாநம்பிறந்து புண்யபாப சத்ரு மித்ர மாநாவமாந ஸுகதுக்க ஸ்துதிநிந்தைகள் விவேகிக்கமாட்டா தே உபயவ்யாபாரங்களு மதிக்ரமித்து அத்விதீய ப்ரஹ்மாநுபவாநந்த மகரந்தாநுபவத்தாலே ப்ரமத்தசித்தராய் தம்முடம்பை மறந்து மநோ புத்திகளிரண்டும் பகவததீனமாய் புத்திபூர்வகப்ரவ்ருத்திக ளொன்றுமி ன்றிக்கே பாலோந்மத்த பிஶாசாவிஷ்டரைப்போலே திரிகிறனென்று சொல்லுகிறதித்தனையொழிய தாரபுத்ராதி ஸக்தனாய் தத்ரக்ஷணார்த்த மாக ராஜத்வாரங்களிலே கிடந்து அர்த்தார்ஜந தத்பரராய் அஹங்காரா ர்த்த காம பாரவஶ்யத்தாலே விதிநிஷேத வஶ்யனன்றிக்கே திரிகிறனெ ன்று சொல்லிற்றில்லையே. அர்ப்பக த்ருஷ்டாந்தத்தாலே அபுத்திபூர் வக ப்ரவ்ருத்தியென்று தோற்றுகின்றதிறே. மநோபுத்திகளிரண்டும் [మయ్యేవమనఆధాయ మయిబుద్ధిం నివేశయ] (மய்யேவ மந ஆதாய ம யிபுத்திம்நிவேஶய) என்று தன்பக்கலிலே சேர்த்து பக்திபரவஶரு

னவன் தன்னுடம்பை மறந்து என்னதுஷ்கருத்யங்கள் பண்ணினாலும் குறையில்லையென்று ஸர்வேஶ்வரன் தானே [యస్య నాహంకృతో భావో బుద్ధిర్యస్య న లిప్యతే । హత్వాపి స ఇమాంల్లోకాన్ న హన్తి న నిబధ్యతే] (யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே - ஹத்வாபி ஸ இமாம்லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே) என்றருளிச்செய்தானிறே. ஆனாலிதுண்டாயிடுக, ஸ்வதந்த்ரனை யுபாயமாகப்பற்றினபோதிறே பயப்ரஸங்கந்தானுள்ளது, ஆசார்யாபிமாநத்திலே யொதுங்கினால் ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைக் கண்டு பயப்படவேண்டாவென்று சொன்னீரேயென்ன? இதுக்குத்தரஞ்சொன்னோம். ஆசார்யாபிமாந நிஷ்டனுக்கு பயமில்லையென்றது இவன் அபதப்ரவ்ருத்தனாகாதபடி ஹேயோபாதேயங்கள் தெளிவித்து ததநுரூபமாக ப்ரவ்ருத்திகளும் பண்ணுவித்து கண்ணிலே வெண்ணெயிட்டுநோக்கி அவன்லீலையிலே விநியோகங்கொள்ளுகைக்கு அவகாசமற பரிசுத்தனாக்கி அவனை சேர்த்துவிடுமென்னுமத்தாலே, இதுவே பொருளாகக்கொள்ளாதே அவிநீதனானாலும் குறையில்லையென்றால் சரமப்ரபந்ந ஸ்வரூபம் ஶிக்ஷிக்குமிடத்தில் ஆசார்யமுகோல்லாஸத்துக்காக ஜ்ஞாநாநுஷ்டாநங்களுண்டாகவேணும் இவனுக்கு நிஷித்தாநுஷ்டாநம் த்யாஜ்யமென்றருளிச்செய்கைக்கு நிமித்தமில்லையிறே. இவ்வபிமாந மின்னும் ப்ராதிகூல்யமில்லாத திர்யக்ஸ்தாவரங்களுக்கு கார்யகரமாமித்தனைபோக்கி சேதநனுக்கு ஜ்ஞாநாநுஷ்டாநங்களொழிந்தாலும் அஹங்கார மமகார விஷயப்ராவண்ய பரஹிம்ஸா பரஸ்தோத்ர பரதாரபரிக்ரஹ அபக்ஷ்யபக்ஷண அபேயபாந தேவதாந்தர ஸாதநாந்தர ப்ரயோஜநாந்தர பகவதபசார பாகவதாபசாராதி விரோதிநிவ்ருத்தி யுண்டானாலல்லது கார்யகரமாகாது. ஸ்வதந்த்ரனைப்பற்றி பயப்ரஸங்கம் வாராதபடி ஆழ்வாரை யாஶ்ரயித்து அவர் திருவடிகளையே உபாயமாகப்பற்றின மதுரகவிகள் நமக்காழ்வார்ஸம்பந்த முண்டென்று நிஷித்தாநுஷ்டாநம் பண்ணிக்கொண்டு நமக்கு பயமென்னென்று இருந்தாரென்றில்லையே, (செயல்நன்றாகத்திருத்திப்பணிகொள்வான்) என்று தம்மை ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பந்நராம்படி அவர் திருத்தினபடியையும் (அன்பனாயடியேன் சதிர்த்தேனின்றே) என்று தாமும் தத்விஷயப்ரவணராய் ததிதரஸமஸ்தமும் பரித்யஜித்து சதுரரானபடியையும் அருளிச்செய்தாரிறே, [సంసారావర్తవేగప్రశమనశుభదృగ్దేశికప్రేక్షితోఽహం సన్త్యక్తోఽన్యైరుపాయైరనుచితచరితేష్వద్య శాన్తాభిసన్ధిః । నిశ్శఙ్కస్తత్త్వదృష్ట్యా నిరవధికదయం ప్రార్థ్య సంరక్షకం త్వాం న్యస్య త్వత్పాదపద్మే వరద నిజభరం నిర్భరో నిర్భయోఽస్మి] (ஸம்ஸாராவர்த்தவேக ப்ரஶமஶுபத்ருக் தேஶிகப்ரேக்ஷிதோஹம் - ஸந்த்யக்தோந்யைருபாயை ரநுசிதசரிதேஷ்வத்யஶாந்தாபிஸந்தி: - நி

ப்ஸங்கஸ்தத்வத்ருஷ்ட்யா நிரவதிகதயம்ப்ராப்யஸம்ரக்ஷகம்த்வாம் - ந்
யஸ்யத்வத்பாதபத்மே வரதநிஜஹரம் நிர்ஹரோநிர்ஹயோஸ்மி) என்று
தாமும் ஸம்ஸாரிகளாய்இவனையும்ஸம்ஸாரியாம்படிபண்ணி ஹயங்கெ
டுத்து ஓட்டையோடத்தோடு ஒழுக லோடமாய் முழுகிப்போமவர்
போலன்றிக்கே நிஸ்ஸங்கராய் தான் கரையேறவும் இவனை நிஸ்ஸங்க
னாக்கிக் கரையேற்றவும் வல்ல ஸதாசார்யனாலே விஶேஷகடாக்ஷம் ப
ண்ணப்பெற்று [ఉపాయాపాయనిర్ముక్తో మధ్యమాం స్థితిమాస్థితః] (உபாயாபாய
நிர்முக்தோ மத்யமாம்ஸ்திதிமாஸ்திதஃ) என்கிறபடியே தர்மாதர்மங்க
ளிரண்டும் பரித்யஜித்து ஸர்வேஶ்வரனையே உபாயமாகப்பற்றி ந்யஸ்த
பரனான பின்பிறே நிர்பயத்வமுள்ளது, ஆகையாலே தான் பத்தஸம்
ஸாரியாய் ப்ரயோஜநாந்தரபரனாய் நிஷித்தாநுஷ்டாநரதனாயிருந்து ஆ
சார்யகடாக்ஷமுண்டென்று நிர்ஹயனாயிருக்கவிரகில்லை. ஆனால் வே
ர்த்தபோது குளித்து பசித்தபோது ப்ரஸாதப்பட்டு பட்டர்திருவடிக
ளேஶரணமென்றிருக்குமத்தே போருமென்றதுக்குக் கருத்தென்னென்ன?
ஸ்வரக்ஷண ப்ரவ்ருத்திகளில் அந்வயிக்கவேண்டாமென்று சொல்லுகி
றதொழிய பகவத் பாகவத கைங்கர்யங்களும் வேண்டா, ப்ராதிகூல்யநி
வ்ருத்தியும் வேண்டா, ஶிஶ்நோதரபராயணராய் திரியுங்கோளென்று
ஹிதமருளிச்செய்தாரென்னக்கூடாதிறே. இப்படி சொன்னால் இருவ
ர் ஸ்வரூபமும் உருமாய்ந்துபோமிறே. "எம்பெருமானார் ஒருநாள் அஹய
ப்ரதாநமருளிச்செய்தவளவில் பிள்ளையுறங்காவில்லிதாஸர் ஸம்ஸார
த்தை நினைத்து ஹயப்பட்டபோது நீரஞ்சவேண்டா நான்பெற்றேனாகி
ல் நீரும் பெறக்குறையில்லை யென்றருளிச்செய்தாரென்ன" பிள்ளையுறங்
காவில்லிதாஸர் அஞ்சுகிறதும் சுத்தாத்ம யாமுந குருத்தம கூரநாததி
கள் [అమర్యాదః క్షుద్రః - నృపశురశుభస్యాస్పదమపి] (அமர்யாதஃக்ஷுத்ரஃ-
ந்ருபஶுரஶுஹஸ்யாஸ்பதமபி) என்றும் [తతో నికృష్టేమయిసన్నికృష్టే కా
న్నిష్కృతిం రఙ్గపతే కరోషి] (ததோநிக்ருஷ்டே மயிஸந்நிக்ருஷ்டே. - கா
ந்நிஷ்க்ருதிம் ரங்கபதேகரோஷி) என்றும் [పాపానాం ప్రథమోస్మ్యహం]
(பாபாநாம்ப்ரதமோஸ்ம்யஹம்) என்றும் [వృత్త్యాపశుర్నరవపుస్త్వహమీ
దృశోపి] (வ்ருத்யாபஶுர் நரவபுஸ்த்வஹமீத்ருஶோபி) என்றும்
[నిత్యం త్వహం పరిభవామి గురుంచ మన్త్రం] (நித்யம்த்வஹம் பரிஹவாமி குரு
ஞ்சமந்த்ரம்) என்றும் அநுஸந்திக்கிற தமக்குக் காணப்படுகிற ஸம்
ஸாரிகள் தோஷமெல்லாம் தம்மேலேறிட்டுக்கொண்டு சொல்லுகிற
தொழிய குருமந்த்ர தேவதாபரிபவங்களும் பண்ணிக்கொண்டு திரிந்தா
ர்களென்றில்லையே? அப்படி நைச்யாநுஸந்தாநம் பண்ணுகிறாரித்தனை.
பொன்னாச்சியாரும்தாமும் ஆழ்வானுமாண்டாளும்போலே விரக்தராய்

ஸம்ஸாரகந்தரராய் ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாருக்கும் ஹிதமருளிச்
செய்யும்படி யிருக்கிற வதிகாரிகளாகையாலே நிரஹங்காரதைதோற்றும்
படி அருளிச்செய்தார். காராஞ்சிஸோமயாஜியார் பத்நீஸம்ஸாரியாய்
தம்மை அர்ச்சாரூபேண வாராதிக்கவேணுமென்று நினைக்கில் ஶிக்ஷித்
துத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொண்டாரிறே எம்பெருமானார்.
எம்பார் பரமவிரக்தராய் ஸம்ஸாரத்தில் அருசிபிறந்திருக்க தம்மேலா
ணையிட்டு நியமித்தாலும் விரக்தரானபின்பு [𑌨𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌮𑍀 𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑍍] (நிரா
ஸ்ரமீநஸந்திஷ்டேத்) என்கிறபடியே ஒன்றைப்பற்றி யிருக்கவேணுமென்
று அத்தைவிடுவித்து துர்யாஸ்ரமத்திலே நிறுத்தி ஹ்ருஷ்டரானாரிறே.
முதலியாண்டான்? ஆஸ்ரமத்தை யங்கீகரித்தபின்பு நமக்கிப்போது த்ரித
ண்டங்கைபுகுந்ததென்று ஸந்துஷ்டரானாரிறே. சிலர் ஸம்ஸாரிகள்
போலே க்ருஹஸ்தராயிருந்தாலும் பரமவிரக்தரா யுஜ்ஜீவித்துப்போ
னார்கள். இப்போதானாலும் அஹங்கார மமகார ஶூந்யராய் ராகத்
வேஷ ஶோக மோஹ விநிர்முக்தராய் அர்த்த காம நிஸ்ப்ருஹராய் ஶ
த்ருமித்ர ப்ரியாப்ரிய நிந்தாஸ்துதிகளில் ஸமசித்தராய் வர்த்தித்தாலொ
ருகுறையுமில்லையென் றருளிச்செய்ய, இதுவுமுண்டாயிடுக [𑌪𑌾𑌪𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾
𑌶𑍁𑌭𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾] (பாபாநாம்வா ஶுபாநாம்வா) என்கிற பிராட்டிபுருஷகார
முண்டேயென்னெ? அவள் புருஷகாரம் ஸமாஸ்ரயணோந்முக சேதநகத
ங்களான அபராதங்களைக்கண்டு [𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑌿] (க்ஷிபாமி) என்கிற தன் ஸ்வா
தந்த்ர்யத்தாலே ஸர்வேஶ்வரன் சீறுமளவில் ஶாஸ்த்ரம் ஜீவிக்கவே
ணுமென்று ஆஸ்ரயணோந்முகனானவனை தண்டிக்கப்போமோ இவனை
தண்டிக்கில் க்ருபாதிகள் ஜீவிக்கும்படி யென்னென்று அநுவர்த்தநத்
தாலும் உபதேசத்தாலும் அழகாலும் க்ருபாதிகுணங்களைத் தலையெடுக்
கப்பண்ணி ரக்ஷிப்பிக்குமதொழிய அவன் புருஷகாரமடியாக இவனு
டைய அநாதிகாலார்ஜித பாபங்களெல்லாம் பொறுத்து இவனிடத்தி
லத்யாதரம்பண்ணி [𑌕𑌿𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌸𑍀𑌤𑌯𑌾 𑌮𑌮] (கிம்கார்யம்ஸீதயாமம) எ
ன்கிறபடியே பிராட்டியிலும் அபிமததமனாக புத்திபண்ணியிருக்க
இவன் திரியவும் பூர்வவாஸனையாலே ராஜபார்யையானவள் நிக்ருஷ்ட
புருஷன்பக்கல் அநுரக்தையாமாப்போலே ததிதர விஷயப்ரவணனாய்
ததஸஹ்யங்களான அஹங்கார மமகார பாகவதாபசாராதிகளிலே அ
ந்வயித்தால் அவனுக்கும் அஸஹ்யமாய்விட நிக்ரஹத்துக்கே பாத்ர
மாய் போமாகையாலே தல்லப்த ஸத்தாதிகனாய் தச்சேஷபூதனாய்
ததாஜ்ஞாபரதந்த்ரனாய் அஸ்வதந்த்ரனான வாசார்யனாலும் தச்சேஷபூ
தையாய் ததேகபாரதந்த்ர்யையாய் தச்சந்தாநுவர்த்தியான பிராட்டியாலு
ம் உத்தரகாலத்திலே ப்ரஷ்டனாய் அஹங்கார மமகாரவஶ்யனாய் பத்த

ஸம்ஸாரியானவனை ரக்ஷிக்கப்போகாதிறே. ஆனால் [भुङ्क्ते भोगानविदितनृपस्सेवकस्यार्हकर्तृः] (புங்க்தேபோகாநவிதித ந்ருபஸ்ஸேவகஸ்யார்ஹகார்த்ரு:) என்று ராஜாவினுடைய அநுவர்த்தநத்தை யறியாத ராஜஸேவகார்ஹகனுக்கும் ஸகலபோகாநுபவஸித்தியுண்டாறுப்போலே ஶிஷ்யனுக் கதிகாரமில்லையாகிலும் பலஸித்தியில் கண்ணழிவில்லையென்று சொல்லாநின்றதேயென்னில்? ப்ராதிகூல்யங்களில்லையானால் அப்படியே குறையில்லை. இவனிடத்தில் மந்த்ரார்த்த விருத்தங்களாய் ஸ்வரூபநாஶகங்களான அஹங்கார மமகார விஷயப்ராவண்ய பாகவதாபசாராதிகளுண்டானால் பலஸித்தி சொல்லவொண்ணாதிறே. ராஜஸேவகார்ஹகன் ராஜஸேவாநுவர்த்தந மறியாதொழிந்தாலும் ராஜாநபிமதக்ருத்யங்களி லந்வயமில்லாதபடி வர்த்திக்கவேணுமிறே. அப்படி நில்லாதே ததநிஷ்ட வ்யாபாரங்களிலே அந்வயித்தானாகில் அவனுக்கும் அவன் பிதாவுக்குங் கூட விநாஶம்வருமிறே. அதுவென்? பிராட்டி காகத்தையும், ஆழ்வான் நாலூரானையும், ரக்ஷிப்பிக்குமதில்லையோவென்னா? ஒருக்காலபராதம்பண்ணிப் போக்கற்றுச் செயல்மாண்டு திருவடிகள்முன்னே விழுகையாலே [त्राहि त्राहीति भर्तारमुवाच दयया विभुम्] (த்ராஹித்ராஹீதிபர்த்தாரமுவாசதயயாவிபும்) என்று ப்ரார்த்தித்து ரக்ஷிப்பித்தாளத்தனையொழிய, அடுத்தடுத்து அதுவே யாத்ரையானால் ரக்ஷிப்பிக்கப்போகாதிறே. நாலூரான் உபத்ரவம்வருமென்றறியாதே தர்ஶநநிர்வாஹத்துக்காக அவஶாத் ஒருவார்த்தை சொல்லி பின்பு அநுதபித்துப் போருகையாலே அத்தை ஆழ்வானபராதமாகநினையாதே பொறுத்திருக்கச்செய்தேயும் ஆழ்வான்பக்கல் வ்யாமோஹத்தாலே பெருமாள் சீறினால் நான்பெற்றலோகம் நாலூரான் பெறவேணுமென்று ப்ரார்த்தித்தாரித்தனையொழிய புத்திபூர்வகாபராதம்பண்ணின வீரஸுந்தரனுக்கு பட்டர் ப்ரஸாதித்தாரென்றில்லையே. ஆனால் இதுவுமுண்டாயிருக்க அவனுக்கு என்னுடையவனன்றோ வென்று க்ஷமா வாத்ஸல்யாதிகளுண்டே அவையுங் கார்யகரமாகாதோவென்னா? அவனுக்குந் தனக்குமுண்டான ஸம்பந்தத்தை யறிந்து தத்விஶ்லேஷத்தில் ஸஹிக்கமாட்டாதே ஆர்த்தனானவனுக்கிறே ஸம்பந்தமுள்ளது. “ தான் நின்றநிலையை யநுஸந்தித்து (இந்நின்றநீர்மை யினியாமுறாமை) என்றும் (இன்றுநோனையென்றே - இத்தனைகாலமும்போய்க் கிறிபட்டேனென்றும்) [एहि पश्य शरीराणि] (ஏஹிபஶ்யஶரீராணி) என்றும் (இன்னங்கெடுப்பாயோ) என்றும் (நாட்டுமானிடத்தோடெனக்கரிது) என்றும் (நாட்டாரோடியல்வொழிந்து) என்றும் (ஓஉலகினதியல்வே) என்றும் வெருவினுன்னிலத்தில் பொருந்தாமைதோற்றிற்றுவந்த சேதநனுக்காயிற்று பக

ஸந்ஸம்பந்தமுண்டாகச் சொல்லலாவதென்று" மாணிக்கமாலையிலே அருளிச்செய்தாரிறே. இப்படியிராதவன்று நாராயணத்வ ப்ரயுக்த ஸம்பந்த மெல்லார்க்கும் உண்டானதொன்றாய் விஶேஷித்துச் சொல்ல லாவதொன்றில்லாமையாலே அவிஶேஷமாய்ப் போமிறே. இத்தால் இவனே லோகவிலக்ஷணனானால் விஶேஷ கடாக்ஷ பாத்ரனாய் மோக்ஷ யோக்யனும்படி முக்தனும். ப்ரயோஜநாந்தர பரனுமாய் ஸதாசார்ய ஸம்பந்தமுண்டானால் ப்ராதிகூல்ய நிவ்ருத்தியளவும் ஸகாமத்யங்களு டைய யோகிகளுக்குப்போலே இரண்டுமூன்று ஜந்மங்களுண்டாக்கி சரமஶரீரத்திலே ப்ராக்ருதப்ராக்ருதங்களெல்லாவற்றிலும் விரக்தியை ஜநிப்பித்து பரமார்த்தனும்படி பண்ணி முக்தனாக்கும். கேவல ஸம் ஸாரிகளைப்போலே சிரகாலம் விட்டுக்கொடானென்று அஸ்மதாசார் யோக்தம் [వింశత్యగ్నీంద్రసూర్యాణాం సప్తభిశ్శంకరస్యతు । త్రిభిఃప్రజాపతేర్భ- క్తః జన్మభిర్వైష్ణవో భవేత్ - విష్ణుభక్తిపరస్తద్వత్ సప్తజన్మసు మానవః । ఏకాన్తీ భగవద్యాజీ భూత్వాముక్తో భవిష్యతి] (விம்ஶத்யக்நீந்த்ரஸூர்யாணாம் ஸப்த பிஶ்ஶங்கரஸ்யது - த்ரிபி: ப்ரஜாபதேர்பக்த: ஜந்மபிர்வைஷ்ண வோபவேத் - விஷ்ணுபக்திபரஸ்தத்வத் ஸப்தஜந்மஸுமாநவ: - ஏகாந்தீபகவத்யாஜீ பூத்வாமுக்தோபவிஷ்யதி) என்று ஆசார்யவர ணம்பண்ணி வைஷ்ணவனானபின்பு பகவதேகாந்தியாமளவும் பிறந்து பூர்வபக்திவாஸனைவிடாதே க்ரமமாக முக்தனுமென்று சொல்லப்பட்ட திறே. இஜ்ஜந்மத்திலே அதிகாரியாம்போது ஆசார்யாபிமாநத்துக் கபேக்ஷிதம் ஸதாசார்யவரணம்பண்ணி தனக்குள்ளதெல்லாம் அங்குத் தைக்கு சேஷமாக்கி ப்ராதிகூல்யங்களெல்லாம் பரித்யஜித்து அருளாள ப்பெருமாளெம்பெருமானார் எம்பார் ஆழ்வான் ஆண்டான் வடுகநம்பி நஞ்ஜீயர் முதலானார்போலே ஆசார்யனை யொருக்ஷணமும் பிரியாதே பாதச்சாயைபோலே வர்த்தித்துக்கொண்டிருக்கவேணும். அப்படியான வதிகாரமில்லையானாலும் (மானுமோரிடத்திலும்) என்கிறபடியே மரண தசையிலேயானாலும் அநாதியாகத் தான்பண்ணிப்போந்த ப்ராதிகூல் யங்களை நினைத்து (நீசனேன்நிறைவொன்றுமிலேன் - நானேநாநாவித நரகம்புகும்பாவம்செய்தேன்) [అమర్యాదః క్షుద్రః - నృపశుః పాపస్యాస్పదం-పా పానాంప్రథమో స్మ్యహం] (அமர்யாத: க்ஷுத்ர: - ந்ருபஶு:பாபஸ்யாஸ்ப தம்-பாபாநாம்ப்ரதமோஸ்ம்யஹம்) என்னும்படியே ஸ்வதோஷங்களை யநுஸந்தித்துக்கொண்டு பரதோஷநிரீக்ஷணம் பண்ணப்போகாதே தனக்கு ஆசார்யகடாக்ஷத்தாலே பிறந்த ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் தன்னாலே வருமவையாக நினைத்து இறுமாயாதே பத்தஸம்ஸாரிகளி லும் நிக்ருஷ்டதமனாக தன்னை அநுஸந்தித்துக்கொண்டு பகவத்பாகவ

தரிடத்திலாகிலும் ஸம்ஸாரிகளிடத்திலாகிலும் தோஷம்காணுமளவி ல்ஸ்வதோஷமென்று நினைத்து வாய்விட்டு ஒருவர்க்கும் வெளியிடாதே மிகவும் பாகவதாபசாரபீருவாய் ஸ்வாபாவிகமாக அஹங்கார மமகார நிவ்ருத்தனாகும்படி நிர்ஹேதுக பகவத்கடாக்ஷம் பலித்ததாகில் இத் தேஹாவஸாநத்திலே முக்தனும். அக்காலத்துக்கும் தேஹத்திலும் தாரபுத்ராதிகளிலு மாஸக்தசித்தனாய் ஶப்தாதிவிஷயங்களில் வாஸ னைநிவர்த்திக்கப்பெறாதே அஹங்கார மமகாரங்களோடே ப்ரவர்த்தி த்துப் போந்தானாகில் ஜடபரதனைப்போலே ஜந்மாந்தரத்தை ப்ராபிக்கு ம். ஆசார்யஸம்பந்தமுண்டென்று ஈடேறவிரகில்லை. ஜ்ஞாநாநுஷ்டாந ங்களில்லாமையாலே வருங்குறை தீர்க்குமதே ஆசார்யக்ருத்யம். ஆஶ்ரய ணாத்பூர்வம் அநாதிகாலார்ஜித பாபங்களைப் பொறுப்பிக்குமதே புருஷ காரக்ருத்யம். பூர்வக்ருத ஸர்வாகங்களும் ப்ராமாதிகோத்தராகங்களு ம் பொறுத்து ரக்ஷிக்குமது உபாயக்ருத்யம். இது பரமார்த்தம்-மிகையாம் படி சொல்லுமவையெல்லாம் ப்ரஶம்ஸா பரவாக்யங்களாகையாலே அதிவாதங்களாயிருக்கும். ஆசார்யஸம்பந்தமானாலும் ஸித்தோபாயமா னாலும் சேதநனுடைய அந்தக்கரணம் பாஹ்யவிஷயங்களில் நின்று மீளும்படி பண்ணி (என்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்) என்னும்படி பகவத்விஷயத்தில் அத்யந்தாஸக்தசித்தனாய் பரமார்த்தனும்படி பண் ணியல்லது கார்யகரமாகாது. ஆகையாலேயிறே ஆழ்வார் (தொழுதெ ழென்மநனே) என்று உபக்ரமித்து (ஊனில்வாழுயிரேநல்லைபோ) என் றும் (நெஞ்சமேநல்லைநல்லை) என்றும் ஶ்லாகித்து (நீயும் நானு மின் னேர்நிற்கில்-மேல்மற்றோர் நோயும்சார்கொடான்) என்றும்(கனமேசொ லினே னிதுசோரேல்கண்டாய்) என்றும் ப்ரார்த்தித்து (அருள்பெறு வாரடியார்) என்கிறபாட்டிலே அவன் க்ருபைபண்ணாநின்றான், நானும் இஸ்ஸம்ஸாரத்தில் நிஸ்ப்ருஹனானேன், அவன்கொடுக்க நினைத்தா லும் நான் லபிக்கவேணுமென்றிருந்தாலும், நீ ப்ரதிகூலமானால் கார்ய மில்லையிறே. ஸௌஹார்த்தம் நித்யமாகச்செல்லாநிற்கச் செய்தேயு ம் உன்னுடைய ப்ராதிகூல்யத்தாலேயிறே அநாதிகாலமிழக்கவேண்டுகி றது. இனியாகிலும் நீ அஜ்ஞாநத்தைவிட்டு அவன் திருவடிகளைப்பற் றப்பார் என்று தலைக்கட்டுகையாலே மநோநைர்மல்யமில்லாதபோது பகவத்ப்ராப்தி யோக்யதையில்லையாய்விடுமென் றருளிச்செய்தது. ஸர்வேஶ்வரன் தான் தன்னைச்சேர்த்துக்கொள்ள நினைத்த வாத் மாவினுடைய மநஸ்ஸைத் திருத்தி விநியோகங்கொள்ளும்ப்ரகாரம் பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் என்று தொடங்கி ஒரு சூர்ணையிலே சொல்லப்பட்டதிறே. “ பெரும்பாழில் க்ஷேத்ரஜ்ஞன் பெருஞ்செ

ய்கலியாரேவ ஆளும் வன்குறும்பர் குடியேறிப் பெருங்குடியும் தங்கள் கருத்துள்ளேயாக்கி ப்படிந்துண்ணும் போகத்தைத்தாராதே பொறுக்கொணுப்போகத்துக்குக் காவல்செய்து குமைத்துத்திரித்து வீழ்த்து வலித்தெற்றி யருவியறுத்துக் கடனுயினவிறுப்பிக்கப் பாழ்த்தவிதியானவாறே தன்பால் மனம்வைப்பிப்பதாகத் தேய்ந்தறமன்னி ஒர்வாளுருவி வினைத்தூற்றை வேரறுவித்து தீக்கொளீக் கவ்வையெருவிட்டு அமுதவாறுதலைப்பற்றி ஈரியாய்க்கசிந்ததிலே ஈரநெல்வித்தி மெய்ந்நாற்றுக்களையையும் வேர்முதல்மாய்த்துப்பட்டிச்சேவதக்கி மீதுகொள்ளாமல் குறிக்கொள்வித்துக் கடல்புரையவிளைந்து தலைவணக்கினவாறே நாளுநாள் கோட்குறையாக நின்றாறியாமல் குந்தம் கொண்டு ஆராமையுண்டு காலக்கழிவாலே நிலத்துகாமல் பற்றறுத்துத் தண்டாலடித்துப் பதராறுத்துப் போர்த்ததோல்விடுத்து ஸூக்ஷ்மமொட்டும் நீரிலேகழுவி வேறோர்கலத்திட்டுப் பைந்தொடிமடந்தையரைக்கொண்டு ஷட்குணரஸாங்கமாக்கி வானோர்க்காராவமுதானவாறே முற்றுமுண்ண முன்னம்பாரித்து உகவேதோர் நாழிகைக்கொண்டு பெருகழுயலும் பத்தியுழவன் க்ருஷிபலமிறே)" என்று பக்திகர்ஷகனை ஸர்வேஶ்வர னிவ்வாத்மோஜ்ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணுகிற ப்ரகாரத்தை ஆசார்ய ஹ்ருதயத்திலே அருளிச்செய்தார். இத்தால் ஸம்பந்தமாத்ரம் போராதே தான் கூட்டிக்கொள்ளுகைக்கு நினைத்தவரை பரிபூர்ணாந்தஃகரணராம்படி (இருந்தான் கண்டுகொண்டெனதேழைநெஞ்சாளும்-திருந்தாத வோரைவரை தேய்ந்தறமன்னி) என்கிறபடியே விஷயங்களிலே சபலமாய்ப்போருகிற வென்னுடைய வேழைநெஞ்சையாளுகிற இந்த்ரியபுருஷரைவரும் நசிக்கும்படி ஸ்தாவரப்ரதிஷ்டையாக புள்ளுள் நிவஸித்து நிர்த்தநிகன் நிதிகண்டால் விட்டுப்போகமாட்டாதே கண்டுகொண்டிருக்குமாப்போலே தான் என்னைக் கண்டுகொண்டிருந்து துர்விஷயப்ராவண்யத்தைப் போக்கி க்ருபைபண்ணினானென்று ஆழ்வாரருளிச்செய்கையாலே தான் விஶேஷகடாக்ஷம்பண்ணி நிர்மலனைபின்பு மோக்ஷத்திலே கூட்டிக்கொள்ளுமென்கிற வர்த்தம் சொல்லப்பட்டது. அவன்படி யிதுவாயிருக்க (வெறிதேயருள்செய்வர்) என்று சொல்லுகிறதென்னென்னில்? வெறிதே அருள்செய்வது தான் ப்ரதம கடாக்ஷம் பண்ணும்போது [నాసౌపురుషకారేణ నచాప్యన్యేన హేతునా - కేవలం స్వేచ్ఛయైవాహం ప్రేక్షే కఞ్చిత్కదాచన] (நாஸௌபுருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா -கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித்கதாசந) என்று நிர்ஹேதுகமாக கடாக்ஷம்பண்ணிப் போருமென்று சொன்ன தித்தனையொழிய ப்ராப்திதசையிலும் பத்தஸம்ஸாரியாய் து

ர்விஷய ப்ரவணனும் அஹங்கார மமகார வஶ்யனும் பாகவதாபசாரபர னும் திரியாநின்றாலும் (வெறிதேயருள்செய்வர்) என்றால் வைஷ்ணவனு கவும் பணியில்லையிறே. இச்சேதநன் பகவத்போகார்ஹனும்போது வைஷ்ணவத்வமாத்ரம் போராது ப்ரபந்நனுகவேணும். அதுவும்போரா து ஏகாந்தியாகவேணும். அதுவும்போராது பரமைகாந்தியாகவேணும். அஹங்கார மமகாரங்கள் ஸவாஸநமாக நிவ்ருத்தமாகவேணும். விஹி தநிஷித்த விஷயப்ராவண்யம் நிவ்ருத்தமாகவேணும். அதுசெய்யுமிடத் தில் விருத்தமென்று த்யஜிக்கப்போகாது [க்ஷேத்ராணி மித்ராணி] (க்ஷே த்ராணி மித்ராணி) என்கிற ஶ்லோகத்தில் அவஸ்தை பிறக்கவேணு ம் ஸ்வரூபங்குலையாமைக்கென்று ஸ்வரூபஸித்த்யர்த்தமாக இவையெ ல்லாம் வேணுமென்று ஒருக்கால் சொன்னப்போலே பலகால் சொல்லி க்கொண்டு ஆழ்வார்களும் ஆசார்யர்களும் சேதநனுடைய ஹிதத்துக் காக பட்டதனபட்டு ஒன்றிரண்டிலன்றிக்கே பல ப்ரபந்தங்களிலும் ஒரு வர்சொன்னத்தை வேறொருவர்சொல்லி ஏககண்டமாக கூப்பிட்டுக்கொ ண்டு ஸகலேதர பரித்யாகம் விதிக்க ஹேதுவில்லையிறே. ஸர்வேஶ்வர ன் தானும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் சேதநோஜ்ஜீவநத்துக்கு பண் ணுகிற க்ருஷி இதுவாயிருக்க சிலர் ஸர்வேச்வரனுக்கு ஸ்வாஶ்ரிதர் நிஷி த்தாநுஷ்டாநம்பண்ணினுல் மிகவு முகப்பாயிருக்கும் தன் குணங்களுக் கு ப்ரகாஶகமென்று [தோஷாயத்யபிதஸ்யஸ்யாத்] (தோஷோயத்யபிதஸ்ய ஸ்யாத்) என்று சொன்னனேயென்று வித்யாபலத்தாலே குதர்க்கங்க ளைச் சொல்லிக்கொண்டு வேதஶாஸ்த்ர புராணேதிஹாஸாதிகள் கரை கட்டாக் காவேரியாகையாலே பாஹ்ய குத்ருஷ்டிகள் விபரீதார்த்தங்க ளைச் சொன்னப்போலே அதில் சொன்னதொன்றாயிருக்க வேறேசில வர்த்தங்களைச் சொல்லிக்கொண்டு தமக்கிஷ்டமானபடி ஸஞ்சரிப்பர் கள் - அவர்கள் சொல்லும்படி யென்னென்னில்? மந்த்ரத்திலே ஸ்வர க்ஷணஸ்வாந்வயநிவ்ருத்தி சொல்லப்பட்டதிறே. நிஷித்தங்கள் கூடா தென்று த்யஜித்தால் ஸ்வரக்ஷணஸ்வாந்வயம் வருமாகையாலே தன் னுடைய ரக்ஷணத்தில் தனக்கு ப்ராப்தியில்லையென்று சொல்லுகிற மந்த்ரத்துக்கு மிதுவே பொருளென்றும், தத்விவரணங்களான த்வய சரமஶ்லோகங்களுக்கும் இதுவே தாத்பர்யமென்றும், இல்லையாகில் சர மோபதேஶம்பண்ணி [இதந்தேநாதபஸ்காய நாபக்தாய கதாசந] (இதந் தேநாதபஸ்காய நாபக்தாயகதாசந) என்று கைப்பட்டபொருளை கடலி லேவீழ்த் தோமென்று வயிறுபிடிக்குமோ அதுக்குக் கருத்தென்னெ ன்றும் [சோதநாலக்ஷணோர்த்தோதர்ம:] (சோதநாலக்ஷணார்த்தோதர்ம:) என்று ம் தர்ம்மம் விதிசோதிதமாயிருக்கும் [ஸர்வதர்மாந் பரித்யஜ்ய ஸ்வதர்ம:]

ஷ்பஜ்ஞம்](ஸூக்ஷ்மோபரமதுர்ஜ்ஞேயஃ ஸதாம் தர்மஃப்லவங்கம)என்று ஸத்துக்களாசரிக்குமது பரமதுர்ஜ்ஞேயமான தர்மஸூக்ஷ்மமாயிருக்கும். அஹங்கார ராஹித்யத்துக்கு ஹேதுவாகையாலே இந்த நிஷித்தாநுஷ்டானம் தர்மஸூக்ஷ்மமென்றும் வேதசாஸ்த்ரங்களில் [ప్రాజ్ఞమజ్ఞైవై సర్వాదేవతాః] (ப்ராஜ்ஞமஜ்ஞைவைஸர்வாதேவதாஃ) என்று சொல்லாநிற்க மஹர்ஷிகள் தர்மஸூக்ஷ்மத்தைப் பார்த்து அஹங்கார ராஹித்ய ஜநமங்களென்று [స్త్రియస్సాధుః శూద్రస్సాధుః] (ஸ்த்ரியஸ்ஸாது:ஶூத்ரஸ்ஸாது:) என்றும் [శ్వపచోపి మహీపాల విష్ణుభక్తో ద్విజాధికః] (ஶ்வபசோபிமஹீபால விஷ்ணுபக்தோத்விஜாதிகஃ) என்றும் சொன்னாற்போலே இதுவும் அஹங்கார நிவ்ருத்திக்கு ஹேதுவாகையாலே அவஶ்யம் நிதுவேணுமென்று இன்னமும் அநேகமாக கேழ்ப்பார் செவிசுடும்படியான விபரீதார்த்தங்கள் சொல்லிக்கொண்டு தாரபுத்ராதிகளையும் விஷயப்ராவண்யத்தையும் அஹங்காரமமகாரங்களையும் விடமாட்டாதே விட்டால் ஸ்வரூபக்ஷணேஸ்யாம்வயம் வருமென்று (வீடுமின்முற்றவும் - நீர்நுமதென்றிவைவேர்முதல்மாய்த்து-பற்றிலையாயவன்முற்றிலடங்கே) என்றும் (கழிமின்தொண்டர்கள் கழித்துதொழுமின்) [క్షేత్రాణి మిత్రాణి - పితరం మాతరం దారాన్ - సర్వధర్మాంశ్చ సంత్యజ్య సర్వకామాంశ్చ సాక్షరాన్ । లోకవిక్రాంతచరణౌ శరణం తే వ్రజం విభో] (க்ஷேத்ராணிமித்ராணி - பிதரம்மாதரம்தாராந் - ஸர்வதர்மாம்ஶ்சஸந்த்யஜ்யஸர்வகாமாம்ஶ்சஸாக்ஷராந்-லோகவிக்ராந்தசரணௌ ஶரணம்தேவ்ரஜம்விபோ)என்று ஸகலேதரபரித்யாகபூர்வக ஸ்வீகாரம் வித்யநுஷ்டானங்களாலே காட்டிக்கொடுக்கிற வாழ்வாராசாரியர்களுடைய ப்ராக்தநஶிஷ்டாசாரங்களெல்லாம் பஸ்மமாக்கி திரியாநின்றார்கள். அது பகவந்மாயாகார்யமென்றே கொள்ளவேணும். அதுண்டானால் ஸர்வேஶ்வரனும் மயர்வற மதிநல மருளப்பெற்ற வாழ்வார்களு மாசார்யர்களும் சேதநோஜ்ஜீவநத்துக்காகக் கூட்டிவிட்டுக்கொண்டு க்ருஷிபண்ணுகைக்கு ஹேதுவில்லையிறே. இதுக்கு ப்ரமாணம்வேணுமோ, ஒருவனுக்கு ப்ரியதமையானவள் மற்றொருவனை யபேக்ஷித்தால் அவனுக்கிவளிடத்தில் ருசிபிறக்குமோ. அவன் ப்ரபதநத்துக்கும் அநந்யமநந்யமநந்யமென்று சொல்லாநிற்க அந்யஸங்க மிவனுக்கிஷ்டமென்னில் அது விபரீதஜ்ஞாநகார்யமென்று தோற்றுதோ. ஆகையாலே [విషయేష్వతిసంరాగో మానసో మల ఉచ్యతే - తేష్వేవ వీతరాగో యః స నిర్మల ఉదాహృతః] (விஷயேஷ்வதிஸம்ராகோ மாநஸோமலஉச்யதே - தேஷ்வேவவீதராகோய ஸ்ஸநிர்மலஉதாஹ்ருதஃ) என்று இதரவிஷயாநுராகம் ஸமித்தாலொழிய நிர்மலனாகமாட்டான், நிர்மலனானாலொழிய போகார்ஹனாகமாட்டான் இந்த மநோநைர்மல்யம்ஸித்

திக்கைக்கு மந்த்ரத்ரயார்த்தாநுஸந்தாநத்தாலும் ஆழ்வார்களுடைய
வருளிச்செய லர்த்தாநுஸந்தாநத்தாலும் போதுபோக்கிக்கொண்டு தா
னிருந்தவிடம் ஸம்ஸாரிகளறியாதபடி ஏகாந்தசீலனாய் அர்த்தாநுஸ
ந்தாந யோக்யதையில்லையாகில் தன்னெஞ்சிலே தோற்றுகிறவர்த்தங்க
ளை பரமார்த்தங்களென்று சொல்லுகிறஅப்ராமாணிகரோடே கூடாதே
அஹங்காரார்த்தகாமோபஹத ரல்லாத பரமஸத்வநிஷ்டரான ஜ்ஞாநா
நுஷ்டாந ஸம்பந்நரோடே ஸஹவஸித்துக்கொண்டு இருக்கவேணும்.
இனி அவனுடைய க்ஷமாகுணமும் ஒருக்கால் பூர்வாபராதங்களை பொ
றுக்கைக்கு சரணவரணம்பண்ணி பின்பு புத்திபூர்வக நிஷித்தப்ரவ்ருத்
திவாராம லிருந்தாலொழிய [दृक्क्षमामीदृशे जने] (திக்க்ஷமாமீத்ருஶே
ஜநே) என்று விட்டுப்போம். அவன் க்ருபாபரனாகையாலே "நெடுநாளங்
யபரையான பார்யை லஜ்ஜாபயங்களின்றிகே பர்த்ருஸகாஶத்திலே
நின்று என்னை அங்கீகரிக்கவேணுமென்று ப்ரார்த்தித்தாப்போலே இ
வன்பண்ணுகிற ஶரணவரணம் அபராதகோடிகடிதமானாலும் அநாதி
காலார்ஜிதபுத்திபூர்வக ப்ராதிகூல்யங்களெல்லாம் க்ஷமையாலே பொ
றுத்தால் இனி செய்யவொண்ணாதென்று பயப்பட்டிராதே(பயமற்றிருந்
து செய்வர்கள் தாம்பாவத்திறம்)என்கிறபடியே அடுத்தடுத்து அபராத
ங்களிலே யங்வயித்து [क्षेत्राणि मित्राणि] (க்ஷேத்ராணி மித்ராணி) என்
றுதுடங்கி [भवन्ति सर्वे प्रतिकूलरूपाः] (பவந்திஸர்வே ப்ரதிகூலரூபாஃ)
என்று தாரபுத்ராதிகள் ப்ராதிகூலங்களென்று அறிந்துவைத்தும்
[पितरं मातरं दारान्] (பிதரம்மாதரம்தாராந்) என்றுதுடங்கி ப்ரதிகூல
ங்களெல்லாம் விட்டு உன் திருவடிகளைப்பற்றுகிறேனென்று பொய்
சொல்லி துர்வாஸனையாலே பின்னையும் விடமாட்டாதே ப்ரத்யஹமு
ம் அப்படி தொழவந்தபோதெல்லாம் ஸாந்த்வகப்ரியவசநங்கள் சொல்லி
க்கொண்டு [दुःखावहोऽहमनिशं तव] (துஃக்காவஹோஹமநிஶம்தவ)என்
று அக்ருத்யகரணஶீலனுமாய் துர்விஷயப்ரவணனுமாய் ஶரணாகதனு
மாய் பற்றவும் விடவும் யோக்யதையில்லாதபடி துஃக்கப்ரதனானால் க்ஷ
மைஜீவிக்கமாட்டாதிறே. இனி வாத்ஸல்யமாவது, வத்ஸத்தின்பக்கல்
தேநுவிருக்குமிருப்பாகையாலே அந்த தேநுவானது தன் வயிற்றிலே
பிறக்குமளவிலுள்ள மாலிந்யமெல்லாம் போக்யமாக ஸ்வீகரித்து தத்தே
கதாரகமாக வர்த்திக்குங்காலத்திலே அத்யாதரம்பண்ணிக்கொண்டு தி
ரியுமதொழிய தன் ஸ்தந்யத்தைவிட்டு புல்லும் நீருங்கொண்டு திரிகிறவ
ளவில் சாணகச்சாற்றை யுடம்பிலே பூசிவந்தால் அத்தைக்கொள்ளமா
ட்டாதிறே. அப்படியே இந்த சேதநன் தன்னையாஶ்ரயிக்க வருகிறத
ஶையில் இவனிடத்திலுண்டான தோஷங்களை போக்யமாகக்கொண்டு

தத்தேகாநுபவபரனாய் ப்ரவர்த்திக்குங்காலத்தில் [𑌯𑍋𑌗𑌕𑍍𑌷𑍇𑌮𑌂 𑌵𑌹𑌾𑌮𑍍𑌯
𑌹𑌮𑍍] (யோகக்ஷேமம்வஹாம்யஹம்) என்று இவன் ஹாரமெல்லாம் தா
னே யேறிட்டுக்கொண்டு திரியுமதொழிய உத்தரகாலத்தில் புத்திபூர்வ
கப்ரவ்ருத்திகளை போக்யமாகக்கொள்ளுதல் இவன் நிரந்தரவிஷயப்ர
வணனானால் இவன் ஹாரத்தைத் தானேறிட்டுக்கொள்ளுதல் செய்யானெ
ன்னுமர்த்தம் தோன்றாநின்றதிறே. ஆகையாலே எல்லாம்விட்டு பரமா
ர்த்தனானவொழிய இவன்பக்க லவனுக்கு ருசிபிறவாது. அவன் ரக்ஷி
க்கைக்கு பரிகாரம் ஆர்த்தியல்லதில்லை. “இது குறைவற இருவர்ஸ்வரூப
மும்குறைவற”மென்று ஆச்சாம்பிள்ளை யருளிச்செய்தாரிறே.‘ஆகவித்
தால் ப்ராதிகூல்யநிவ்ருத்தியும் ஆர்த்தியுமில்லாதவனுக்கு ஸதாசார்யா
பிமாநமும் புருஷகாரமும் ஸம்பந்தமும் கார்யகரமாகாது.க்ஷமாவாத்
ஸல்யங்களும் ஜீவிக்கமாட்டாதே விடுமென்றதாயிற்று. ஆகையாலே
ப்ரபந்நனுக்கு அக்ருத்யகரணாதி சதுர்விதநிஷித்தாநுஷ்டாநமும் உபா
யாந்தரப்ரதிபத்தியும் ப்ரயோஜநாந்தரங்களான தாரபுத்ராத்யைஹிக
போகங்களும் ஸ்வர்காதி பரலோகஸாதகங்களும் ஸ்வாத்மாநுபவஸா
தகமான விவையெல்லாம் பரித்யஜித்து (சேலேய்கண்ணியரும் பெருஞ்
செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையும் அவரேயினியாவாரே)
என்றிருக்கவேணும். ப்ரபந்நனுக்கு உபாயாபாயப்ரவ்ருத்திகளிரண்டு
ம் த்யாஜ்யமென்கிறவர்த்தம் தீர்ப்பாரையாமினியில் ஸ்வாபதேசாந்யா
பதேசங்களாலே ஆழ்வார் தாமே யருளிச்செய்தாரிறே. ஸ்வாபதே
சத்தில் ஸித்தோபாயம் சடக்கெனப்பலியாமையாலே உபாயாந்தரப்ர
வ்ருத்திகளாலே தேவதாந்தரங்களை யாராதித்து [𑌸𑍋𑌮𑌪𑌾𑌃-𑌪𑍂𑌤𑌪𑌾𑌪𑌾𑌃]
(ஸோமபா:பூதபாபா:) என்கிறபடியே ஸோமபாநாதிகளாலே நிஷ்
பாபராகவேணுமென்று தததநுஷ்டாநப்ரவர்த்தகரான ஸாதநாந்தரநிஷ்
டரைக் கூட்டிக்கொண்டு உபாயாநுஷ்டாநத்துக்கு உபக்ரமிக்கிறவள
வில் ஸம்பந்தஜ்ஞாநம் மேலிட்டுவந்து அத்யவஸாயத்தினுடைய கல
க்கம் போம்படி நீ இப்படி ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தியிலந்வயிக்
கப்போமோ அநந்யார்ஹ சேஷத்வாத்யாகாரஷட்கத்தாலே பிராட்டி
யோடொத்த பரிசுத்தாத்ம ஸ்வரூபத்துக்கு தேவதாந்தரஸாதநாந்தரங்
களும் தந்நிஷ்டருடையஸஹவாஸமும் ஸ்வரூபநாசகமாயித்தனையொ
ழிய ப்ராப்திஸாதநமாமோவென்று ஸ்வரக்ஷணப்ரவ்ருத்திகளை தவிர்க்
குமதாயிருக்கையாலே ப்ரபந்நனுக்கு உபாயாந்தரப்ரவ்ருத்தியாகாதெ
ன்று சொல்லிற்றாயிற்று. அந்யாபதேசத்தில் நாயகனை ப்ராபிக்கப்
பெறாதே நாயகிமோஹங்கதையாய்க்கிடக்க தாயார்கலங்கி பெண்பிள்
ளைமோகம் நிக்ருஷ்டதேவதாராதநத்தாலும் க்ஷுத்ரதேவதைகளுக்கு

ப்ரியமான மத்யமாம்ஸாதிகளாலும் தீர்க்கவேணுமென்று கட்டுவிச்சி சொன்னபடியே நிஷித்தாநுஷ்டாநத்துக்கு உபக்ரமிக்க தோழியானவள் கடுகவந்து அய்யோவய்யோ இவள் ப்ரக்ருதி அறிந்தநீங்கள் ஸ்வரூபநாஸகங்களான நிஷித்தப்ரவ்ருத்திகளி லன்வயிக்கக்கூடுமோ இப்பெண் பிள்ளைக்கு க்ஷுத்ரதேவதாப்ரஸங்கமுண்டோ [ద్రవ్యంనిస్వసురాదిదై వతమతి క్షుద్రంచబాహ్యాగమో దృష్టిర్దేవలకాశ్చదేశికజనా ధిగ్ధిగ్ధిగేషాంక్రమః] (த்ரவ்யம்நிஸ்வஸுராதிதைவதமதி க்ஷுத்ரஞ்சபாஹ்யாகமோ - த்ருஷ்டிர்தேவலகாஸ்சதேஸிகஜநா திக்திக்திகேஷாம்க்ரமஃ) என்று தன்னோட்டை ஸ்பர்ஸத்தாலே தன்னோடொக்கப் பண்ணுகிற அத்யந்த நிஷித்தத்ரவ்யங்களான மத்யமாம்ஸாதி ஸ்பர்ஸமும் கட்டுவிச்சி கீழ்மகன்முதலான விபரீதார்த்தபோதகருடைய ஸ்பர்ஸமும் பொறுக்குமோ பகவந்நாம ஸங்கீர்த்தநமும் பரமவைதிகராய் ப்ரமாணபாரதந்த்ரரான ஸ்ரீமஹாபாகவத பாதரேணு ஸ்பர்ஸமும் மொழிய மற்றொன்று கூடுமோ நம்முடைய வைஷ்ணவகுல மர்யாதைக்கு நிஷித்தப்ரவ்ருத்திகள் சேருமோவென்று தீர்ப்பாரையாமினியென்று துடங்கி இவள் நோயை யோர்த்துப்பார்த்தால் பார்த்தஸாரதியானவனுடைய வாஸ்ரித பாரதந்த்ர்யத்தாலே மோஹங்கதையாளுள். இது க்ஷுத்ரதேவதாப்ரஸங்கமன்று அவனுடைய சிந்ஹங்களைச் சொன்னால் இவள் மோஹந்தீரும் நீர் அத்தைச்செய்யாதே விப்ரதிபந்நஹாஷிணியானகட்டுவிச்சிசொல்கொண்டு செய்யவொண்ணாது வைஷ்ணவத்வ ஹாநிகரங்களான நிஷித்தக்ருத்யங்களிலே அந்வயித்து மத்யமாம்ஸம் தூவிக்கொண்டு இவள் ஜீவிக்கைக்கு இதுவே திவ்யௌஷதமாமென்று ராஜஸ தாமஸ தேவதாப்ரியங்களான நிஷித்தாந்நங்களை களனிழைத்து தைவாவிஷ்டையாய் இவளாடுகிறகூத்தா லிவளைப் பெறப்போமோ இவள் ரூபஸ்ரீநஸித்துக் கொண்டு வாராநின்றது இந்த நீசஸ்பர்ஸத்துக்கு ப்ராயஸ்சித்தமாக பாகவத ஸ்ரீபாதரேணுவை இவள்மேலே வைக்கப்பாருங்கோள் பிராட்டியோடொப்பாளான இப்பெண்பிள்ளை நோய்தீர்க்கைக்கு அருமருந்தென்று மத்யமாம்ஸங்களையிட்டு சுணங்கையெறிந்து நுந்தோள்குலைக்க நீர்படுகிறபாடோவிது அய்யோ அன்னைமீர்காள் வாய்புகுசோறான விவள் நசிக்கும்படி இந்த கழுதையினுடைய வுதடாட்டம் கண்டவித்தால் ப்ரயோஜநமென் அப்ராமாணிகையான விவளுடைய விருத்தவாதங்களைவிட்டு வேதவிதக்ரேஸராய் ப்ரமாணபாரதந்த்ரரான ஜ்ஞாநாதிகரை புருஷகாரமாகக்கொண்டு நித்யஸூரி நிர்வாஹகனை யாஸ்ரயித்து இவள் நோய்தீர்த்துக்கொள்ளாதே மத்யபாநம்பண்ணி மெய்மறந்து சீதம்பாடுகிற விவளோடே நீருங்கூடி கீழ்மகன் வா

த்யத்தின்கீழ்கூத்தாடுகிற இப்பொய் நான்காணமாட்டேன், கண்ண பிரானுடைய கழலை வாழ்த்தினல்இவள் நோய்தீரும், ஸ்வரூபப்ராப்தமுமாம், நான்சொன்னபடி செய்திகோளாகில் இவள் ஜீவித்து தொழுதாடுமென்று நிஷித்தாநுஷ்டாநமும் தந்நிஷ்டருடைய ஸஹவாஸமும் நிவர்த்திப்பிக்கையாலே ப்ரபந்நனுக்கு அக்ருத்யகரணாதி நிஷித்தாநுஷ்டாநமும்தன்னிஷ்டருடைய ஸஹவாஸமும் த்யாஜ்யமென்று சொல்லிற்றாயிற்று. ஆனாலவனுக்கும் தனக்குமுண்டான ஶரீராத்மபாவமும் அவயவாவயவி ரூபைக்யமும் அறிந்தவன் பண்ணுகிற வ்யாபாரங்களெல்லாம் அவனதேயாய் தத்கதபுண்யபாபங்க ளிவனுக்கு வாராதென்று ப்ரமாணஞ்சொல்லாநின்றதேயென்னில்? இதுக்கர்த்தம் கீழ்ச்சொன்னோமே. ஸதா பரகுணாவிஷ்டனாய் மநோபுத்திகளிரண்டு மவனிடத்திலே பர்யவஸித்து மெய்மறந்து புத்திபூர்வ ப்ரவ்ருத்திகளொன்றுமின்றிக்கே [యస్య నాహంకృతో భావః] (யஸ்யநாஹங்க்ருதோ பாவ:) என்கிறபடியே ப்ரவர்த்தித்தானாகில் அவனுக்குவாராது. இந்த ஜ்ஞாநமாத்ரம் வேதாந்தஜ்ஞாநவாஸனை யுடையாரெல்லாருக்குமுண்டு. தததநுரூபாநுஷ்டாநமுண்டானாலிறே அநுபவிப்பது. இந்தஜ்ஞாநம் ராவணனுக்குண்டாயிருக்கச் செய்தேயும் பரஹிம்ஸா பரதாரபரிக்ரஹ பரத்ரவ்யாபஹார அபேயபாந அபக்ஷ்யபக்ஷணாதிகள் மாறாதே நடக்கும்படியான அநுஷ்டாநம் இதிஹாஸாதிகளிலே காணாநின்றோமிறே. [ఆధేయత్వవిధేయత్వ శేషత్వరసతాశ్రయాః । శ్రీపతేర్ముఖ్యతనవః పరమైకాన్తినస్స్మృతాః] (ஆதேயத்வவிதேயத்வ ஶேஷத்வரஸதாஶ்ரயா: - ஸ்ரீபதேர்முக்யதநவ: பரமைகாந்திநஸ்ஸ்ம்ருதா:) என்று ததேகசேஷமாய்த தேகபரதந்த்ரமாய் ததேகதாரகமாயிருக்கிற ஶரீரலக்ஷணங்களுண்டான பரமைகாந்திகளையிறே அவனுக்கு சரீரபூதராகச்சொல்லுவது. [రాగాదిదూషితే చిత్తే నాస్పదీ మధుసూదనః। నబధ్నాతి రతిం హంసః కదాచిత్కర్దమామ్బుని] (ராகாதிதூஷிதே சித்தே நாஸ்பதீ மதுஸூதந: - நபத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித்கர்தமாம்பஸி)என்று ராகாதிதூஷிதசித்தன் சரீரபூதனாகமாட்டானே, ஶரீரபூதனானபரமைகாந்தி [భోగాః పురన్దరాదీనాం తే సర్వే నిరయోపమాః] (போகா:புரந்தராதீநாம் தேஸர்வேநிரயோபமா:) என்று இஹலோகாத்விலக்ஷணமான ஸ்வர்காதிபோகங்களும் ஸ்வாத்மாநுபவஸுகமும் நரகோபமமாகநினைத்திருக்குமதொழிய [అమేధ్యపూర్ణం క్రిమిజాలసఙ్కులం స్వభావదుర్గన్ధమశౌచమధ్రువం। కళేబరం మూత్రపురీషభాజనం రమన్తి మూఢా న రమన్తి పణ్డితాః] (அமேத்யபூர்ணம் க்ரிமிஜாலஸங்குலம் ஸ்வபாவதுர்கந்த மஶௌசமத்ருவம் - களேபரம் மூத்ரபுரீஷபாஜநம் ரமந்திமூடா நரமந்தி பண்டிதா:) என்று மூடரைப்போலே ஹேயதுர்

விஷயப்ரவணனாய் ஸம்ஸாரிகளும் த்யாஜ்யமாக நினைக்கிற நிஷித்த வ்யாபாரத்தைப் பண்ணுனிறே [𑌅𑌕𑍃𑌤𑍍𑌯𑌂 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌃 𑌪𑌾𑌪 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌤𑌃 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑍀 𑌪𑌰𑌮𑍈𑌕𑌾𑌨𑍍𑌤𑍀 𑌰𑍁𑌚𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚 𑌸𑌂𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍] (அக்ருத்யம்வைஷ்ணவஃபாப புத்யாஶாஸ்த்ரவிரோததஃ - ஏகாந்தீ பரமைகாந்தீ ருச்யபாவாச்சஸந்த்யஜேத்) என்று அக்ருத்யகரணாதி நிஷித்தாநுஷ்டாநம் ப்ராப்யப்ரதிபந்தகமென்கிற ஸயத்தாலே வைஷ்ணவனும் ஶாஸ்த்ரவிரோதமாகையாலே ஸகவதாஜ்ஞாதிக்ரமணம் வருமென்கிற ஸயத்தாலே ஏகாந்தியும் ஹேயமாய்தோற்றி ருச்யஸாவத்தாலே பரமைகாந்தியும் த்யஜிப்பரென்று சொல்லாநின்றதிறே. இருவரும் ருசிசெல்லாநிற்கச் செய்தே விரோதஸயத்தாலே த்யஜிப்பர்கள். சரமாதிகாரிக்கு ப்ராப்யருசிகண்ணழிவற உண்டாயிருக்கையாலே ஸீத்யாவிடுகையன்றிக்கே ருச்யஸாவத்தாலேவிடும். இப்படியான வதிகாரியினுடைய க்ருத்யங்களிறே அவன் தன்னதாக வஹிமாநித்திருக்கிறது. இது பொருளல்லவாகில் ஸகலசேதநாசேதநங்களு மவனுக்கு ஶரீரமேயாய் இவர்களெல்லாருடைய க்ருத்யங்களுமவனதேயாய்விடும். அவைபோலன்றிக்கே ஜ்ஞாநமுண்டிறே இவர்களுக்கென்னில்? அந்தபக்ஷத்திலே வேதாந்தஜ்ஞாநமுடைய ராவணாதிகளுடைய வாஸாரக்ருத்யங்களு மவனதேயாய்விடும். ஆகையாலே ஸம்பந்தமாத்ரம் போராது, ஜ்ஞாநமும்போராது, ததநுரூபாநுஷ்டாநமுண்டாகவேணும். சரமஶ்லோகத்தில் ஸர்வதர்மபரித்யாகபூர்வக ததேகோபாயதாத்யவஸாயமே அதிகாரிக்ருத்யம். விரோதிநிவர்த்தகத்வம் உபாயஸூதனுடைய க்ருத்யமென்றுசொல்லாநிற்க அத்யவஸாயமுண்டானாலும் ஆர்த்தியில்லாதபோது ப்ராபிக்கைக்குயோக்யனன்றென்று சொல்லுவானென்னென்னில்? உபாயாதிகாரத்துக்கு அத்யவஸாயமேபோரும். உபேயாதிகாரத்துக்கு ஐஹிகாமுஷ்மிகாதிஸகலஸோகவிரக்தியும் வேணும். "உபாயாந்தரங்களைவிட்டுசரமோபாயத்தைப்பற்றினாப்போலே உபேயாந்தரங்களான ஐஶ்வர்யகைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை ஆர்த்திக்கிறது" என்று உபேயப்ரதிபாதகமான உத்தரவாக்யத்துக்கு அர்த்தம் சொல்லப்பட்டதிறே. த்வயபூர்வோத்தரவாக்யங்களில் சொல்லுகிற வுபாயாதிகாரங்களுண்டானாலிறே உத்தேஶ்யனாவது. இவ்வுபாயம் ப்ராப்யாந்தரங்களுக்குமொக்குமாகையாலே அத்யவஸாயம் ப்ரயோஜநாந்தரபரருக்குமுண்டே அத்யவஸாயமாத்ரத்தாலே ஸகவத்ஸோகத்துக்கு அர்ஹனாகமாட்டான். (கடையறப்பாசங்கள்விட்டபின்னை யன்றி யவனவைகாண்கொடானே) என்று ஸகலேதர பாஹ்யவிஷய பரித்யாகாநந்தரத்திலொழிய முக்திஸூமியை காணவுங் கொடானென்று ஆழ்வார் தாமே யருளிச்செய்தா

ரிறே. ஆகையாலே அங்குச்சொல்லுகிறது உபாயாதிகாரமாத்ரமென்று கொள்ளவேணும். அந்த ஶ்லோகத்தி லிது சொல்லாதொழிகிறதென்னென்னில்? இந்த ஶ்லோகத்துக் குபாயத்துக் கபேக்ஷிதமான த்யாக ஸ்வீகாரங்கள் பூர்வார்த்தத்தாலே சொல்லி உத்தரார்த்தத்தாலே அதுக்கு பலமாக ப்ராப்திப்ரதிபந்தக ஸகலபாபநிவ்ருத்திமாத்ரம் சொல்லி ப்ராப்தியைச் சொல்லாதொழிந்தாலும் கீழ்ஶ்லோகத்தில் [మామేవైష్యసి] (மாமேவைஷ்யஸி) என்று சொல்லுமது இதுக்கு அர்த்தமாகக்கொள்ளுமாப்போலே பலம் சொல்லுகிற இந்த ஶ்லோகத்தில் பூர்வார்த்தத்தாலே சொல்லுகிற உபாயாதிகாரத்தைக் கொள்ளவேணும் [మన్మనాభవ మద్భక్తో మద్యాజీ మాం నమస్కురు । మామేవైష్యసి సత్యం తే ప్రతిజానే ప్రియోஉసి మే] (மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீ மாம்நமஸ்குரு-மாமேவைஷ்யஸிஸத்யந்தே ப்ரதிஜாநேப்ரியோஸிமே) என்று மத்கமநஸ்கனாய் மதுபயப்ரீதியுக்தனாய் மத்கைங்கர்ய நிரதனாய் மதேகஶரணனாயிருந்தாயாகில் உன்னுடைய பாபநிவ்ருத்யர்த்தமாக நீ யத்நம்பண்ணவேண்டா என்னைப் பெறுகிறாயென்று ஸத்யமாக வர்த்தத்தை அருளிச்செய்து இஶ்லோகத்தில் சொன்ன ததேகஶரணத்வ ரூபோபாயாதிகாரத்துக்கு அபேக்ஷிதமாயிருந்ததாய் இதில் சொல்லாத உபாயாந்தர ஸவாஸநத்யாகத்தை [సర్వధర్మాన్పరిత్యజ్య మామేకం శరణం వ్రజ] (ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம்வ்ரஜ) என்று விதித்து அதிலுத்தரார்த்தத்தில் [మామేవైష్యసి] (மாமேவைஷ்யஸி) என்று சொன்ன பலத்துக்கு அபேக்ஷிதமாய் இதில் சொல்லாத ப்ராப்திப்ரதிபந்தக நிவ்ருத்தியை [అహంత్వాసర్వపాపేభ్యో మోక్షయిష్యామి] (அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்று அருளிச்செய்கையாலே இவ்விரண்டு ஶ்லோகங்களும் பரஸ்பராபேக்ஷிதங்களா யேகார்த்தமாயிருக்கும் [యచ్ఛ్రేయసితథాకురు] (யச்ச்ரேயஸிததாகுரு) என்ன, வநந்தரம் காயக்லேஶங்களுமாய் ஸ்வரூபவிருத்தங்களுமான கர்மயோகாத்யுபாயங்களுக்கு நான் அஶக்தனென்று ஶோகித்தபின்பு [సర్వగుహ్యతమం భూయః - శృణు మే పరమం వచః] (ஸர்வகுஹ்யதமம்பூயஃ ஶ்ருணுமேபரமம்வசஃ) என்றுபதேஶித்தவை யாகையாலே இவ்விரண்டு ஶ்லோகங்களும் விவ்ர்ய விவரண ரூபங்களாய் ஏகார்த்தங்களாயிருக்கும். ஆகையாலே கீழ்ஶ்லோகத்தில் பலமே இதுக்கு பலமாகையாலே அதில்சொன்ன வுபாயாதிகாரமும் இதில் சொல்லிற்றாகக் கொள்ளவேணும். இதில் (மத்பக்த) என்றது தத்ஸாதநபக்தியன்று கைங்கர்யோபகரணஸாத்யபக்தியை. இன்னமு முபாயாதிகாரத்துக்கு ஶாஸ்த்ரீயவஸாயமாத்ரம் போராதே ப்ராதிகூல்ய த்யாகமும் வேணுமே ப்ரபத்திஸ்வ

ரூபம் சொல்லுகிறவிடங்களில் [ఉపాయాపాయనిర్ముక్తా మధ్యమాంస్థితిమాస్థితా] (உபாயாபாயநிர்முக்தா மத்யமாம்ஸ்திமாஸ்திதா) என்றும் [ఉపాయాపాయసంయోగే నిష్ఠయా హీయతేఽనయా] (உபாயாபாயஸம்யோகே நிஷ்டயாஹீயதேநயா) என்றும் புண்யபாபரூபோபய கர்மங்களும் த்யாஜ்யமாகச் சொல்லாநின்றதிறே. இவற்றை த்யஜித்து அவனை ஸ்வீகரித்த வநந்தரத்திலே ப்ராப்திதசையளவும் உபாயாதிகார ப்ரச்யுதி வாராதபடி ப்ரவ்ருத்தித்தானாகில் சரமகாலத்தி லதிகாராநுகுணமாக ப்ரதிபந்தகங்களை நிவர்த்திப்பித்து முக்தனும்படிபண்ணும் (தெளிவுற்று வீவின்றி நின்றவற் கின்பக் கதிசெய்யும்) என்றருளிச்செய்தாரிறே ஆழ்வார். அதிகாராநுகுணமாக நிவர்த்திப்பிக்கையாவது அப்புபகதப்ராரப்தாம்ஶத்தை க்ருபையாலே ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் விரக்தியை ஜநிப்பிக்கைக்காக அநுபவிப்பித்து தத்வ்யதிரிக்த ஸமஸ்த பூர்வாகங்களும் நஶித்துபோம்படிபண்ணி ப்ராமாதிகோத்தராகங்களை க்ருபையாலே பொறுத்து இவன்பாடு சாராதபடிபண்ணி புத்திபூர்வக ப்ரவ்ருத்திகளில் ஸாநுதாபங்களை ராஜபுத்ராபராதவத் லகுவாக வநுபவிப்பித்து நிரநுதாபனானால் யதோசித தண்டங்களையும் பண்ணிப்போக்குகை. இவனுஜ்ஜீவிக்கவேணுமென்று தானும் கடாக்ஷித்து இவன் உபாயவரணம்பண்ணி ப்ரக்ருதிவாஸனையாலே சிலஸ்காலித்யங்களுண்டானால் லீலைக்கு விஷயமாக்குமோவென்னில்? முடியநடத்தமாட்டானேயாகிலும் இவன்பக்கல் அபதேப்ரவ்ருத்தி ரூபாபராதாவகாசம் பெற்றால் சிலகாலம் லீலையிலே விநியோகங்கொள்ளக் குறையில்லை. அபராதமற ப்ரவ்ருத்திக்கு மதிகாரிகள்விஷயத்திலும் விநியோகங்கொள்ளும் ஸ்வதந்த்ரனிடம் பெற்றால் விடமாட்டானே. இவ்வர்த்தந் தொண்டரடிப்பொடியாழ்வார் விஷயத்தில் காணப்பட்டதிறே. (பாசங்கள்நீக்கி யென்னை யுனக்கே யறக்கொண்டிட்டு நீ மாயங்கள்செய்துவைத்தி இவையென்னமயக்குக்களே) என்றாழ்வா ரருளிச்செய்தாரிறே. அதுவென்னென்னில்? ராஜாவானவன் ந்ருத்தகீதாதி நிபுணையானவேஶ்யையை அபிமதமாகக்கொண்டாலும் போககாலம்வந்தவளவும் ந்ருத்தகீதாதிகளாலே விநியோகங்கொள்ளுமளவில் அத்யந்த ஸுகுமாரியானால் ஶீக்ரமாகக் கூட்டிக்கொண்டு த்ருடஶரீரியானால் அவளுடைய இஷ்டம்போருமளவும் லீலையிலே விநியோகங்கொண்டு பின்பு அநுக்ரஹிக்குமாப்போலேஸர்வேஶ்வரனும் லோகயாத்ரைக்கு அஶக்தராயார்த்தரானால் கடுக வநுக்ரஹித்தும் இத்தை பொருந்திருந்து த்ருப்தரானால் சிலகாலம் லீலையிலே விநியோகங்கொண்டு எப்போதார்த்தராவரோ அப்போதேயங்கீகரிக்கும், ஆனால [దృష్టానామపిజన్తూనాం దేహాన్తరనివారిణీ]

(த்ருப்தாநாமபிஜந்தூநாம் தேஹாந்தரநிவாரிணி) என்று சொல்லாநின்
றதேயென்னில்? இப்போது சிரபரிசயத்தாலே த்ருப்தராய் ப்ராரப்தஶ
ரீரத்தைப் பொறுத்திருந்தாலும் சரமகாலத்தி லார்த்தனுக்கி ஸர்வே
ஶ்வரன் கைக்கொள்ளுமென்னு மத்தாலே சொல்லப்பட்டது. த்ரு
ப்த்தனுமவனும் ஆநிரைமேய்த்து வந்தானல்லனே-தேஹாவஸாநத்தள
வும் இத்தேஹத்தோடே பொருந்தியிருக்குமதொன்றேயிறே இவ்வதி
காரிக்குதோஷம். மற்றுமுண்டான த்யாகஸ்வீகாரங்களெல்லாம் இருவ
ருக்குமொக்குமிறே (இருந்திருந்தெந்தனே காலம் புலம்புவனே - கூவிக்
கொள்ளுங்காலமின்னங் குறுகாதோ-என்னையென் செய்கின்றாய் என்தா
மரைக்கண்ணா - நெறிகாட்டிநீக்குதியோ- பலநீகாட்டிப்படுப்பாயோ-தீ
யோடுடன்சேர் மெழுகாயுலகில்திரிவேனோ)என்றிப்படி கூப்பிட்டுக்கொ
ண்டு (கங்குலும்பகலுங்கண்டுயிலறியாள்- இட்டகாலிட்டகையளாயிருக்
கும் - சிந்திக்கும்திசைக்கும் தேறுங்கைகூப்பும்- அழுவன்தொழுவனாடி
க்காண்பன் பாடியலற்றுவன்)என்று ஆஹாரநித்ரைகளில் நசையற்று க
ண்ணீர்நிறைத்துக்கொண்டு காலுங்கையும் சலிப்பிக்கமாட்டாதே மூர்ச்
சித்து திரியவுந்தெளிந்து அழுவதுந்தொழுவதும் ஆடுவதும்பாடுவதுமா
ய் (எங்கும்நாடிநாடி நரசிங்கா) என்று ப்ரலாபிக்குமதொன்றுமே ஆர்த்
தனுக்கேற்றம் அஹங்கார மமகார காம க்ரோத லோப மோஹாதி நி
வ்ருத்தியும் புத்ர தார க்ருஹ க்ஷேத்ர தந தாந்யாதி விரக்தியும் தாரக
போஷக போக்யங்களெல்லாங் கண்ணனென் றத்யவஸித்திருக்கையும்
இருவர்க்கும் ஸமாநமாகையாலே நாலுநாள் சிரபரிசயத்தாலே பொ
ருந்தியிருந்தாலும் சரமகாலத்திலேயெல்லாற்றிலும் அருசியைப்பிறப்பி
த்து ஆர்த்தனும்படிபண்ணி அங்கீகரிக்கும். அந்த ஆர்த்தியைக்கண்டு
இது சரமஶரீரமென்று தானும் விஶ்வஸிக்கும்படியாய் பிறரும் ஸம்
மதிக்கும்படியா யுஜ்ஜீவிக்கும். அக்காலத்துக்கும் புத்ரதாராதி ஸங்க
மே யாத்ரையானால் இவ்வாத்மாவைக் கடுக வங்கீகரிக்க நினைத்தானல்
லனென்று தத்வஜ்ஞனை தனக்கும் பிறர்க்குந் தோற்றும்படியாய் தே
ஹாந்தரப்ராப்தி தப்பாதென்று அஸ்மதாசார்யோக்தம். இதுவே பர
மார்த்தமென் றருளிச்செய்ய, ஸேநாபதியாழ்வாரும் விஷண்ணராய்
இவ்வார்த்திக்கதிகாரிகளார் பரிஹரணீயங்களானவற்றை பரித்யஜிப்பா
ரார் (எங்கினித்தலைப்பெய்வன்) என்கிறபடியே இனியிழந்தே போமி
த்தனையென்று வேரற்றமரம்போலே திருவடிகளிலேவிழுந்து அழப்
புக்கவாறே அப்பாவுமெடுத்தணைத்து கண்ணநீரைத்துடைத்து ஶோ
கிக்கவேண்டா அப்ராப்தவிஷயங்களி லிப்படி ஹயாநுதாப முண்டா
னால் ஸர்வஶக்தியானவன் தானே வேண்டுமவையெல்லா முண்டாக்கி

தானே கைக்கொள்ளும், நீயும் வேண்டா பரிஹரணீயங்களான த்யாஜ்யங்களை விடமாட்டாதொழிந்தாலும் ஹேயங்களென்று நினைத்து விடத்தக்க அஹங்கார மமகார காமக்ரோதங்களும் பகவத்பாகவதாசார்யாபசாரங்களுமான நிஷித்தங்களை பரித்யஜித்து யாதோரளவாலே லோகஸங்க்ரஹமும் ஶிஷ்யபுத்ரோஜ்ஜீவநமும் ஸித்திக்கும் தாவந்மாத்ரம் ஆந்ருஶம்ஸ்யத்தாலே வர்ணாஶ்ரம தர்மங்களை அநுஷ்டித்துக்கொண்டு அஹங்காரார்த்தகாம பரவஶரல்லாத ஜ்ஞாநபக்தி வைராக்ய ஸம்பந்நரான பரமவிலக்ஷணரோடே ஸஹவாஸித்து இடைவிடாதே குணாநுபவ கைங்கர்யங்களாலே போதுபோக்கிக்கொண்டு பத்தஸம்ஸாரிகளோடே கூட்டற்று ஸதாசார்யாபிமாநமே உத்தாரகமாக அத்யவஸித்து இவ்வாத்மகுணங்களெல்லாம் (என்னைத்தீமனங்கெடுத்தாய்-மருவித்தொழும்மனமேதந்தாய்) என்று அவரருளாலே வந்ததையென்று நிரஹங்காரனாயிருந்தால் ஸர்வஶக்தியானவன் சரமதசையில் பரமார்த்தியையுண்டாக்கி ரக்ஷிக்கும். இது துர்லபமென்று நினைக்கவேண்டா ஒருகுணலேசமும் ப்ரக்ருதிவஶ்யனை இவனாலே பிறப்பித்துக்கொள்ளவொண்ணாதிறே. அவனிவ்வாத்மாவை உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று நினைக்கிலிறே இவன் முக்தனாவது. முக்தனும்படி பண்ணும்போது ததநுரூபமான வாத்மகுணங்களை யுண்டாக்கிக்கொள்வ தவனுக்கே பரமாகையாலே அயோத்யா வாஸிகளான சராசரங்களெல்லாம் தத்வம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுகதுஃக்காரம்படியான வாத்மகுணங்களுண்டாக்கி ரக்ஷிக்கிற ஸர்வஶக்தி ந்யஸ்தபரனை விச்சேதனனுக்கு உண்டாக்குகையில் அருமையில்லையிறே. இவன் ப்ரக்ருதிவஶ்யனாய் தேஹாத்மாபிமானியாய் ததிக்ஷீராஜ்யாதிகளாலே உடம்பைப்பெருக்கி (ஊன்மல்கிமோடு பருப்பாருத்தமர்கட்கென்செய்வார்) என்கிறபடியே ஸாத்விக கோஷ்டிக்காளாகாதே பத்தஸம்ஸாரிகளாய் ஶப்தாதி விஷய ப்ரவணராய் அஹங்காராதி வஶ்யராய்க்களித்து வர்த்தித்தால் இவர்கள் படடதுபடுகிறார்களென்று கர்மாநுகுணமாக நிர்வஹித்துக்கொண்டு போருமதொழிய யதாஶாஸ்த்ரவஶ்யராய் த்யாஜ்யோபாதேயங்களறிந்து இவற்றினுடைய த்யாகஸ்வீகாரம் தனக்கவஶ்யமென்று (விண்ணுளார்பெருமாற் கடிமைசெய்வாரையும் செறுமைம்புலனிவை மண்ணுளென்னைப்பெற்றா லென்செய்யா மற்றுநீயும்விட்டால்) என்றும் (இடகிலேனோன்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன்-கடவனாகிக்காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன்) என்று பரிதாபம்பிறந்து நீயேரக்ஷிக்கவேணுமென்று ஶரணம்புக்கால் [యతివాారావణస్వయం] (யதிவாராவணஸ்வயம்) என்கிறபடியே ரிபூணாமபி வத்ஸலனானவன் இவனை விட்டுக்கொடானிறே. (அடியனரவல்வினைத் துப்பாம்புல

னைத்தும் துஞ்சக்கொடானவன்) என்று ஸ்வாஶ்ரிதரை ப்ரபலகர்மங்களிலே மூட்டானிறே. பஞ்சேந்த்ரியங்களாலும் விஷயங்களை யநுபவித்து நிற்கும்படி விட்டுக்கொடானென்று ஆழ்வாரருளிச்செய்கையாலே அவனநுக்ரஹத்துக்கு பாத்ரபூதரான வடியார் ஸாதுகர்மங்களைச் செய்து முக்தருமொழிய விஷயப்ரவணராய் நஶிக்குமதில்லை. அவனே திருத்திப் பணிகொள்ளுமளவில் இவனுக்கு நமையானதொன்றில்லை. க்ரமக்ரமமாக ப்ராக்தநஶிஷ்டாசாராநுஸந்தானத்தாலும் அருளிச்செயலர்த்தாநுஸந்தாநத்தாலும் தெளிவுபிறக்கும்படி ஹ்ருதிஸ்தனாய் நின்று [illegible] (தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹமஜ்ஞாநஜம் தம: - நாஶயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா) என்கிறபடியே ஜ்ஞாநதீபத்தாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கி ஸதநுஷ்டானத்திலே ப்ரவர்த்திப்பித்து ரக்ஷிக்குமதில் ஸம்ஶயமில்லை. இவன் சேதநனை வாசியைப்பற்ற ப்ராதிகூல்யங்களை பரித்யஜித்து ஆநுகூல்யங்களில் ஸங்கல்பமாத்ரமுண்டானால் தானே இவையெல்லாமுண்டாக்கி நிர்வஹித்துக்கொண்டுபோரும். ஆகையாலே [illegible] (நபிஷே திருதஶ்ச) [illegible] (மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந - தோஷோயத்யபி தஸ்யஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்) [illegible] (யேபாபிநோபி ஶிஶுபாலஸுயோதநாத்யா: முக்திம் கதா:) என்கிற ஶரண்யப்ரபாவ வாக்யங்களைச் சொல்லிக்கொண்டு அவற்றுக்கு தாத்பர்யமறியாதே தாமும் பத்தஸம்ஸாரிகளாய் ஶப்தாதிவிஷய ப்ரவணராய் அஹங்காராதி வஶ்யராய் (ஆசார்யர்களனைவரும் முன்னுசரித்த ஆசாரந்தன்னை யறியாதார்-பேசுகின்ற-வார்த்தைகளைக்கேட்டு மருளாதே-பூர்வர்கள் சீர்த்தநிலைதன்னை நெஞ்சேசேர்)என்கிறபடியே (பலகீகாட்டிப்படுப்பாயோ - இன்னங் கெடுப்பாயோ) என்று பூர்வாசார்யர்களனைவரும் விஷயாந்தர தர்ஶநத்தில் பீதராய் தந்நிவ்ருத்தியை ப்ரார்த்தித்துக்கொண்டு ப்ராமாதிகமாகவும் அவை வாராதபடி முன்னுசரித்த பராங்குஶ பரகாலாதிகளுடைய ஶிஷ்டாசாரங்களறியாதே எனக்கு பகவத்ஸம்பந்தமுண்டு ஸதாசார்ய சம்பந்தமுண்டென்று ப்ராதிகூல்யங்களை பரித்யஜிக்கமாட்டாதே தாமும் நிர்பயராய் பிறர்க்குமிதுவே உபதேசித்து நிர்பயராம்படி பண்ணித்திரிகிற ஸ்வபரவிநாஶகரோடே கலந்து அவர்களுபதேசம் கேட்டு நசித்துப்போகாதே நாத யாமுந யதிவர ப்ரவ்ருத்திகளுடைய உக்த்யநுஷ்டானங்களைக்கொண்டு ததநுகுணமான ஸம்யகநுஷ்டானமுடைய

ராய் ப்ராப்ய ப்ரதிபந்தக நிஷித்தாநுஷ்டாந பரித்யாக பூர்வகமான வ் நுஷ்டாநத்தையே பிறர்க்கு முபதேஶித்து கரையேற்றவல்லராய் நம்மா ழ்வார் ஸுக்ருத ஸவிஷ்யத் வர்த்தமாந காலத்ரய வ்யவஸாய ஜ்ஞாநமுடை யவராகையாலே [శ్రుతిర్నష్టా స్మృతిర్లుప్తా ప్రాయేణ పతితా ద్విజాః] (ஶ்ருதிர்நஷ்டா ஸ் ம்ருதிர் லுப்தா ப்ராயேண பதிதாத்விஜா:) என்கிறபடியே கலிப்ரபல மாகா நிற்குமளவில் விபரீதார்த்தபோதகரும் விபரீதாநுஷ்டாநங்களும் ப்ரபலமாயே வர்த்திக்குமென்று கடாக்ஷித்து விஷ்ணு ஸித்தாந்தத்தி லவை புகுராதபடி பண்ணவேணுமென்று எம்பெருமானாருடைய ஸவிஷ் யதாசார்யாவதாரத்தைக்கண்டு (பொலிக பொலிக பொலிக) என்றுதாமு ம் மங்களாஶாஸநம்பண்ணி (சென்றுதொழுதுய்மின்தொண்டீர்) என்று அவரையே முமுக்ஷுக்களுக்கெல்லாம் ஸமாஶ்ரயணீயராகச்சொல்லி மதுரகவி நாதமுநிகளுக்கு த்ரிதண்டகாஷாயாதிகளோடே அந்தவவ தாரம் காணவரும்படி விஶேஷகடாக்ஷம்பண்ணி நமக்கடியுமாய் நம் கார்யத்துக்குக் கடவதுமா யிருக்குமென்றும் இவ்வவதாரமே ஸர்வோ த்தாரகம் இவரே நம் தர்ஶநத்துக்கெல்லாம் குருபதமூர்த்தாஸிஷிக்தர் என்றுமருளிச்செய்கையாலே நாதமுனிகள் துடங்கிஅஸ்மதாசார்யர்களை யும் எம்பெருமானாரே உத்தாரகாசார்யராகவும் அவருடைய உக்த்ய நுஷ்டாநங்களே ப்ரமாணங்களாகவு மங்கீகரித்து அவரையே உத்தா ரகராகக் காட்டுகிற மறுவற்ற ஸதநுஷ்டாந ஸம்பந்நரான ஸதாசார்ய னே மஹோபகாரகாசார்யராகவும் புத்திபண்ணி பிறருக்கு முபதேசி த்து [రామానుజార్యే గురురితిచపదం భాతి నాన్యత్ర] (ராமாநுஜார்யே குருரிதிசப தம் பாதிநாந்யத்ர) என்று மற்றொருவிஷயத்தி லிப்படிப்பட்ட வாசா ர்யத்வ முண்டாவதாகச்சொன்னால் ருசிஹேதங்களாலே அநேக விபரீ தார்த்தங்கள் புகுருமென்று ஆகாம்யநர்த்தத்தை நிரீக்ஷித்து இதர நி ஷேதம் பண்ணுகையாலே க்ரந்தஸ்தங்களான வவருடைய உக்த்யநு ஷ்டாநங்களே உபாதேயங்களாயிருக்கும். ஆகையாலே எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று காட்டுகிற ஸதாசார்ய னபிமாநத்திலே யொதுங்கியிருந்த வாசார்யனே [మాతా పితా యువతయః - ఐహికాముష్మికం సర్వం] (மாதாபிதாயுவதய: - ஐஹிகாமுஷ்மிகம்குருஸர்வம்) (இருப்பி டம்வைகுந்தம் வேங்கடம்) முதலான விவையெல்லாமாக நினைத்து ஸர் வோத்தாரகரான எம்பெருமானாரே உத்தாரகாசார்யராக வத்யவஸி த்து [క్షేమస్స ఏవ హి యతీంద్ర భవచ్ఛ్రితానాం] (க்ஷேமஸ்ஸஏவஹியதீந்த்ர ஸ வச்சிதாநாம்) என்கிறபடியே அவர் பண்ணின சரமகால ப்ரபத்தி யே ரக்ஷகமென்று புத்திபண்ணிக்கொண்டு [జగదాచార్యరచితే శ్రీమద్వచన భూషణే। తత్వజ్ఞానంచతన్నిష్ఠాం దేహి నాథ యతీంద్ర మే] (ஜகதாசார்யரசிதே ஸ்ரீ

மத்வசாஹஸிஷணே-தத்வஜ்ஞாநம்சதந்நிஷ்டாம் தேஹிநாத யதீந்த்ர மே) என்று ப்ரார்த்தித்துக்கொண்டு க்ரமமாக வதில்சொன்ன ஸதநுஷ்டாநங்களை அநுஸந்தித்துக்கொண்டு அவை கைபுகுரும்படி ஸதநுஷ்டாந ஸம்பந்நரான பரமார்த்தரோடே ஸஹவாஸம் பண்ணிக்கொண்டு "அஹங்கார மக்நிஸ்பர்ஶம்போலே" த்யஜ்யமாக்குமென்றும் விஷய ஸ்பர்ஶம் விஷஹக்ஷணம்போலேமுடித்துவிடுமென்றும் பாகவதாபசாரம் த்ரிசங்குவைப்போலே கர்மசண்டாளனாக்கி அந்த்ரம் தக்தபடம்போலே உருமாய்த்து போம்படிபண்ணுமென்றும் ஹயப்பட்டு பரதோஷநிரீக்ஷணம் பண்ணப்போகாதே ஸர்வஹித தயாபரராய்ஆந்ருஶம்ஸ்யத்தாலே விஹிதகர்மம் லோகஸங்க்ரஹார்த்தம் யதோசிதமாக வநுஷ்டித்துக்கொண்டு ஆஹாராநுவர்த்தந ஸஹவாஸநியதிகளை யுடையனாய் தேஹத்திலும் தாரபுத்ராதிகளிலும் அநுராகத்தைவிட்டு ப்ரக்ருதி விகாரம்பிறந்தால் தர்மஹோகபுத்திகளிரண்டும்விட்டு ஶாஸ்த்ரவிஹிதமான ஸ்வதாரவிஷயத்தில் காதாசிதமாக ஸூத்ரோத்ஸர்ஜநவத் நிவர்த்திப்பித்துக்கொண்டு குலாலசீடவத் வர்த்திக்குமவன் ஹகவத் ப்ரியதமனாய் ததநுக்ரஹத்தாலே சரமகாலத்தில் அத்யந்தார்த்தியை யுடையவனாய்க்கொண்டு நலமந்தமில்லதோர் நாட்டிலே ஆநந்தநிர்பரனாயிருக்கும்- [కౌన్తేయప్రతిజానీహి నమే భక్తః ప్రణశ్యతి] (கௌந்தேயப்ரதிஜாநீஹி நமேஹக்தஃப்ரணஶ்யதி) என்கிறபடியே இவ்வர்த்தம் ஸத்யம் நானிப்போது சொன்னபடியே த்ருப்தாதிகாரத்திலே நித்யம் நின்று நிர்ப்பரனாய் ஸுகமேயிருமென்ன ஸந்துஷ்டராய் தண்டம் ஸமர்ப்பித்து நின்றவளவிலே நானுமக்கின்னமும் சொல்லவேண்டுவதொரு பரமார்த்தமுண்டு இவ்வாத்மகுணங்களெல்லா முண்டானாலும் நமக்கு இவையுண்டென்கிற அஹங்காரலேசம் தன்னெஞ்சுக்குத் தோற்றிலும் நஹுஷ ந்ருக யயாதிகளுடைய யஜ்ஞதாந தபஸ்ஸுக்கள்போலே வ்யர்த்தமாய் பகவந்நிக்ரஹபாத்ரமாய்ப்போமாகையாலே தன்னை நித்யஸம்ஸாரிகளிலும் நிக்ருஷ்டதமனாக வநுஸந்தித்துக்கொண்டு நிரஹங்காரியாய் வர்த்திக்கவேணும். இவ்வர்த்தம் திருவுள்ளம்பற்றியிறே (நீசனேன் நிறையொன்றுமிலேன்) என்றும் [అమర్యాదః క్షుద్రః] (அமர்யாதஃக்ஷுத்ரஃ) என்றும் [తతో నికృష్టే మయిసన్నికృష్టే] (ததோநிக்ருஷ்டே மயிஸந்நிக்ருஷ்டே) என்றும்[పాపానాం ప్రథమో౽స్మ్యహం](பாபாநாம் ப்ரதமோஸ்ம்யஹம்)என்றும்[వృత్యాపశుః](வ்ருத்யாபஶுஃ)என்றும் நம்முதலிகளெல்லாரும் அநுஸந்தித்துக்கொண்டு போருவது.இப்படி ஸம்ஸாரிகளிலுந் தன்னை நிக்ருஷ்டதமனாக வநுஸந்தித்துக்கொண்டிருக்கை ப்ராப்தமாயிருக்க பாகவதரிடத்தில் அஹங்கரித்து தான்அவர்களோடேஸமனென்றும்

அவரைக்காட்டில் அதிகனென்றும் நினைத்தானாகில் ஆத்மநாசமாமென்னுமிடம்சொல்லவேண்டாவிறே. ஆனால் ஸ்வாமி, பாகவதானுவர்த்தநக்ரம மருளிச்செய்யவேணுமென்ன? இது த்ரிப்ரகாரமாயிருக்குமென்று நம்பிள்ளை யருளிச்செய்வர். ஸத்காரயோக்யரென்றும் ஸஹவாஸயோக்யரென்றும் ஸதாநுபவயோக்யரென்றும் த்ரிவிதமாயிருக்கும். ஸத்காரயோக்யராவார் நாமரூபப்ரதானர் [యేకణ్ఠలగ్న తులసీనళినాక్షమాలా యేబాహుమూల పరిచిహ్నితశఙ్ఖచక్రాః । యేవాలలాట ఫలకేలసదూర్ధ్వపుణ్డ్రా స్తేవైష్ణవా భువనమాశుపవిత్రయన్తి] (யேகண்டலக்ந துளஸீநளிநாக்ஷமாலா யேபாஹுமூல பரிசிஹ்நிதஶங்கசக்ரா: - யேவாலலாட பலகேலஸதூர்த்வபுண்ட்ரா: தேவைஷ்ணவா ஸுவநமாஶுபவித்ரயந்தி)என்கிறபடியே அவனுடைய பேரும் சிஹ்நங்களும் தரித்திருக்குமவர்கள்.[చాణ్డాలోప్యథవా శ్వపచోప్యథమోప్యథ ఋణ్యోప్యథపీడ్యో పశురప్యథవాధమః । యోహ్యఙ్కితో వైష్ణవలాఞ్ఛనేన పూజ్యశ్చవిష్ణోః ప్రతిమాసమానః] (சோரோப்யவத்ய:ர்வடசொப்யதுஷ்ய: ருண்யப்யபீட்ய: பராப்யபாத்ய: - யோஹ்யங்கிதோ வைஷ்ணவலாஞ்சநேந பூஜ்யஶ்சவிஷ்ணோ: ப்ரதிமாஸமாந:) என்று இவருடைய ஜந்மவ்ருத்தங்களெப்படியிருந்தாலும் அவமதிபண்ணபோகாதே ஶக்த்யநுகுணமாக கிஞ்சித்காரம்பண்ணி பகவத்விக்ரஹத்தில் அபசாரத்துக்கு பயப்படுமாப்போலே அவ்விஷயத்திலும் பயப்பட்டு அர்க்யபாத்யாதிகளாலே திருவுள்ளம் ப்ரஸந்நமாம்படி ஆராதித்துக்கொண்டு ப்ரவர்த்திக்கவேணும். அவமதிபண்ணினானாகில் [మద్భక్తంశ్వపచంవాపి నిన్దాంకుర్వన్తియేనరాః । పద్మకోటిశతేనాపి నక్షమామివసున్ధరే] (மத்பக்தம்ஶ்வபசம்வாபி நிந்தாம் குர்வந்தியே நரா:-பத்மகோடிஶதேநாபி நக்ஷமாமிவஸுந்தரே) என்கிறபடியே பகவந்நிக்ரஹபாத்ரனாய் [అనాచారాన్దురాచారా నజ్ఞాతౄన్హీనజన్మనః మద్భక్తాన్ శ్రోత్రియోనిన్దన్ సద్యశ్చణ్డాళతాంవ్రజేత్](அநாசாராந்துராசாராந் அஜ்ஞாத்ருந்ஹீநஜந்மந: - மத்பக்தாந் ஶ்ரோத்ரியோநிந்தந் ஸத்ய:சண்டாளதாம்வ்ரஜேத்)என்கிறபடியே கர்மசண்டாளனாய் விடுமாகையாலே ஜந்மவ்ருத்தங்களாலெப்படிப்பட்ட நிஹீநரானாலும் ப்ராஹ்மணத்வைவர்ணிகக்கு ஶிகா யஜ்ஞோபவீத தாரணம் போருமாப்போலே அபசாரத்துக்கு அவ்வளவே போருமாகையாலே அவமதிபண்ணப்போகாதே கிஞ்சித்காரத்தாலும் ஸ்வநைச்யோக்திகளாலும் உகப்பித்து நடக்கவர்த்திக்கவேணும். ஸஹவாஸ ஸதாநுபவங்களுக்கு யோக்யதையில்லை. ஸஹவாஸயோக்யராவார் ஜ்ஞாநப்ரதாநர்[అపగతమదమానై రన్త్యమోపాయనిష్ఠై రధిగతపరమార్థై రర్థకామానపేక్షైః । నిఖిలజనసుహృద్భి ర్నిర్జితక్రోధలోభై ర్వరవరమునిభృత్యై రస్తుమేనిత్యయోగః] (அபகதமதமாநை ரந்த்யமோ

பாயநிஷ்டை: - அநிகதபரமார்த்தை ரர்த்தகாமாநபேக்ஷை:- நிகிலஜந ஸம்ஸ்ருத்ஸிர் நிர்ஜிதக்ரோதலோபை: வரவரமுநிஸ்ருத்யை ரஸ்துமே நித்யயோக:) என்கிறபடியே த்யாஜ்யோபாதேய விவேகஜ்ஞாந பரிபூர்ணராய் த்யாஜ்யங்களை பரித்யஜித்து உபாதேயத்தைப்பற்றி சரமோபாயநிஷ்டரான த்ருப்தாதிகாரிகள் ஸஹவாஸம்பண்ணுகைக்கும் [బోధయన్తఃపరస్పరం] போதயந்த:பரஸ்பரம்) என்கிறபடியே ஒருவருக்கொருவர் ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமான சித்தகாலுஷ்யம் வாராதபடிபோதகராகுகைக்கும் யோக்யர்- ஸதாநுஸவயோக்யராவார். அநுஷ்டாந ப்ரதாநர் அவர்களாரென்னில்? த்யாஜ்யபூமியான இவ்விபூதியில் ஜிஹாஸையும்பிறந்து ஸகவதநுஸவாலாஸத்தாலே பரமார்த்தராய் பாலோந்மத்த பிஶாசாவிஷ்டரைப்போலே தம்முடம்பை மறந்து இருந்தவிடத்திலிராதே ஸம்ஸாரிகளைக் காணவும்மாட்டாதே (இவையென்னவுலகியற்கை - கொடுவுலகங்காட்டேலே) என்றிவர்களோடிங்கிருக்குமிருப்பு [వరంహుతవహజ్వాలా పంజరాన్తర్వ్యవస్థితిః] (வரம்ஹுதவஹஜ்வாலா பஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி:) என்கிறபடியே அத்யந்த மஸஹ்யமாய்(கங்குலும்பகலுங்கண்டுயிலறியாள் - கண்ணநீர்கைகளாலிறைக்கும் - வட்கிலளிறையும்மணிவண்ணாவென்னும்-அழுவன்தொழுவனாடிக்காண்பன்-அயர்க்குஞ்சுற்றும்பற்றிநோக்கி - வெவ்வுயிர்க்கொள்ளும் மெய்சோரும் - உலோகர்சிரிக்கநின்றாடி) என்கிறபடியே திவாராத்ரி நித்ரையற்று பாஷ்பாகுல லோசநராய் லஜ்ஜையைவிட்டு திருநாமங்களை ஜல்பித்துக்கொண்டு அழுவது தொழுவது அயர்ப்பது பாடுவது மோஹிப்பது தீர்க்கநிஶ்வாஸம்பண்ணுவது ஸ்ராந்தரென்று லௌகிகர் நகைக்கும்படி ஸஞ்சரித்துக்கொண்டு ஸுகதுக்க மாநாவமாந நிந்தாஸ்துதி ஶத்ரு மித்ர லோஷ்டகாஞ்சந ஸமராய் ஜகத்தெல்லாம் ஸகவதாத்மகமாக ஸாவித்துக்கொண்டு ஸமஸ்த வஸ்துக்களிலும் ப்ராதிகூல்யமற்று [సకృత్త్వదాకారవిలోకనాశయా తృణీకృతానుత్తమభుక్తిముక్తిభిః- మహాత్మభిర్మామవలోక్యతాన్నయ క్షణేపి తేయద్విరహోతిదుస్సహః] (ஸக்ருத்வதாகாரவிலோகநாஶயா த்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி:- மஹாத்மபிர்மாமவலோக்யதாந்நய க்ஷணேபிதேயத்விரஹோதிதுஸ்ஸஹ:) என்கிறபடியே அவனைக் காணவேணுமென்கிற அபேக்ஷையாலே அநுத்தமபுக்திமுக்திகளை த்ருணீகரித்து அத்தாலே அவனுக்கு க்ஷணமும் தம்மைப்பிரிந்து நிற்கவொண்ணாதபடி அத்யந்த ப்ரியதமரான மஹாத்மாக்கள். இப்படிப்பட்ட வதிகாரிகளையாயிற்று ஆசார்யர்களாக வரணம்பண்ணவும் தீர்த்தப்ரஸாத ஸ்வீகாரம்பண்ணவும் யோக்யராய் இச்சேதநரைக்கரையேற்றவல்லவரென்று விஶ்வஸிக்கத்தக்கது. இதில் ப்ரதமாதிகாரிகள்

ஜந்மாந்தரத்திலொழிய இஜ்ஜந்மத்தில் கரையேறப்பெறார்கள். தம்மிடத்தில் அபசாரப்பட்டாரை நஸிப்பிக்கவல்லராவதே யவர்களுக் கதிகாரம். இரண்டாமதிகாரி ஸஹவாஸயோக்யனாய் ஜ்ஞாநப்ரதாநத்தாலே ஒருவனுக்கு ஸஹகரித்து தன்னுடைய ஆசார்யப்ரஸாதத்தாலே தான் கரையேறவல்லனாய் உஜ்ஜீவிப்பதே யவனுக்கேற்றம். மூன்றாமதிகாரி யாயிற்று ஸர்வேஸ்வரனுக்கு பிராட்டியைப்போலே அத்யந்த ப்ரியதமனாய் ஸர்வேஸ்வரனை ப்ருகுடீஸஹனாக வஸீகரித்துக்கொண்டு(கீழ்மேலெமரேழெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வு வாய்க்கின்றவா) என்றும் (எமர்கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்தென்றும் சேர்தல் மாறிநரே) என்றுஞ்சொல்லும்படி தம்முடைய ஸம்பந்தஸம்பந்திகளையும் உத்தரிப்பிக்கவல்ல ஸமர்த்தனாவது- ஆசார்யவரணம் பண்ணுவதும் தீர்த்தப்ரஸாதங்கள் ஸ்வீகரிப்பதும் தத்ஸம்பந்தத்தாலே தன்னுடைய வவித்யாகர்ம வாஸநாருசிகள் நஸித்து தானுஜ்ஜீவிக்கவேணுமென்றிறே-அந்த உஜ்ஜீவநம் அஹங்காரத்தையும் விஷயங்களையும் விரும்பி தாம் நஸித்துப்போவாரும் பனைநிழல்போலே தாம் தாங்கள்பராதீநராய் உஜ்ஜீவிப்பித்துப் போவாரும் இவனைக் கரையேறும்படிப் பண்ணி இவனுக்கு லபிக்கப்பண்ணமாட்டாரிறே. ஆகையாலேயிறே[𑌭𑌿𑌨𑍍𑌨𑌨𑌾𑌵𑌾𑌶𑍍𑌰𑌯𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑍋 𑌯𑌥𑌾𑌪𑌾𑌰𑌂 𑌨𑌗𑌚𑍍𑌛𑌤𑌿] (பிந்நநாவாஸ்ரயஸ்தப்தோ யதாபாரம் நகச்சதி)என்று அநதிகாரிஸம்பந்தம் ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய் விநாஸஹேதுவாகச் சொல்லப்பட்டது.அபிமாநதூஷிதருடைய தீர்த்தப்ரஸாதாத்யங்கீகாரம் ஜ்ஞாநமாந்த்யஹேது, உபாயாந்தர நிஷ்டருடைய தீர்த்தப்ரஸாதாத்யங்கீகாரம் ஜ்ஞாநமாந்த்யஹேது, ப்ரயோஜநாந்தரபரருடைய தீர்த்தப்ரஸாதாத்யங்கீகாரமும் ஜ்ஞாநமாந்த்யஹேதுவென்று சொல்லப்பட்டதாகையாலே ப்ரணவோக்த பாகவதசேஷத்வ பர்யந்த பகவச்சேஷத்வ ஜ்ஞாநஶூந்யரான அஹங்காரக்ரஸ்தருடையவும் மத்யபதோக்த ஸித்தோபாயாத்யவஸாயமில்லாத உபாயாந்தர நிஷ்டருடையவும் சரமபதோக்த அநந்யபோகத்வ ஸ்வரூபஜ்ஞாநஶூந்யராய் ஶப்தாதிவிஷய ப்ரவணராய்புத்ரதாராதிஸக்தராய் ஸம்ஸாரபத்தரான ப்ரயோஜநாந்தரபரருடையவும் தீர்த்தப்ரஸாத ஸ்வீகாரங்களும் ஆதி ஶப்தத்தாலே தத்ஸஹவாஸமும் ஜ்ஞாநமாந்த்யஹேதுவாகையாலே த்யாஜ்யமென்று ப்ரமேயரத்நத்திலே சொல்லப்பட்டதாகையாலே மந்த்ரார்த்த ஜ்ஞாநாநுஷ்டாந ஹீநராய் அஹங்காரார்த்தகாமபரவஶரானவரோடே ஸஹவாஸ ஸதாநுபவங்கள் தூரதஃ பரிஹரணீயங்களாயிருக்கும். ஆனால் ஸத்காரயோக்யரிடத்தில் தீர்த்தாத்யங்கீகாரம் பரிஹரித்தால் தானதிகாரியென்கிற

அஹங்காரமும் அவர் திருவுள்ளங்கலங்கி அத்தாலே தோஷமும் வாராதோவென்னில்? அவர்பக்கல் தோஷமும் தன்பக்கல் குணாதிக்யமும் உண்டென்று நினைத்தாலிறே தோஷம்வருவது. அப்படி நினையாதே அவரென்செய்வர் அவித்யாப்ரஸாவமிதுவென்று தனக்கு ஸித்தித்தமாத்ரம் ஸத்கரித்து அத்தோஷம் அவர்மேலே ஆரோபித்து நிந்திக்கப் போகாதே ப்ரணிபாதாதிகளாலே ஸவிநயமாக வர்த்தித்தா லொரு தோஷமும் வாராது. தன்னை ஸம்ஸாரிகளிலும் நிக்ருஷ்டதமனாக வநுஸந்தித்துக்கொண்டு தனக்குண்டான குணங்களுக்கடி (அதுவுமவனதின்னருளே) என்று அவனுடைய நிர்ஹேதுக கடாக்ஷமென்றிருக்தால் அஹங்காரமும் வாராது. கலக்கம் வருமென்று அவர் திருவுள்ளமநுஸரிக்கப்புக்கால் அவரொரு நிஷித்தாநுஷ்டாநம் பண்ணுமென்று நியமிக்குமாகில் அதுவும் செய்யவேண்டிவரும். ஆகையாலே அவருக்குத் திருவுள்ளங் கலங்குமென்று அத்தைச் செய்யப்போகாதே, ஆகையாலே தன்னாலே அவர்களுக்கொரு விரோதம் வாராதபடி வர்த்திக்குமதே அவர்களிடத்தில் வேண்டுவது. ஸஹவாஸயோக்யரிடத்தில் தீர்த்தப்ரஸாதாங்கீகாரத்துக்கு குணதோஷங்களிரண்டுமில்லை. சரமாதிகாரிபக்கல் அங்கீகாரமே இவனுக்கு ஸமுத்தாரகஹேது. இதுக்கு வர்ணாஸ்ரமநியமமும் தத்தநுகுணவ்ருத்திநியமமுமில்லை அதிகாரிநியமமேயுள்ளது. இவ்வர்த்தம் (பயிலுந்திருவுடையார் யவரேலும்) என்றும் (வானுளா ரறியலாகா வானவா வென்பராகில்-போனகஞ்செய்தசேடந் தருவரேல்புனிதமன்றே) என்றும் எப்படிப்பட்ட நிஹீநஜந்மவ்ருத்தரானாலும் பகவதநந்யஸம்பத்தியுடையராய் உபாயோபேயாதிகாரிகளானால் நமக்குஸ்வாமிகளென்றும் தீர்த்தாத்யங்கீகாரத்துக்கு யோக்யரென்றும் ஆழ்வாரருளிச்செய்தாரிறே. ஆனால் ஸ்வாமின் நாமரூபதாரிகளிடத்திலும் அவமதிபண்ணாதே அநுவர்த்திக்கவேணுமென்று தேவரருளிச்செய்தது (தமர்களில் தலைவராய் சாதியந்தணர்களேலும்) என்றும் பாகவதாக்ரகண்யயராய் ப்ராஹ்மணோத்தமரானாலும் பாகவதாபசாரபரர் சண்டாளராவரென்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் நாமரூபங்களையுடையராய்பாகவதாபசாரம் பண்ணினாலும் த்ரிசங்குவைப்போலே கர்மசண்டாளராவரென்று பிள்ளை லோகாசார்யரும் அருளிச்செய் தவர்த்தங்களுக்கு பூர்வோத்தரவிரோதம் வாராதபடி விசாரித்து ஹிதோபதேசம் பண்ணமாட்டாதே தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லுமவர் மூர்க்கராவாரென்று விபரீதார்த்த போதகரான வாசார்யனையும் (ஓர்த்து நெஞ்சே முன்னவரும்பின்னவரும் மூர்க்கரெனவிட்டு) என்றும் நாமரூபங்களைக்கண்டு அவர்சொல்லிற்றெல்லாம் மெய்யென்று பூர்வர்களாசரித்த

ஸாசாரத்தையறியாதவர்கள் பேசுகின்றவார்த்தைகளைக் கேட்டுமருளாதே அவர்களுடையஸ்வரூபஸ்வபாவங்களை நன்றாக பரிசிலநம்பண்ணி அஜ்ஞான கேவல நாஸ்திகரையும் ஜ்ஞாநத்தையுடையராய் அநுஷ்டாநமில்லாத ஆஸ்திக நாஸ்திகரையும் மூர்க்கரென்று பரித்யஜித்து ஆஸ்திகரையே அநுவர்த்திக்கவேணுமென்று பெரியஜீயரும் பாகவத நாமரூபங்களை யுடையாரானாரையும் அவமானம்பண்ணச்சொல்லுகிறதென்னென்ன? விபரீதபோதகரான வாசார்யனையும் நிஷித்தாநுஷ்டாந பராய்த்திரிகிற பாகவதரையும் அவமதிப்பண்ணச்சொல்லாதே பஹுமந்தவ்யராகச்சொன்னால் அவருடைய வுக்த்யநுஷ்டாநங்கள் உத்தேஶ்யமென்று அஜ்ஞராசரித்துட்போனால் விநாசம்வருமென்று சேதநருடைய ஹிதத்தைப்பார்த்து ஸஹவாஸாதிகளுக்கு அயோக்யரென்று சொல்லிற்றாகக்கொள்ளவேணும். இப்படி நினையாதே நிஷித்தாநுஷ்டாநபரர் அவமதிக்கு யோக்யரென்றால் [అనాచారాన్ సదాచారాన్] (அநாசாராந் ஸதாசாராந்) என்றும் [మద్భక్తం శ్వపచం వాపి] (மத்பக்தம் ஶ்வபசம் வாபி) என்றுதுடங்கி [నక్షమామి కదాచన] (நக்ஷமாமி கதாசந) என்று ஸர்வேஶ்வரனருளிச்செய்த வசநங்களோடுவிரோதிக்கும். ராஜகுமாரரை ராஜாவே ஶிக்ஷிக்கவேணுமித்தனையொழிய பிறர் அவமதிப்பண்ணப்போகாதிறே. அர்த்தஸ்திதி இதுவானாலும் ஆசார்யர்கள் ஹிதோபதேசம்பண்ணுகிற தந்தாமுடைய க்ரந்தங்களிலே லோகஹிதார்த்தமாக அபதேப்ரவர்த்தகரைக்கண்டு எல்லாருமப்படியே ப்ரவர்த்தித்துப் போகாதபடி யருளிச்செய்தாராகையாலே அது சேதநோஜ்ஜீவந ஹேதுவாய் அவன் திருவுள்ளத்துக்கு காலுஷ்யம்வாராதென்றும் ப்ரஸங்கமாம்-அவரருளிச்செய்தாரென்று நாமுமப்படியே சொன்னால் அநேகர் மாயாபலத்தாலே பத்தஸம்ஸாரிகளாய் அர்த்தகாமபரவஶராய் துர்விஷயப்ரவணராய் விபரீதவ்ருத்தராயிருக்கையாலே அபசாரம்வரும் கேவல ஸம்ஸாரிகள் தோஷங்கண்டாலும் அவர்களை நிந்திக்கப்போகாது அது தன்னதென்று நினைக்கவேணுமென்று சொல்லாநிற்க ஸதாசார்யஸம்பந்தமும் நாமரூபங்களும் அருளிச்செயலு முள்ளவிடங்களில் தோஷமுண்டானாலும் மூர்க்கரென்று அவமதிப்பண்ணப்போகாது. ஆகையாலே (விண்ணுளார்பெருமாற் கடிமைசெய்வாரையும் செறுமைம்புலனிவை - மண்ணுளென்னைப்பெற்றா லென்செய்யா) என்றும் (இன்னமுதெனத்தோன்றி யோரைவர்யாவரையும் மயக்கநீவைத்த முன்னமாயம்)என்றும்(துயக்கருமதியில் நன்ஞானத்துளமரரைத் துயக்கும்மயக்குடை மாயைகள்) என்றும் அஸ்கலித ஜ்ஞாநிகளான ஸூரிகளையும் மோஹிக்கப்பண்ணுகிற மாயாப்ரபாவமென்று நினைத்து கேட்

பாராகில் ஹிதவசநம் விண்ணப்பஞ்செய்வது இல்லையாகில் அய்யோ வென்று கண்ணீரோடேமீண்டு ஸ்வஸௌக்த்யநாகுணமாக உபேக்ஷித்து ஸவிநயராயொரு தண்டன்ஸமர்ப்பித்து ஸஹவாஸநிர்த்தாங்கீகாரம் பண்ணப்போகாதே ஸ்வஸமசேஷ்டிதாங்களாலே புகபபித்து நடக்க நிற்கவேணும். ஸ்வாமிக்கு உபாயாந்தரங்களெல்லாம் ஸவாஸநமாக பாதுகாதிகளைப்போலே யோக்யதாபாதகங்களோடே ஸவாஸநத்யாகம் பண்ணவேணுமென்று சொல்லாநிற்க திரியவுமாந்ருஸம்ஸ்யத்தாலே சில செய்யும்படி அருளிச்செய்வானென்னென்னில்? பரமார்த்தனாய் பூர்ணப்ரபந்நாதிகாரியாய் திருக்கண்ணமங்கை யாண்டானைப்போலே ஸ்வவ்யாபாரங்களெல்லாம் ஸவாஸநமாகவிட்டால் அவனுக்கு லோகாபவாதமும்வாராது, ஸாஸ்த்ரவிரோதமும்வாராது, பகவந்நிக்ரஹமும்வாராது. இவன் த்ருப்தனாய் தேஹத்திலேபொருந்தி வர்த்தித்து ஸ்த்ர்யந்நபாநாதிகளை விரும்பி வர்த்திக்குமவனாகையாலே லோகாபவாதாத்யநர்த்தங்கள் மூன்றும்வரும். ஆனால் அந்யயோகாஸஹமான ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்துக்கு ப்ரதிபந்தகமாகாதோவென்னில்? அவ்விஷய முபாய தசையில் அந்யயோகாஸஹமாய் உபேயதசையில் அந்யயோகத்தை ஸஹிக்குமதன்றோ. ப்ராபகதசையில் ப்ராபகாந்தரபரித்யாகம்போலே ப்ராப்யதசையில் ப்ராப்யாந்தரபரித்யாக மபேக்ஷிதமாயிருக்க நாதயாமுநயதிவர கூரநாத பட்டாரகாதிகளைப்போலே ப்ராப்யாந்தரைகதேசங்களான தார புத்ராதி ஸங்கங்களை பரித்யஜித்ததில்லையே. இந்த ப்ராதிகூல்யங்களெல்லாம் ஸவாஸநமாகவிட்ட பூர்வாசார்யர்களெல்லாம் உசிதகர்மங்களெல்லாம் உபாயபுத்யா ஸவாஸநமாகவிட்டு இவையும் க்ருத்யமாகவே ஸஹாவித்து [కుర్యాద్విద్వాంస్తథాஸక్తశ్చికీర్షుర్లోకసంగ్రహం] (குர்யாத்வித்வாந் ததாஸக்த ஸ்சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம்) என்று பகவதபிமதமுண்டாகையாலே விருத்தங்களென்று ஸவாஸநமாக த்யாகம்பண்ணினால் இவரைக்கண்டு அஜ்ஞரானார் பரித்யஜித்து சிலரும் பரிஹஸித்து சிலரும் நசிப்பர்களென்று ஆந்ருஸம்ஸ்யத்தாலே லோகஸங்க்ரஹார்த்தமாக யதார்ஹமாக ஆசரித்துப்போந்தார்களிறே. தனக்கு அது விஹிதகர்மங்களென்றும் ரக்ஷகமென்றும் நினைவின்றிக்கே ஆந்ருஸம்ஸ்யத்தாலே அநுஷ்டிக்கில் [సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి] (ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்னு மவனாலே விடுவிக்கப்பட்ட பாபங்களிலே அந்தர்பவித்துப் போமாகையாலே இவனுக்கு ப்ரதிபந்தகமாகாது. இவ்வர்த்தம் நோற்றநோன்பிலே (தேறுஞாநத்தர் வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர்) என்கிறவிடத்தில் தேறுஞாநத்தரித்யாதி அவராகிறார் நிர்மலஜ்ஞாநிகள், அதாவது அநுஷ்டாநாநுஷ்டாநங்க

ளான விஹிதநிஷித்தங்களை ஸமமாக விகல்பிக்கலாம்படி தெளிந்திரு
க்குமவர்கள், அதாவது அநுஷ்டாநம் சாதநமாகாதே நிஷித்தாசரணம்
நமக்கு ரக்ஷகமன்றென்றிருக்குமோபாதி விஹிதாசரணமும் நமக்கு ர
க்ஷகமன்றென்றிருக்குமவர்களென்கை. ஆனாலிது அநுஷ்டிக்கிறதென்
னென்னில்? அநுஷ்டிக்கவேணுமென்கிற வபேக்ஷையில்லாத வதிகாரிக
ளுக்கும் லோகஸங்க்ரஹார்த்தமாக வநுஷ்டிக்கவேணுமென்கிற ஸர்வ
ராஜ்ஞாநுவர்த்தநம் பண்ணினானாகிறான். இனித்தான் நிஷித்தாசரண
ம் ரஜஸ்தமஸ்ஸுக்களை வர்த்திப்பிக்குமாப்போலே இந்த விஹிதாசர
ணம் ஸத்வவிவ்ருத்தியையும் பண்ணிக்கொடுக்கக்கடவதாயிருக்கும்.
இனித்தான் சேதநனுக்கையாலே ஓருவ்ருத்திபண்ணியல்லது நில்லானே
[[illegible]] (ஸத்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநம்) என்று ஜ்ஞாநத்
துக்குமடியாயிருக்குமிறே. ஆகையாலே அநுஷ்டேயமாயிருக்குமென்று
நம்பிள்ளை யருளிச்செய்ததாக வடக்குத்திருவீதிப்பிள்ளை ஈட்டில் அரு
ளிச்செய்தாரிறே. [[illegible]] (சிகீர்ஷுர்லோகஸங்க்ரஹம்)
என்று ஸர்வராஜ்ஞை ப்ரவஸங்கநிஷ்காமனாய் அநந்யப்ரயோஜநனான உ
பாயாந்தரநிஷ்டனுக்கு சொல்லப்பட்டதொழிய அநந்யஸாதநனான ஸி
த்தோபாயநிஷ்டனநுஷ்டித்தால் அவனுக்கிஷ்டமாயிருக்குமோவென்
னில்? இவ்வர்த்தம் இத்திருவாய்மொழியிலே (செந்தொழிலவர்வேத
வேள்வி) என்கிறவிடத்திலே செந்தொழிலவர் [[illegible]] (தே
ஹிமே ததாமிதே) என்றுதவர்கள் தாம்பண்ணுகிற க்ரியைக்கு வே
றொருபலத்தை யபேக்ஷியாதே அவனுகப்பே பலமாக கைங்கர்யபு
த்யாப் பண்ணுமவர்களென்கை. அவனுக்கு ரக்ஷணம்போலே இவர்க
ளுக்கு கைங்கர்யம், அதாவது அவனுக்கு ரக்ஷணம் ஸ்வார்த்தநிரபே
க்ஷமாய் ரக்ஷகத்வஸ்வரூபத்துக்கு அநுரூபமானாப்போலே இச்சேத
நனுக்கு இந்த ஆஜ்ஞாகைங்கர்யரூபமான வைதிகக்ரியைகள், சேஷத்வ
ஸ்வரூபத்துக் கநுரூபமாய் ஸ்வார்த்தநிரபேக்ஷமாயிருக்கும், இங்ஙனெ
ன்றாகில் வ்யர்த்தமாமே. ஆகையாலே செந்தொழிலவரென்றது அநந்ய
ப்ரயோஜநரையாகில் ஆர்ஜவத்தையுடைய வ்ருத்திவிசேஷங்களுடைய
வர்களென்கை. இப்படியானவருடைய வேதவேள்வியறா வேதகோ
ஷங்களும் வைதிகக்ரியா கோலாஹலமும் மாறாதேசெல்லுகை. ப்ராப்
யவிரோதியாதல் ப்ராபகவிரோதியாத வில்லாமையாலே நாய்ச்சிமாரு
டைய பரிஷ்வங்கத்தேர்பாதியாய்ச் செல்லாநிற்கும். ப்ராப்யவிரோதி
யாவது ஐஹிக பாரலௌகிகைஸ்வர்யங்களை ஸாத்யமாக நினைத்து அ
வற்றுக்கு ஸாதநமாக்கப்பண்ணுகை. ப்ராபகவிரோதியாவது பகவ
த்ப்ராப்திக்கு ஸாதநமாக்கப்பண்ணுகை, இவ்விரண்டு நினைவுகளுமி

ன்றிக்கே அவனுக்கே ரஸமாகப்பண்ணுகையாலே (அக்லகில்லேவனி றையும்) என்கிற நாய்ச்சிமாருடைய பரிஷ்வங்கத்தோபாதி அவனுக்கு போக்மாகச் செல்லாநிற்குமென்கை. இவை த்ருப்தனுக்கு உபாய புத்யாத்யஜிக்கையும் ஆந்ருஶம்ஸ்யத்தாலே ஸ்வீகரிக்கையும் ஶிலாசா ஸநமாம்படி க்ரந்தஸ்தங்களாகச் சொல்லிவைத்தார்களிறே. மிகவு ம் ஸவாஸநமாக த்யாஜ்யமாக (வேர்முதல்மாய்த்து) என்றருளிச் செய்த அஹங்கார மமகார காம க்ரோத லோப மோஹாதிகளை வி டமாட்டாதே திரிகிறதுக்கு நிர்ப்பயராய் அதிகாரிபேதத்தாலே அ பிஸந்திபேதமாக யுக்தமான வ்ருத்திவிசேஷங்களுக்கு பயப்படவே ணுமோ. (காலாழும்நெஞ்சழியும்) என்று பக்திபாரவஶ்யத்தாலே ஶிதி லகரணராய் ஒன்றும் அடைவுபட வநுஷ்டிக்க க்ஷமரன்றிக்கே (என்று ன்செய்கேன் என்று பரமார்த்தரான வதிகாரிகளுக்கு ஸவாஸத்யாக மேவித்தாந்தம். த்ருப்தன் மந்தாதிகாரியாகையாலே ஆர்த்தனைப்போ லே எல்லாம்விட்டா லநர்த்தம்வருமென்று ஸர்வபூர்வ குரு அபிப்ராய ஸித்தமாக ஸர்வரஹஸ்யஸாரம். இருவருக்கும் அதிகாராநுகுண மாக ப்ராரப்தாநுபவபேதத்தோபாதி அநுஷ்டாநபேதமுண்டு. [ఆర్త స్యసద్యఃముక్తి స్స్యాదేతద్దేహవిమోచనాత్] (ஆர்த்தஸ்ய ஸத்யோமுக்திஸ் யாத் ஏதத்தேஹவிமோசநாத்) என்று ஆர்த்தனுக்கு ஸகலகர்மஸத் யோமுக்தியும் [తృప్తానామనిజన్మాన్తం దేహాన్తరనివారణీ] (த்ருப்தாநா மபிஜந்மாநாம் தேஹாந்தரநிவாரிணீ) என்று த்ருப்தனுக்கு அப்யுபகத ப்ராப்தாம்ஶ மநுபவித்தபின்பு தேஹாந்தத்தில் பலமாகவும் சொல்லா நிற்கிறதிறே. அதுபோலே அதிகாராநுகுணமாக அநுஷ்டாநபேதமு மங்கீகரிக்கவேணும். தீர்த்தாத்யங்கீகாரக்ரமமிருக்கும்படி, கீழ்ச்சொல் லப்பட்ட வதிகாரிகளை அநுவர்த்தித்து அவர் ஸ்வநைச்யத்தாலே மூ வாறுமாஸம் பரிஹரித்துக்கொண்டு (நீசனேன்நிறைவொன்றுமிலேன்) என்று கடக்கவர்த்திக்கச்செய்தேயும் அவரை பஹுஶ ப்ரார்த்தித்து ஸதாசார்யவிக்ரஹத்தோபாதி புத்திபண்ணி திருவடிவிளக்கி அவர் திருக்கையாலே [ధన్యోస్మికృతకృత్యోస్మి] (தந்யோஸ்மிக்ருதக்ருத்யோஸ்மி) என்று ஸ்வீகரிக்கவேணும். ப்ரஸாதிக்கிறக்ரமமிருக்கும்படியென்னென் னில்? விலக்ஷணனான தான் பரமவிலக்ஷணரிடத்தில் ஸ்வீகரிக்குமதே க்ருத்யமாகவும் ப்ரஸாதிக்கை ஸ்வநைச்யத்துக் கநுசிதமாகவும் நினைத் து ஸ்ரீவைஷ்ணவர்கள் அபேக்ஷித்தாலும் ஸ்வஸம்பந்திகளபேக்ஷித்தா லும் நாமதாரிகளபேக்ஷித்தாலும் தம்முடைய வாசார்ய ஸ்ரீபாததீர்த்த த்தை யவர்களுக்குக் கொடுத்துவிடவேணும். அபேக்ஷித்ததே போரு மென்று தானதிகாரியென்கிற அஹங்காரத்தாலே கேட்டவப்போதே

சடக்கென அடிகளை நீட்டிக்கொடுக்கையும் தன்னடிகளை தானே விளக்கிக்கொடுக்கையும் ஸ்வரூபஹாநி. அந்த தீர்த்தம் ஸ்வீகரிக்கையும் ஜ்ஞாநமாந்த்யஹேது. தன்னை யொருவனபேக்ஷித்தால் ஸ்வநைச்யத்தாலே தான் பரிஹரித்துக்கொண்டிருக்கையில் பலகால மபேக்ஷித்து நிரஹங்காரனு யநுவர்த்தித்தானாகில் ஸ்வாசார்யவிக்ரஹத்தை த்யாநித்துக்கொண்டு குருபரம்பராபூர்வகமாக த்வயாநுஸந்தாநம் பண்ணிக்கொண்டு ஸவிநயராய் ப்ரஸாதிக்குமது ஸ்வரூபப்ராப்தம். மற்றுமுள்ளார்க்கு ஸ்வாசார்ய தீர்த்தங்கொடுக்கையே யுசிதம். இந்த தீர்த்தம் ஜாத்யபிமாநமூடரான விலக்ஷணஜந்மஜாத ஸ்ரீவைஷ்ணவரிடத்தில் அங்கீகாரமே முக்யம். [తస్మై దేయం తతో గ్రాహ్యం] (தஸ்மைதேயம் ததோக்ராஹ்யம்) என்றும் (தருவரேல்புனிதமன்றே) என்னுமதுவே க்ராஹ்யமுமாய் பவித்ரதமமுமாய் இவனுடைய ஜாத்யாத்யபகர்ஷ நிவர்த்தகமுமாய் உஜ்ஜீவிப்பிக்கும். மற்றையது ஜாத்யுசிதகர்மங்கள் போலே ஸாமாந்யமாயிருக்கும். ஆனு லுத்க்ருஷ்டஜந்மஜாதர் ஜ்ஞாநாதிகரானாலும் ஸ்ரமஹேதுவும் ஸ்ரம்ஸம்பாவனையு முண்டாகையாலே அபக்ருஷ்ட வைஷ்ணவரென்றும் [శ్వపచోపి మహీపాల విష్ణుభక్తో ద్విజాధికః] (ஸ்வபசோபிமஹீபால விஷ்ணுபக்தோத்விஜாதிக:) என்றும் [భక్తిరష్టవిధా హ్యేషా యస్మిన్ మ్లేచ్ఛేపి వర్తతే । స విప్రేన్ద్రో మునిః శ్రీమాన్ స యతిస్స చ పణ్డితః] (பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந்ம்லேச்சேபிவர்த்ததே - ஸவிப்ரேந்த்ரோமுநிஸ்ரீமாந் ஸயதிஸ்ஸசபண்டித:) என்றும் ஸ்வபசராலும் பகவத்பக்தராகில் த்விஜாதிகராகவும் ஸ்ரீமாநாகவும் யதிகளாகவும் பண்டிதராகவும் சொல்லி வர்ணாஸ்ரம ததநுரூபாநுஷ்டாநங்க ளாசரிக்கிற அஹங்காரராஹித்ய ஜந்மவ்ருத்தங்களுடையராய் பகவத்பக்தரான விலக்ஷணரே பூஜ்யரென்றும் ஜ்ஞாநாதிகளும் தீர்த்தாதிகளு மபேக்ஷித்தால் அவருக்கே கொடுக்கவேணுமென்றும் க்ருபைபண்ணி ப்ரஸாதித்தாராகில் ஸ்வீகரிக்கவேணுமென்றும் பகவதபிப்ராய ஸித்தமாக வ்யாஸாதிகளும் (பயிலும்திருவுடையார் யவரேலு மவர்கண்டீர்) என்றும் (தருவரேல்புனிதம்) என்றும் ஆழ்வார்களும் அவரே பாவநதீர்த்த ப்ரஸாதராகச் சொன்னார்களிறே. அபக்ருஷ்டஜந்ம ருத்தேஸ்யரானால் தத்வ்ருத்தங்களு முத்தேஸ்யமாய்வாராதோ, அப்போ ஸாஸ்த்ரவிரோதமும் ஸ்வரூபவிரோதமும் உபாயோபேயாதிகாரப்ரச்யுதியும் ப்ரஸக்தமாமே இதுக்கு தாத்பர்ய மருளிச்செய்யவேணுமென்னெ? அநுவர்த்தநீயராகச்சொன்ன வதிகாரிகள் [భక్తిరష్టవిధా హ్యేషా యస్మిన్ మ్లేచ్ఛేపి వర్తతే] (ஸக்திரஷ்டவிதாஹ்யேஷாயஸ்மிந்ம்லேச்சேபிவர்த்ததே) என்றும் (பயிலுந்திருவுடையார் யவரேலும்) என்றும்

ஜந்மத்தா லபக்ருஷ்டரானாலும் மத்பக்தஜந வாத்ஸல்யமென்று தொடங்கி சொன்ன அஷ்டவித பக்திகளும் பகவதநுபவ ஸம்பத்தியுமுடைய திருப்பாணாழ்வார் மாறநேர்நம்பி திருக்கச்சிநம்பி விளாஞ்சோலைப்பிள்ளை முதலானோர் வர்த்திக்கிறாப்போலே லோகயாத்ரையையும் ஸம்ஸார ஸம்பந்தமும் மற்றும் பந்துஸங்கமும் பரித்யஜித்து ஸ்வரூபவிருத்தங்களுமாய் ஸத்வவிநாசகரங்களுமாய் ரஜஸ்தமோவிவ்ருத்திஹேதுக்களுமான நிஷித்தப்ரவ்ருத்திகளை யருவாநத்து நான் கீழ்ச்சொன்ன வ்ருத்திநிஷ்டர்படியே தம்முடம்பை மறந்து பக்திபாரவஶ்யத்தாலே திரிகிறவதிகாரிகள் [ఏకాన్తీ వ్యపదేష్టవ్యో నైవ గ్రామకులాదిభిః। విష్ణునా వ్యపదేష్టవ్య స్తస్య సర్వం స ఏవ హి] (ஏகாந்தீவ்யபதேஷ்டவ்யோ நைவக்ராமகுலாதிபி: - விஷ்ணுநாவ்யபதேஷ்வ்ய ஸ்தஸ்யஸர்வம்ஸஏவஹி) என்று க்ராமகுலாதி வ்யபதேஶமின்றிக்கே ஸகலவர்ணாஶ்ரம வ்யாவ்ருத்தராய் பரமவிலக்ஷணராய்த் திரியுமதொழிய தமக்கொரு நிக்ருஷ்டவர்ணமும் ததநுகுண நிஷித்தவ்ருத்தமும் மேறிட்டுக்கொண்டு திரிவரோ, திரிந்தாலவருத்தேஶ்யராவரோ, தாஸ்யாநுகுணமான நிரஹங்கார ஜந்மமும் தாஸ்யக்ருத்யங்களாகிற நிரஹங்கார வ்ருத்தமு முடைய பரமவிலக்ஷணரையன்றோ உத்தேஶ்யரென்று சொன்னது. இப்படிப்பட்ட வதிகாரிகள் எங்கேனு மொருவருண்டாகி லுத்தேஶ்யரென்று சொல்லுகிறதொழிய அஹங்காரார்த்தகாம பரவஶரான மூர்க்கரெல்லாரும் க்யாதிலாப பூஜாநுவர்த்தநாதிகளுக்காக ஶிரோமுண்டநம்பண்ணிக்கொண்டு வைஷ்ணவநாமரூபங்களுடையராய் யதாபூர்வ நிஷித்தாநுஷ்டாநரதராய் பத்தஸம்ஸாரிகளாய் திரியவும் நிரஹங்காரிகளாயிராதே நாமன்றோ விலக்ஷணவைஷ்ணவரென்று அஹங்கரித்துக்கொண்டு திரிகிற ஸாமாந்யவிசேஷ ஶாஸ்த்ரங்களிரண்டுக்கும் தப்பி நடக்கிற உபயப்ரஷ்டரை யநுவர்த்திக்கவேணுமென்று ஆரேனும் சொன்னரோ. வஞ்சநார்த்தமாக வானாலும் நாமரூபங்களுண்டாகையாலே ததநுகுணமாக கிஞ்சித்கரித்து நிந்திக்கப்போகாதே பரமஸத்வநிஷ்டராய் பரமவிலக்ஷணராய் ஸ்வவைநச்யாநுஸந்தாநநிரதராய் நிரஹங்காரிகளாய் பரமார்த்தருமாய் [యః పశ్యతి శుభాచారం వైష్ణవం వీతకల్మషం। యస్మిన్ కస్మిన్ కులే జాతం ప్రణమేద్దణ్డవద్భువి] (ய:பஶ்யதிஶுபாசாரம் வைஷ்ணவம்வீதகல்மஷம்-யஸ்மிந்கஸ்மிந் குலேஜாதம் ப்ரணமேத்தண்டவத்புவி) என்கிறபடியே ஸதநுஷ்டான ஸம்பந்நராய் வீதகல்மஷரான வைஷ்ணவர்கள் இந்தளத்தில் தாமரைபூத்தாப்போலே இருள்தருமாஞாலமான இவ் விபூதியிலே ஒரொருவருண்டாய் [ఆహ్లాదశీతనేత్రామ్బుః పులకీకృతగాత్రవాన్। సదా పరగుణావిష్టో ద్రష్టవ్యస్సర్వదేహిభిః] (ஆஹ்லாதஶீதநேத்ராம்பு: புளகீக்

ருதகாத்ரவான்-ஸதாபரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:' என்று காணப்பட்டாராகில் ஜந்மக்கொற்றைபாராதே தண்டவத்ப்ரணாமம்பண்ணி [విప్రాద్ద్విషడ్గుణయుతాదరవిన్దనాభ పాదారవిన్దవిముఖాచ్ఛ్వపచం వరిష్ఠం। మన్యే తదర్పితమనోవచనేహితార్థ ప్రాణం పునాతి స కులం న తు భూరిమానః] விப்ராத்த்விஷட்குணயுதாதரவிந்தநாப பாதாரவிந்தவிமுகாத்ஶ்வபசம்வரிஷ்டம் - மந்யே ததர்ப்பிதமநோவசநேஹிதார்த்த ப்ராணம் புநாதி ஸ குலம் ந து பூரிமாந:) என்கிறபடியே ஸ்பர்ஶபாவநரென்று அநுவர்த்தித்தால் ஒருவிரோதமும்வாராது-பகவானுக்குமுகப்பாய்ஸ்வரூபமுமுஜ்ஜீவிக்கும். ஜ்ஞாநாதிகர் நிஹீநகுலஜாதராகிலும் ஆதரணீயரென்னு மர்த்தம் ஶங்கர பாஸ்கர யாதவாதி மதாந்தரஸ்தரும் அங்கீகரித்தாரிறே [జాగ్రత్స్వప్నసుషుప్తిషు స్ఫుటతరా యా సంవిదుజ్జృమ్భతే యా బ్రహ్మాదిపిపీలికాన్తతనుషు ప్రోతా జగత్సాక్షిణీ। సైవాహం న చ దృశ్యవస్త్వితి దృఢప్రజ్ఞాపి యస్యాస్తి చేచ్చణ్డాలోఽస్తు స తు ద్విజోఽస్తు గురురిత్యేషా మనీషా మమ] (ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்திஷு ஸ்புடதரா யாஸம்விதுஜ்ஜ்ரும்பதே யாப்ரஹ்மபிபீலிகாந்த தநுஷு ப்ரோதாஜகத்ஸாக்ஷிணீ - ஸைவாஹம் ந ச த்ருஶ்யவஸ்த்விதித்ருட ப்ரஜ்ஞாபி யஸ்யாஸ்தி சேத் சண்டாளோஸ்து ஸ து த்விஜோஸ்து குருரித்யேஷா மநீஷா மம) என்று ஸ்வமதாநுகுண ஜ்ஞாநமுடையவர் சண்டாளராகிலும் ப்ராஹ்மணராகிலும் கௌரவ்யரென்று சொல்லிப்போந்தாரிறே. ஆகையாலே பகவத்விஷயைக ஜ்ஞாநபக்தி பரிபூர்ணராய் [పరమాత్మని యో రక్తో విరక్తోఽపరమాత్మని] (பரமாத்மநி யோரக்தோ விரக்தோபரமாத்மநி) என்று அபரமாத்ம வைராக்யமுடைய வதிகாரிகளையே யநுவர்த்தித்தால் ஸர்வஸம்மதமாயிருக்கும் [స చ పూజ్యో యథా హ్యహం] (ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்) என்றும் (சயமேயடிமைதலைநின்றார் - கோதிலடியார் - நீக்கமில்லாவடியார் தம்மடியாரடியாரெங்கோக்களவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்லகோட்பாடே - வாய்க்கதமியேர்க்கு) என்றும் (திடங்கொண்டஞானியர்க்கே யடியேனன்புசெய்வது) என்றும் அருளிச்செய்தாரிறே. [శరణాగతేః పూర్వం] (ஶரணாகதே: பூர்வம்) [మద్భక్తం శ్వపచం వాపి] மத்பக்தம் ஶ்வபசம்வாபி) என்றும் [చణ్డాలమపి మద్భక్తం] (சண்டாளமபிமத்பக்தம்) [అపి చేత్సుదురాచారో భజతే మామనన్యభాక్] (அபிசேத்ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக்) என்றும் (சண்டாளசண்டாளர்களாகிலும்-வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணர்க்காளென்றுள் கலந்தார்) என்றும் (எக்குற்றவாள ரேதுபிறப்பேதியல்வாகினின்றோரக்குற்றமப்பிறப்பு) என்றும் எப்படிப்பட்ட நிஹீநஜந்மவ்ருத்தங்களையுடையராகிலும் [మద్భక్తజనవాత్సల్యం పూజాయాం] (மத்பக்தஜநவாத்ஸல்யம்பூஜாயாம்) என்று தொடங்கி சொன்னபடியே அஷ்டவித பக்திஸம்பந்நராய் ஆந்தர பாஹ்யேந்த்ரிய

நிக்ரஹமுடையராய் நிர்தோஷராய் அநந்யப்ரயோஜநராய் க்ருதஜ்ஞ ஞானிகளானவரை அநுவர்த்திக்கவேணுமென்கிற வர்த்தமே [லக்ஷ்மீநாத ஸமா ரம்பாம்] (லக்ஷ்மீநாதஸமாரம்பாம்) என்றுதுடங்கி குருபரம்பரையிலுள் ளவதிகாரிகள் எல்லாருமருளிச்செய்தாரிறே. ஆனால் (டயிலுந்திருவுடை யார்யவரேலும்) என்றும் (இராமாநுசனை மேவும்நல்லோர் ரெக்குற்ற வாள ரெதுபிறப்பே தியல்வாகநின்றோர்) என்றும் சொல்லுகையாலே உத்தரகாலத்திலு மெப்படிப்பட்ட நிஷித்தவ்ருத்தரானாலும் உத்தேஶ்ய ரென்னு மர்த்தம் தோன்றாதோவென்னில்? நிஷித்தஜந்மவ்ருத்தங்கள் பூர் வதசையில் கொள்ளாதே உத்தரதசையிலு மங்கீகரித்தால் ப்ரதமசரம விஷயஜ்ஞானஶக்திக ளில்லையாய்விடுகையாலே அதுசொல்லவொண்ணா து. ஆனால் ஜந்மத்துக்கு பூர்வஜந்மமென்று கொள்ளவேணுமென்று வாராதோவென்னில்? அதுவே ஸத்யம் [அஸங்கோச] (அஸங்கோசம்) எ ன்றும் (அன்றுநான்பிறந்திலேன்) என்றும் (பண்டைக்குலம்) என்றும் ஆ ஶ்ரயணாநந்தரத்தி லிது வேறே ஒருஜந்மமாக வருளிச்செய்தாரிறே. இவ் வர்த்தம் நெஞ்சில்கொள்ளாதே (ஏதியல்வாகநின்றோர்) என்று உத்தர கால துர்வ்ருத்த ருத்தேஶ்யரென்றால் ஸகலப்ரமாண விரோதமுமாய் ஸர்வாநிஷ்டகரமுமாய் ஸர்வஶிஷ்டகர்ஹ்யமுமாய் ப்ராக்ருத ஸர்வ ஶிஷ்டாசார விருத்தமுமாய் ஸ்வரூபநாஶகமுமாயிருக்கும். அர்த்தகா மாதிகளுக்காக ததீய நாமரூபங்களை யுடையராய் எம்பெருமானார் திரு வடிகளே ஶரணமென்று வாங்மாத்ரம்சொல்லிக்கொண்டு அஹங்காரா திகளாலே ஶாகவதாபசாரபரராய் உருமாய்ந்து போருகிற கர்மசண்டா ளரை யுத்தேஶ்யராகக் கொள்ளவேண்டிவரும், ஏதியில்வு என்றபோது ஒருநிஷித்தவ்ருத்தமும் கூடாதென்னவொண்ணாதிறே யென்ன, ஜி தேந்த்ரியாக்ரேஸரராய் சுத்தஸத்வஸம்பந்நராய் ஸாம்ஸாரிகதுஷ்கர்ம கந்தரஹிதராய் பரமவிலக்ஷணரான எம்பெருமானாரை யாஶ்ரயித்து அ வர் கருத்தையறிந்து அவர் அபிமாநத்திலே யொதுங்கின சரமபர்வநிஷ் டர் விஷயாஸக்தசித்தராவரோ, ரஜஸ்தமப்ரசுரராவரோ, அஹங்காரிக ளாவரோ, தாரபுத்ராதிகளைவிடமாட்டாதே பத்தஸம்ஸாரிகளாவரோ, அர்த்தார்ஜநாதி தத்பரராய் அஸேவ்யஸேவாநிரதராவரோ, அவிலக்ஷ ண க்ருத்யங்களானநிஷித்தாநுஷ்டானம் பண்ணுவரோ, இந்த நிஷித்தக் ருத்யங்களில் சரமபர்வநிஷ்டர்க்கு உத்தரகாலத்தில் ஏதியல்வாக நின் றோரென்கைக்குயோக்யமான நிஷித்தாநுஷ்டாநமேதோ நானறியேன் சொல்லுமென்ன? நிருத்தராய் ஸ்வாமிந்தேவர் எப்படிசொன்னாலும் இன்னமுமிதுவேயநுவர்த்திக்கிறது. சிலர் ஜ்ஞாநாதிகராய் வீதராகரா யிருந்து வைத்தும் ஜாத்யுசிதாபிமாந நிவ்ருத்திக்குஸஹக்ருதமென்றும்

சரமச்லோகத்தில் சொன்ன ஸர்வதர்மநிவ்ருத்திக்கு [అహరహస్సంధ్యా ముపాసీత] (அஹரஹஸ்ஸந்த்யாமுபாஸீத) இத்யாத்யங்கஸஹிதமான விஹிதரூபதர்மங்களோபாதி [నకళఞ్జంభక్షయేత్] (நகளஞ்ஜம்பக்ஷயேத்) இத்யாதி நிவ்ருத்திரூபதர்மங்களும் த்யாஜ்யங்களாகையாலே தத்யாகத்துக்காக நிஷித்தஸ்வீகார மபேக்ஷிதமென்றுசொல்லிக்கொண்டு [చరేద్వధర్మచరః] (சரேதவிதிகோசர:) என்கிறபடியே பகவத் ப்ரபந்நர் ஶாஸ்த்ரவஶ்யரன்றிக்கே வர்த்திக்கவேணுமென்று நிஷித்தஸ்வீகாரம் விதியாகச் சொல்லாநின்றார்களே அதுக்கடியென்னென்ன? இதுக்கடி, நிரங்குஶஸ்வதந்த்ரனான ஸர்வேச்வரனுடைய லீலார்த்தமான அவித்யாகார்யமென்று கொள்ளவேணும். எங்ஙனேயென்ன ஜந்மத்துக்கு கொற்றையும் அதுக்கு பரிஹாரமும் ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் (பழுதிலாவொழுகலாற்று) என்கிறபாட்டாலே ஜந்மக்கொற்றை வம்ஶப்ரவாஹத்தில் நாம் நிரவத்யமாய் நின்றோம் வேதஶாஸ்த்ரங்களை யதிகரித்தோம் அவற்றுக்கு பொருள்சொல்லவல்லோமென்கிற அபிஜநவித்யாவ்ருத்த மதங்களாகவும் அதுக்குப் பரிஹாரம்(இழிகுலத்தவர்களேலுமெம்மடியார்களாகில் தொழுமினீர்கொடுமின்கொள்மின்) என்று ஜாத்யபிமாந ஶூந்யரான விலக்ஷணஜந்ம வைஷ்ணவாநுவர்த்தநம் என்று ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்யாநிற்கச் செய்தேயும் லோகஶகலத்துக்காகமணிமாடத்தை தஹிப்பிக்குமாப்போலே அஹங்கார நிவ்ருத்திக்காக ஸ்வரூபவிரோதி க்ருத்யங்களி லன்வயிக்கை. பகவத்ப்ரஸாதத்தாலே பிறக்கவேண்டுகிற ஜாத்யஹங்கார நிவ்ருத்தி பரதாரபரிக்ரஹ அபக்ஷ்யபக்ஷணாதி நிஷித்தாநுஷ்டாநத்தாலே ஸித்திக்குமென்று ப்ரமித்து கைங்கர்யவ்யதிரிக்த ஸ்வப்ரவ்ருத்திகளொன்றும் ஸஹியாத பகவதத்யந்த பாரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கும் சேராதவையுமாய் உபாயோபேய விரோதிகளுமான பரஹிம்ஸா பரதார பரிக்ரஹ அபேயபாந அபக்ஷ்யபக்ஷணாதிகள் பண்ணுகை ஆஸுரக்ருத்யங்களாகையாலே பகவல்லீலார்த்தமான அவித்யாகார்யங்களாயிருக்கும். இனி நிவ்ருத்திரூப தர்மத்யாகத்துக்கு அபேக்ஷிதமென்றதுக்கு பரிஹாரம் முன்பு சொன்னோமேயாகிலும் சொல்லுகிறேன், எங்கேனு மோரிடத்திலே யாரானும் ஒருவரானாலும் தர்மத்யாகத்துக்கு நிஷித்தப்ரவ்ருத்திகள் அபேக்ஷிதமென்றுசொல்லிற்றில்லையே. ப்ரபத்யநுஷ்டாந விஶதீகரணஸ்தலங்களிலே [ఉపాయాపాయనిర్ముక్తా మధ్యమాం స్థితిమాస్థితా] (உபாயாபாயநிர்முக்தா மத்யமாம்ஸ்திதிமாஸ்திதா) என்று உபாயாபாயநிர்முக்தையாய் மத்யஸ்தையாய் நின்றதென்றும் [ఉపాయాపాయసంయోగే నిష్ఠయాహీయతేనయా] (உபாயாபாயஸம்யோகே நிஷ்டயாஹீயதேநயா) என்றுதுடங்கி உபா

யாபாயஸம்யோகத்தில் ஸித்தோபாயநிஷ்டை நழுவுமென்றும் அதுக்கு ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமென்றும் சொல்லுகையொழிய அபாயமான அக்ருத்யகரணம் ஸகவதிஷ்டமென்றும் இது ப்ரபந்நிக்கபேக்ஷிதமென்றும் ப்ரபந்நனுக் கவஶ்யகரணீயமென்றும் சொன்னதில்லாமையாலே ஸாமாந்ய விஶேஷ ஶாஸ்த்ரவிஹாகமற ஸகலஶாஸ்த்ரவிருத்தமுமாய் ஶிஷ்டகர்ஹிதமுமாய் ஸகவதநிஷ்டமுமாய் [ఆశాపాశశతైర్బద్ధాః కామక్రోధపరాయణాః। ఈహన్తే కామభోగార్థం అన్యాయేనార్థసఞ్చయాన్] (ஆஶாபாஶஶதைர்பத்தா꞉ காமக்ரோதபராயணா꞉ - ஈஹந்தே காமபோகார்த்தம் அந்யாயேநார்த்தஸஞ்சயாந்) என்றும் [అనేకచిత్తవిభ్రాన్తాః మోహజాలసమావృతాః। ప్రసక్తాః కామభోగేషు పతన్తి నరకేऽశుచౌ] (அநேகசித்தவிப்ராந்தா꞉ மோஹஜாலஸமாவ்ருதா꞉ - ப்ரஸக்தா꞉ காமபோகேஷு பதந்தி நரகேஶுசௌ) என்றும் சொல்லுகிறபடியே காமக்ரோதபராயணராய் இது பரமார்த்தமென்று மாயாமோஹிதராய் திரிந்தார்களாகில் ஸகவந்நிக்ரஹ பாத்ரராய் போவார்களாகையாலே சப்தஶக்தியாலே காட்டிலும் தத்வ்யதிரிக்தமான ப்ரவ்ருத்திரூப தர்மங்களுக்கே த்யாஜ்யத்வ மங்கீகரிக்கவேணுமென்ன, காட்டிலும் பரிஹரிக்கிறதென்னென்ன, பாதகமுண்டானால் பரிஹரிக்கவேணுமிறே. திருமந்த்ரத்தில் நாரபதத்தாலே [బ్రహ్మాద్యాః స్థావరాన్తాశ్చ లోకాశ్చ సచరాచరాః। ఏవమణ్డాన్యనన్తాని తత్సర్వం నారముచ్యతే] (ப்ரஹ்மாத்யா꞉ ஸ்தாவராந்தாஶ்ச லோகாஶ்ச ஸசராசரா꞉ - ஏவமண்டாந்யநந்தாநி தத்ஸர்வம் நாரமுச்யதே) என்று ஸகவத்ஸ்வரூப வ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களையும் காட்டாநிற்கச்செய்தேயும் தத்புருஷஸமாஸத்தில் உபாயோபேய ஸாவங்களைச் சொல்லுமளவில் அசேதநங்களுக் கநபேக்ஷிதங்களாகையாலே அவற்றை பரிஹரித்து சேதநருக்கே சொல்லுமாப்போலேயும் பஹுவ்ரீஹிஸமாஸத்திலே ஆத்மாஶ்ரய தோஷமும் அநவஸ்தையும் வருமென்று குணங்களைவிட்டு தத்வ்யதிரிக்த நாரங்களுக்கே அந்தர்யாமித்வம் சொன்னாப்போலேயும் ஸ்வரூபோபாயவிருத்தத்வாதி பஹுதோஷமுண்டாகையாலே நிவ்ருத்திரூப தர்ம வ்யதிரிக்த ப்ரவ்ருத்திரூப தர்மத்யாகங் கொள்ளவேணுமென்ன, ஆனால் ஸாகல்யத்துக்கு ஸங்கோசம்வருமென்னில் ஸாகல்ய ஸங்கோசம் வாராதபடி யெல்லாம் ஸவாஸநத்யாகம்பண்ணப் புக்கால் தர்மஶப்தத்தாலே "அவதார ரஹஸ்யஜ்ஞாநம் புருஷோத்தமவித்யை தேஶவாஸம் திருநாமஸங்கீர்த்தநம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை" முதலானவையெல்லாம் சொல்லுகையாலே இவையெல்லாம் ஸவாஸநத்யாகம்பண்ணவேண்டி வருமிறே. சப்தசக்தியாலே காட்டுமதே ப்ரதாநமன்று, நிவ்ருத்திரூப தர்மத்யாகம் பண்

ணச்சொன்னால் [illegible] (ஆந்ருசம்ஸ்யம்பரோ தர்ம:) என்று சொன்ன ஆந்ருசம்ஸ்யமும் விட்டு ச்ருதி ஸ்ம்ருதி நிஷித்தங்களான பித்ரு மாத்ரு குருத்ரோஹங்களும் ஹாதுபாதையும் ப்ரஹ்மஹத்யா ஸுராபாந ஸ்வர்ணஸ்தேய குர்வங்கநா கமநாதிகளும் பண்ணிக்கொண்டு ந்ருசம்ஸராய் ஹிரண்ய ராவண கம்ஸாதிகளைப்போலே ப்ரபந்நரும் நிஷித்தாநுஷ்டாநபரராய் திரியவேண்டிவரும். இப்படி ஸ்வரூபாநுரூபமான குணாநுஷவகைங்கர்யங்களும் ஆத்மகுணங்களான சமதமாதிகளும் ஆந்ருசம்ஸ்யாதிகளும்விட்டு நிஷித்தங்களெல்லாமாசரித்துத் திரிந்தாலாயிற்று ஸர்வதர்மசப்தங்களுக்கு ஸங்கோசந்தீருவது ஆகையாலே ஸங்கோசந்தீர்க்கவேணுமென்று ப்ரவ்ருத்திக்கட்போகாதிறே. இனி [illegible] (சரே தவிதிகோசர:) என்றது [illegible] (ஜ்ஞாநவைராக்யஸம்பந்நோ விஷ்ணுஸக்தோவிசேஷத: - நவிங்காங்யாச்ரயேத்ஸத்வா த்சரே தவிதிகோசர:) என்று ஜ்ஞாநவைராக்ய ஸம்பந்நராய் விசேஷித்து பரமஸக்தி பர்யந்தமான பரிபூர்ணஸக்தியை யுடைய வதிகாரி ஸக்திபாரவச்யத்தாலே ப்ராப்தாப்ராப்த விவேகசூந்யனாய் வர்ணாச்ரமங்களை கோசரித்து அடைவுபட வநுஷ்டாநம்பண்ண க்ஷமனன்றிக்கே கண்ணுஞ்சுழலையிட்டு (என்னான் செய்கேன்) என்று ததேகபரதந்த்ரனாய் ததேகநிர்வாஹ்யனாய் ததிதரநிஸ்ப்ருஹனாய் (பேர்பலசொல்லிப்பிதற்றி) என்கிறபடியே ஸகவந்நாமங்களை ஜல்பித்துக்கொண்டு ஷ்ராந்தரென்று பிறர்சொல்லும்படி நகராரண்ய விபாகமற ஸஞ்சரித்துக்கொண்டு ஸம்ஸாரிகள் பரிஹஸிக்கும்படி விசிஷ்டவேஷாநுகுணமாக விதித்த வர்ணாச்ரமதர்மங்களை கோசரிக்கமாட்டாதே திரியுமென்று சொல்லிற்றித்தனை யொழிய ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களிரண்டுக்கும் தப்பின உஸயஷ்ரஷ்டரை பத்துப்பேரை கூட்டிக்கொண்டு தீர்ப்பாரையாமினியில் கட்டுவிச்சியைப்போலே அத்தைத்தா வித்தைத்தாவென்று ஏதுவானுஞ்செய்து மருந்தாகுமென்று சொல்லிக்கொண்டு (நீரணங்காடும்பொய்காண்கிலேன்) என்று சிஷ்டர்கர்ஹிக்கும்படி நிஷித்தாநுஷ்டாநம் பண்ணிக்கொண்டு அவிதிகோசரனாய் திரிகிறானென்று ப்ரமாணஞ்சொல்லிற்றில்லையே. முந்துற முன்னம் [illegible] (ஜ்ஞாநவைராக்யஸம்பந்ந:) என்றும் [illegible] (விஷ்ணுஸக்தோவிசேஷத:) என்றும் அதிகாரியை நிர்தேசித்து [illegible] (அவிதிகோசர:) என்கையாலே வர்ணாச்ரமாநுகுண ப்ரவ்ருத்திதர்ம நிவ்ருத்திமாத்ரம் சொல்லவேணுமித்தனையொழிய ஸாமாந்யருட்பட அநுவருத்து பரித்யஜிக்கிற

ஶ்ருதி ஸ்ம்ருதி விருத்தமான நிஷித்தாநுஷ்டாநம் பண்ணுகிறானென்று சொல்லவொண்ணாதிறே. ஆனால் [శ్రుతిస్స్మృతిర్మమైవాజ్ఞా] (ஶ்ருதிஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா) என்று ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகள் பகவதாஜ்ஞாரூபங்களென்று ஆசரிக்குமளவில் வர்ணாஶ்ரமோசிதமான விதிகளெல்லாம் பரிக்ரஹித்து நிஷேதங்களெல்லாம் பரித்யஜிக்கவேண்டாவோ, ப்ரவ்ருத்யம்சம் விட்டதுக்கு ப்ரத்யவாயம்வாராதோ, நிஷித்தம் பரித்யஜித்தமாத்ரத்திலே ஶாஸ்த்ரமெல்லாம் ஜீவிக்குமோவென்னில், ஶாஸ்த்ரங்களில் ப்ரவ்ருத்யம்ஶம் கொள்கொம்பிலேறிடுகைக்கு சேதநருடைய ருசியைப்பார்த்து ஶத்ருமாரணகாமனான தமஃப்ரசுரனைக்குறித்து [శ్యేనేనాభిచరన్ యజేత] (ஶ்யேநேநாபிசரந்யஜேத) என்று மாரணஹோமம் முதலானவை விதித்து அத்தாலே ஶாஸ்த்ரவிஶ்வாஸத்தையுண்டாக்கி அதுண்டானபின்பு ரஜஃப்ரசுரனைக்குறித்து [జ్యోతిష్టోమేన స్వర్గకామో యజేత] (ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத) என்று இஹலோகாத் விலக்ஷணமான ஸ்வர்க்கபோகாநுபவத்துக்காக ஜ்யோதிஷ்டோமாதிகளை விதித்து அத்தாலே ஆத்மநித்யத்வத்தை யறிவித்து அநந்தரம் அநந்தஸ்திரபல மோக்ஷகாமனான ஸத்வோத்தரனைக்குறித்து [బ్రహ్మవిదాప్నోతి పరం - బ్రహ్మవేద బ్రహ్మైవ భవతి - ఆత్మా వా అరే ద్రష్టవ్యః శ్రోతవ్యో మన్తవ్యో నిదిధ్యాసితవ్యః] (ப்ரஹ்மவிதாப்நோதிபரம்-ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி - ஆத்மாவா அரே த்ரஷ்டவ்ய ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யஃ) என்று பகவதுபாஸநத்தை விதித்து பகவச்சேஷத்வத்தை இசைவித்து பரமஸத்வநிஷ்டனாய் ஸகலேதரநிஸ்ப்ருஹனான ஏகாந்தியைக்குறித்து [ముముక్షుర్వై శరణమహం ప్రపద్యే - తస్మాన్న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః] (முமுக்ஷுர்வைஶரணமஹம்ப்ரபத்யே-தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹுஃ) என்று ஸகலேதரபரித்யாகபூர்வகமாக ந்யாஸத்தைவிதித்து ஆத்மாவினுடைய பாரதந்த்ர்யத்தை வெளியிட்டு உத்தரோத்தராதிகாரிகளுக்கு பூர்வபூர்வவிஹிதங்களை பரித்யஜிக்கச் சொல்லிக்கொண்டு இப்படி யதிகாரிபேதத்தாலே ப்ரஹ்மசர்யாத்யாஶ்ரமங்களிலும் அக்நிஷ்டோமாதி க்ரதுதீக்ஷைகளிலும் விதிகள் பரஸ்பரபேதங்களாய் ஒருக்கால் விதிப்பது ஒருக்கால் நிஷேதிப்பதுமாய் நின்றநின்ற வளவுகளுக்கீடாயிருக்கும். இவற்றில் [ఏకాన్తీ వ్యపదేష్టవ్యో నైవ గ్రామకులాదిభిః। విష్ణునా వ్యపదేష్టవ్య స్తస్య సర్వం స ఏవ హి] (ஏகாந்தீவ்யபதேஷ்டவ்யோ நைவக்ராமகுலாதிபிஃ - விஷ்ணுநாவ்யபதேஷ்டவ்ய ஸ்தஸ்யஸர்வம்ஸஏவஹி) என்று ஸகலேதர வ்யாவ்ருத்தனாய் க்ராமகுலாதி வ்யபதேஶமின்றிக்கே பகவதேக வ்யபதேஷ்டவ்யனாயிருக்கிற ப்ரபந்நனுக்கு [న కిఞ్చిదపి కుర్వాణో విష్ణోరాయతనే వసేత్] (நகிஞ்

சிதபிர்வாணோ விஷ்ணோராயதநேவஸேத்) என்கிறபடியே ஸகலபகவத்ஸ
ஹவ கைங்கர்ய வ்யதிரிக்தங்களான ஸகலப்ரவ்ருத்திகளும் த்யாஜ்யங்க
ளென்று சரமஶ்லோகத்திலும் ததர்த்தப்ரதிபாதகங்களான மற்றும
நேக ஸ்தலங்களிலும் விதிக்கையாலே ப்ரவ்ருத்யம்ஶம் பரித்யஜிக்கைக்
கு ப்ரதிபந்தகமில்லை. விதிக்கிற ஶாஸ்த்ரமே அதிகாரிபேதத்தாலே
நிஷேதித்தால் த்யஜிக்கைக்கு குறையில்லையே. அதுபோலே விஶிஷ்
டவேஷங்களை நோக்கி வர்ணதர்மங்களைக் குறித்து விதித்தவையெல்
லாம் [నాహంవిప్రోనచనరపతి ర్నాపివైశ్యోనశూద్రో నోవావర్ణీనచగృహపతి ర్నోవ
వస్థో యతిర్వా । కింతుశ్రీమద్భువనభవన స్థిత్యపాయైకహేతో ర్లక్ష్మీభర్తుర్నరహరితనో
ర్దాసదాసస్యదాసః] (நாஹம்விப்ரோநசநரபதிர் நாபிவைஶ்யோநஶூத்
ரோ - நோவாவர்ணீநசக்ருஹபதிர் நோவநஸ்தோயதிர்வா - கிந்து
ஸ்ரீமத்புவநபவந ஸ்தித்யபாயைகஹேதோர் லக்ஷ்மீபர்துர்நரஹரித
நோர் தாஸதாஸஸ்யதாஸ:) என்று வர்ணாஶ்ரமங்களில் ஒட்ட
ற்று [అద్యప్రభృతిహేలోకా యూయంయూయంవయంవయం । అర్థకామ
పరాయూయం నారాయణపరావయం ॥ విష్ణుదాసావయంయూయం బ్రాహ్మణా
వర్ణధర్మిణః । అస్మాకం దాసవృత్తీనాం యుష్మాకం నాస్తిసఙ్గతిః । నాస్తిసఙ్గతిరస్మా
కం యుష్మాకస్తుపరస్పరం । వయన్తుకింకరావిష్ణో ర్యూయమిన్ద్రియకింకరాః] (அ
த்யப்ரப்ருதிஹேலோகா யூயம்யூயம்வயம்வயம் - அர்த்தகாமபராயூய
ம் நாராயணபராவயம் - விஷ்ணுதாஸாவயம்யூயம் ப்ராஹ்மணாவர்
ணதர்மிண: - அஸ்மாகம்தாஸவ்ருத்தீநாம் யுஷ்மாகம்நாஸ்திஸங்கதி: -
நாஸ்திஸங்கதிரஸ்மாகம் யுஷ்மாகந்துபரஸ்பரம் - வயந்துகிங்கராவிஷ்
ணோ: யூயமிந்த்ரியகிங்கரா:) என்று அர்த்தகாமபரவசராய் ஶிஶ்நோ
தரபராயணரான ஸம்ஸாரிகளையும் உபாயாந்தரநிஷ்டரான வர்ணதர்மி
களையும் இந்த்ரியகிங்கரரான ஶப்தாதிவிஷய ப்ரவணரையும் ஸமமாக
த்யஜித்து துறைவேறிட்டுக்கொள்ளுகிற ஸ்ரீவில்லிபுத்தூர் பகவரைப்
போன்ற ஏகாந்திகளான பரமவைதிகருக்கு த்யாஜ்யங்களாக கு
றையில்லை [అత్యన్తభక్తియుక్తానాం నశాస్త్రంనైవచక్రమః] (அத்யந்தபக்தியு
க்தாநாம் நஶாஸ்த்ரம்நைவசக்ரம:) என்றும் [తాన్త్రికంవైదికంత్యక్త్వా ప
రమంవైదికంబుధైః। అవలంబ్యానుసన్ధత్యా ద్విష్ణోశ్శేషత్వమాత్మనః] (தாந்த்ரிகம்
வைதிகம்த்யக்த்வா பரமம்வைதிகம்புதை: - அவலம்ப்யாநுஸந்தத்யா
த் விஷ்ணோஶ்ஶேஷத்வமாத்மந:) என்றும் [విముక్తాన్యసమారమ్భో నారా
యణపరోభవ] (விமுக்தாந்யஸமாரம்போ நாராயணபரோபவ) என்றும்
[సర్వధర్మాన్పరిత్యజ్య మామేకం శరణంవ్రజ] (ஸர்வதர்மாந்பரித்யஜ்ய மாமேக
ம்ஶரணம்வ்ரஜ) என்றும் (இவ்வளவு பிறந்தவ னிவற்றைவிட்டால் குற்
றம்வாராது) என்றும் இவ்வதிகாரிக்கு விதிபரித்யாகம் ஸகலவிஶேஷ

ஶாஸ்த்ரஸம்மதமுமாய் ஶரண்யாபிமதமுமாய்ஸகலஶிஷ்டாக்ரகண்ய பரிக்ரஹமுமாயிருக்கையாலே ப்ரவ்ருத்யம்ஶ பரித்யாகம் நிர்பாதகமாக ஸாதஸம்கதமாம். ஶாஸ்த்ரங்களில் கூடாதென்று நிஷேதிக்கிற பரஹிம்ஸா பரதாரபரிக்ரஹ அபேயபாந அபக்ஷ்யபக்ஷணாதிகளுருவருத்து பரித்யஜித்து ஶாஸ்த்ரங்களங்கிகரித்த ஸ்வரூபாநுகுண ஸாதுகர்மங்களும் ஸாத்விகாஹாரங்களும் பரிக்ரஹித்து ஶாஸ்த்ரவஶ்யராய் இரிகையாலே பகவதாஜ்ஞாபரிபாலநமும் ஸித்தித்து[𑌆𑌜𑍍𑌞𑌾𑌚𑍍𑌛𑍇𑌦𑍀 𑌮𑌮 𑌦𑍍𑌰𑍋𑌹𑍀] (ஆஜ்ஞாச்சேதீமமத்ரோஹீ) என்கிற பகவத்ரோஹமும் தப்பி நிஷ்கண்டகமார்க்கமாய் விடும். [𑌨 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑍈𑌵 𑌚 𑌕𑍍𑌰𑌮𑌃] (நஶாஸ்த்ரம்நைவசக்ரமஃ) என்கிற ஶாஸ்த்ராதிக்ரமணத்துக்கு இரண்டுமொவ்வாதோவென்று விதிபரித்யாகத்தோபாதி நிஷேதபரிக்ரஹம்பண்ணுவோமென்னில் அதுக்கு விசேஷஶாஸ்த்ர பரிக்ரஹமும் ஶரண்யாபிமதமும் ஶிஷ்டஸம்மதமு முண்டாகையாலே விரோதமில்லை. இதுக்கு ஸாமாந்ய ஶாஸ்த்ரமானாலும் விசேஷஶாஸ்த்ரமானாலும் தர்ஶநக்ரந்தங்களானாலும் அங்கீகரிக்கலாமென்று ஒன்றும் சொல்லாமையாலும் மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார் (புரிவதுவும்புகைபூவே) என்றும் (எண்ணிலும்வரும்) என்றும் (தொழுதுமாமலர்நீர் சுடர்தூபங்கொண்டெழுது மென்னுமிதுமிகை) என்றும் (சிற்றவேண்டா சிந்திப்பே யமையும்) என்றும் ஆஶ்ரயணம் ஸாலஸமென்று ஸ்வாராதத்தைச் சொல்லுகிற தொழிய ப்ரபந்நனுக்கு ப்ராதிகூல்யநிவ்ருத்தி சொல்லுகிறவிடங்களில் ஸகலோபநிஷத் ஸாரஸங்க்ரஹமான ப்ரபந்தராஜத்தில் (வீடுமின்முற்றவும்) என்றும் (நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்து) என்றும் (பற்றிலையாயவன் முற்றிலடங்கே) என்றும் (உள்ளிக்கெடுத்திறை யுள்ளிலொடுங்கு) என்றும் (கழிமின்தொண்டர்கள் கழித்துதொழுமின்) என்றும் (சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது- அத்தியெழுவதுபயன்) என்றும் (பயனில்லை செய்துபயனில்லை) என்றும் (திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது) என்றும் (கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாது) என்றும் (நலமெனநினைமின் நரகழுந்தாது) என்றும் (வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது) என்றும் (சூதென்றுகளவும் சூதும்செய்யாது) என்றும் (மன்னுமணிசரைப் பாடிப்படைக்கும் பெரும்பொருள் யென்னுவது)என்றும்(ஒருநாயகமாயோட வுலகுடனாண்டவர்-இம்மையிலேபிச்சைதாம்கொள்வர்)என்றும் (ஆதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம் நாடுதிரே) என்றும் (கொண்டபெண்டிர் மக்களுற்றார்-துணையும் சார்வுமாகுவார்போல் - இரணங்கொண்டதெப்பராவர் - மதுரபோகந்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர் - இல்லைகண்டீரின்பமந்தோ -சிற்றவேண்

டா சிந்திப்பேயமையும் கண்டீர்களந்தோ - வாழ்தல்கண்டீர்குணமிதந் தோ) என்றும் (கண்ணனில்லாலில்லை கண்டீர்சரண்) என்றும் (சார்ந் தவிருவல்வினைகளும்சரித்து மாயப்பற்றறுத்து - தீர்ந்துதன்பால்மநம் வைக்கத் திருத்திவீடுதிருத்துவான்) என்றும் ஆதிமத்யாவஸாநங்களி லே ஒருக்கால் சொன்னுப்போலே ஒன்பதிங்காலுஞ் சொல்லிக்கொண் டு தஹிக்கிற க்ருஹத்திலே யகப்பட்டுக் கிடந்தாரைக் கூப்பிடுமாப்போ லே பராநர்த்தாவஹிஷ்ணுக்களாய் தேவதாந்தர ஸாதநாந்தர விஷ யாந்தரங்களும் அஹங்கார மமகார காமக்ரோதாதிகளும் தாரபுத்ரா தி பந்துஸங்கமமும் பரதந பரதார பரிக்ரஹாத் யக்ருத்யகரணமும் மற்று மைஶ்வர்யாதிகளும் முதலான விரோதிகளென்று பேர்பெற்ற வையெல்லாம் ஸவாஸநமாகவிட்டு அவனே பரதெய்வமென்றும் உபா யோபேயங்களென்றும் பற்றினால் திலதைலவத் துர்விவேசமாய்ப் பொ ருந்திக்கிடக்கிற புண்யபாபங்களை நஶிக்கப்பண்ணி அவித்யாஸம்பந் தத்தை யறுத்து அநந்யப்ரயோஜநனாய் தன்பக்கலிலே நெஞ்சைவைக்கு ம்படிபண்ணி இனி இவன் நமக்கு கைபுகுந்தானென்று ஸந்தோஷித் து தன்வீட்டை யலங்கரிக்கப்பண்ணுமென்று ஜகத்வித்தமாகக் கூப்பி டாநிற்கச்செய்தேயும் இவையெல்லாம் மர்க்கடஹஸ்தமாலிகாப்ராயமா க்கி இவற்றுக்கும்விபரீதார்த்தங்களைச் சொல்லிக்கொண்டு அக்ருத்ய கரணமுபாயாதிகாரிக் கவஶ்யாபேக்ஷிதமென்றும் ஸகவதஹிமதமென் றும் இது தர்மஸூக்ஷ்மமென்றும் ஶாஸ்த்ரம்சொல்லாதொழிந்தாலு ம் நிரஹங்காரஹேதுவாகையாலே இது ஶாஸ்த்ரதாத்பர்யமென்றும் இது ஆர்யஸித்தாந்தமென்றும் ப்ரவ்ருத்தித்துக்கொண்டு ஆரேனும் நீரிப்ப டிசெய்யக்கூடுமோவென்னில் நானிப்படிசெய்வேனோவென்று தாடநப ருஷோக்தி தர்ஜந ஹர்த்ஸநங்களாலே தண்டித்துக்கொண்டு ப்ரமாண பரதந்த்ரனானவன் திரியவொண்ணுதிறே. இப்படி நிஷித்தாநுஷ்டாநப ரராய்த் திரியாநின்றாலும் ஒருவன் சொன்னவளவில் நிரஹங்காரராய் [పాపానాం ప్రథమోஸ్మ్యహం] (பாபாநாம் ப்ரதமோஸ்ம்யஹம்) என்று நா ன் பொய்சொல்லுவேனென்று பெருமாள் திருவுள்ளம்பற்றுதபடி இது மெய்யென்று ஸாக்ஷி சொன்னாய் நீயன்றோ எனக்கு மஹோபகாரக னென்று அவனிடத்திலே பொறையுமுகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நட ந்ததாகில் காலாந்தரே ஜந்மாந்தரேயானாலும் பஶ்சாத்தாபம்பிறந்து ஸ கவதநுக்ரஹபாத்ரராவர். இத்தர்ஶந தூஷகர்க்கு அதுவுமில்லையே. ஆ கையாலே அதீந்த்ரியார்த்த விஷயத்தில் நம்பூர்வர்களெல்லாரும் ஐதி ஹ்யஸம்ஸவார்த்தா பத்ய ஸாவோபமா நாநுமாந ப்ரத்யக்ஷங்களை விட் டு ஸகல வேதாந்தஸங்க்ரஹமான மூலமந்த்ரப்ரமாணைக நிஷ்டராய்

அதில் சொன்னபடியே ஸ்வஸ்வாதந்த்ர்யான்யஶேஷத்வ தேஹாத்மாபிமாநங்களை பரித்யஜித்து ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயஸ்வ ப்ரவ்ருத்தி நிவ்ருத்தராய் ஸ்வபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்து அவித்யாகர்ம வாஸநாருசி ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமான அக்ருத்யகரணநிஷித்தாநுஷ்டாநநிவ்ருத்தியை ப்ரார்த்தித்து அவனை யுபாயமாக அத்யவஸித்து பாகவதஶேஷத்வத்திலே யூன்றி நாரபதவாச்யரான சேதநாசேதநங்களோடே ஶத்ருமித்ரவிபாகமற ராகத்வேஷஶூந்யராய் தாரபுத்ராதி பந்து ஸங்கத்தைவிட்டு அவனையே யெல்லாமாகப்பற்றி ஸ்வகர்த்ருத்வ போக்த்ருத்வ நிவ்ருத்திபூர்வக ஸர்வவிதகைங்கர்யைகநிரதராய் வர்த்திக்கிறுப்போலே வர்த்திக்குமதொழிய வதிகாரியாமவன் அப்ராமாண்யக்ருத்யங்களிலே ப்ரவர்த்திக்கமாட்டானிறே. நீரிப்படி ஶதஸம்தூஷித்தீர் "அஜ்ஞாநத்துக்கிலக்கு ஆசார்யதோஷம்"என்றும் பகவத்பாகவத விஷயங்களிலே தோஷமுண்டானாலும் குணம்போலே உபாதேயமாயிருக்குமென்றும் இம்மூன்றுவிஷயங்களில் தோஷமுண்டானாலும் கர்ஹிக்கப்போகாது அதுவு முபாதேயமாயேயிருக்கும் [ప్రాదుర్భావైస్సురనరసమో దేవదేవ స్తదీయాః జాత్యావృత్త్యాత్వపి చగుణత స్తాదృశో నాస్తి గర్హా] (ப்ராதுர்பாவை ஸ்ஸுரநரஸமோ தேவதேவஸ்ததீயா - ஜாத்யாவ்ருத்யாத்வபிசகுணத ஸ்தாத்ருஶோநாஸ்த்ர கர்ஹா) என்று ப்ரமாணஞ்சொல்லாநின்றதிறே என்னில்? ஸம்ஸாரிகள் தோஷமும் நாரத்வப்ரயுக்த பந்தத்தாலே தன் தோஷமென்று நினைக்கச்சொன்ன நான் தூஷிக்கவருகிறேனோ மூடனை நீ அபதேப்ரவ்ருத்தி ஸத்ஸம்ப்ரதாயமென்று சிலர் சொன்னாரென்று ப்ரமிக்க ப்ரமநிவ்ருத்யர்த்தமாக (என்பர்மூர்க்கராவார்) என்கிறபடியே சொன்னேனித்தனையொழிய இது நமக்குப் பணியோ, இதுகிடக்கிடும் "அஜ்ஞாநதத்துக்கிலக்கு ஆசார்யதோஷம்"என்றது ஸதாசார்யனானவன் தன்னையாஶ்ரயித்த சேதநன் பூர்வவாஸனையாலே பத்தஸம்ஸாரியாய் துர்விஷய ப்ரவணனாய் அரங்கமாளியைப்போலே திரியாநின்றால் அவனுடையவிநாஶம் தன்னதாக பாவித்து ஹிதபுத்தியாலே நிக்ரஹித்து பருஷோக்தியாலே ஶிக்ஷித்தால் இவன் துர்புத்தியாகையாலே ஆசார்யனானவன் எல்லாம் பொறுத்து [యస్యాపరాధాన్ స్వపదప్రపన్నాన్ స్వకీయకారుణ్య గుణేన పాతి] (யஸ்ஸாபராதாந் ஸ்வபதப்ரபந்நாந் - ஸ்வகீயகாருண்ய குணேநபாதி) என்று காருண்யத்தாலே ரக்ஷிக்கவேண்டாவோ இப்படி அஹங்காரத்தாலே ஆசார்யத்வபூர்த்தி யுண்டோவென்று நினைக்குமென்று அதுவாராமைக்காக அந்த நிக்ரஹரூபதோஷமும் ஹிதபுத்யாச் செய்கிறதாகையாலே உபாதேயமென்று சொன்னதித்தனையொ

ழிய தோஷமெல்லா முபாதேயமென்றால் அக்ருத்யகரணாதி அஸஹ்ய
யாபசாராந்தமாக ப்ரக்ருதிகுணத்தாலே வருகிற நிஷித்தாநுஷ்டாநங்க
ளெல்லாம் உபாதேயமாம். அப்போது ஆசார்யஸ்வரூபஞ் சொல்லுகிற
ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளும் ஸ்ரீவசநபூஷணாதிவிஶேஷஶாஸ்த்ரங்களும்
வ்யர்த்தங்களாய்ப்போமாகையாலே அப்படி சொல்லப்போகாது ஶ்ருத்
யாதிகள் சொல்லும்படியன்றிக்கே தானாசார்யனென்றும் ஶிஷ்யனை த
னக்கு ஶிஷ்யனென்றும் உபதேஶபலம் த்ருஷ்டபலாதிகளென்றும் நினை
த்தா லவனுக்கு ஆசார்யத்வபூர்த்தியில்லை. அவனோட்டை ஸம்பந்தம்
விநாஶஹேதுவென்று சொல்லுகிற ஸ்ரீவசநபூஷணத்திலிறே "அஜ்ஞா
நத்துக் கிலக்குஆசார்யதோஷமென்றது" ஆனாலதுக் கர்த்தமேதென்னி
ல்நம்மோபாதி ஆசார்யனும் ஆஹாரநித்ராபரவஶனாய் மலமூத்ரோத்ஸ
ர்ஜநாதிகளைப் பண்ணிக்கொண்டு திரிகிற சேதநனன்றோ வென்று திரு
மேனி தர்மங்களை யிட்டு மாநுஷபாவம் பார்க்கவொண்ணாது, ஜ்ஞாநா
நுஷ்டாந ஸம்பத்தியைப்பார்த்து[గురురేవ పరం బ్రహ్మ](குருரேவபரம்ப்ரஹ்
ம)என்கிற ப்ரதிபத்தி பிறக்கவேணுமென்று சொன்னதித்தனை. இனி ப
கவத் பாகவத தோஷங்களை உபாதேயமென்றது பகவத் விஷயத்தில்
தோஷமுண்டென்று கொள்ளவொண்ணாதிறே. தனக்கு ஶேஷபூத
ராய்பரதந்த்ரரான ஆத்மாக்களைக் குடல் துடக்குப்பாராதே நிர்த்தயனா
ய் அபராதாநுகுண தண்டம் பண்ணுவிக்கிறானென்று இவன் துர்புத்தி
யாலே தோற்றுகிற தோஷமிறே அங்குள்ளது. இச்சேதநன் அசித்துப்
போலே ஜ்ஞாநஶூந்யவஸ்துவன்றே இஷ்டமானபடிவிநியோகங்கொ
ள்ளுகைக்கு [ఆదావీశ్వరదత్తయైవ పురుషః స్వాతన్త్ర్యశక్త్యా స్వయం తత్తజ్జ్ఞానచి
కీర్షాప్రయత్నానుత్పాదయన్వర్తతే] (ஆதாவீஶ்வரதத்தயைவபுருஷ ஸ்வா
தந்த்ர்யஶக்த்யாஸ்வயம் - தத்தத்ஜ்ஞாநசிகீர்ஷணப்ரயத்நாந் யுத்பாத
யந்வர்த்ததே) என்கிறபடியே கரணகளேபர ப்ரதாநாதிகளைப் பண்ணி
சித்ஶக்தி ப்ரவ்ருத்தி நிவ்ருத்திஶக்திகளைக் கொடுத்து ஸஹயோபாதே
யவிஹாசம்பண்ணுகைக்கு வேதஶாஸ்த்ர ப்ரதாநாதிகளைப் பண்ணி ரா
மக்ருஷ்ணாத்யவதாரமுகேந அறியவேண்டுமர்த்தமெல்லா மறிவித்தாலு
ம்ஸம்ஸாரபத்தராய் ஶப்தாதிவிஷய ப்ரவணராய் திரிந்தால் மண்தின்
ற ப்ரஜைக்கு நாக்கில் குறியிட்டஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹி
தபுத்யாச் செய்கிறதாகையாலே அதுதோஷமன்று. இனி க்ருஷ்ணாவதா
ரத்தில் ஜாரசோரத்வாதி ப்ரதீதியொன்றுண்டு அதுவு மாஶ்ரிதாநுக்ர
ஹ கார்யமாகையாலும் அவன் ஸர்வஶரீரியாகையாலே தன்ஶரீரத்தை
த்தானே பரிஷ்வங்கிக்கிறாப்போலே யுள்ளதொன்றாகையாலும் [గోప్యః
కామాత్](கோப்ய: காமாத்) என்று காமத்தாலே அவர்கள் முக்தராம்படி

பண்ண நினைத்துச் செய்கிற செயலாகையாலும் [𑌯𑌦𑌿 𑌮𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍] (யதிமேப்ரஹ்ம சர்யம்ஸ்யாத்) என்னும் தான் அஸ்கலித ப்ரஹ்மசாரியாய் அந்தஹோகத்தோடொட்டற்று நிற்கிறவனாகையாலும் அவனுடைய வ்யாபாரங்களெல்லாம் ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாகையாலே தோஷமுமன்று. கர்ஹையுமில்லை. உபாதேயமாயிருக்கும். இப்படி பகவத் விஷயத்தில் தோஷமில்லாதாப்போலே ததீயரும் ஸ்வரூபாநுரூப ஜ்ஞாநாநுஷ்டாந பரிபூர்ணராய் ஸ்வரூபவிருத்த ப்ராதிகூல்யமொன்றுமின்றிக்கே யிருக்கச்செய்தேயும் ஸ்வதோஷத்தாலே தோற்றினால் கர்ஹிக்கப்போகாது. அவற்றிலும் தேஹபாரவஸ்யத்தாலும் கர்மகந்தியாலும் செய்யுமவையன்றிக்கே ஸ்வார்த்தநிரபேக்ஷமாக ஆஸ்ரிதரக்ஷணார்த்தமான வ்யாபாரங்களேயானால் உபாதேயங்களுமாயிருக்கும். இவ்வர்த்தம் [𑌨𑌾𑌤𑍍𑌰 𑌗𑌰𑍍𑌹𑌾] (நாத்ரகர்ஹா) என்று சொல்லி [𑌕𑌿𑌨𑍍𑌤𑍁 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑌸𑍇𑌵𑌨𑌤𑍍𑌰𑌾𑌣𑌤𑌃] (கிந்துஸ்ரீமத்பாகவதஸேவநத்ராணத:) என்று ஆஸ்ரிதார்த்தமானவையாகையாலே கர்ஹையில்லையென்று சொல்லிற்றிறே. இப்படி கொள்ளாதே நாமரூபங்களுடைய பாகவதராய் எப்படியிருந்தாலும் உபாதேயமென்றால் (ஓர்த்துநெஞ்சே முன்னவரும்பின்னவரும் மூர்க்கரெனவிட்டு நடுச்சொன்னவரை நாளுந்தொடர்) என்றருளிச்செய்யப் பணியில்லையிறே. (ம்லேச்சனும் பக்தனானால் பாவநதீர்த்த ப்ரஸாதனுமென்று) பரமவிலக்ஷண ஸம்பந்தஸ்வீகாரத்தை ஜகத்விதிதமாக பகவதாஜ்ஞாஸித்தமென்று நிர்ஹபராய் க்ரந்தஸ்தங்களாம்படி விதிக்கிற பூர்வாசார்யர்கள் ஒருவரானாலும் ஒருரஹஸ்யத்திலானாலும் பகவத்ப்ரபந்நன் அஹங்காரநிவ்ருத்திக்காகவும் ஸர்வதர்மபரித்யாகத்துக்காகவும் களஞ்சபக்ஷணாதிகள் பண்ணவேணுமென்று சொல்லிற்றில்லையே. சொல்லாதொழிந்தாலும் தூஷணமில்லையாகில் க்ரந்தங்களிலுக்தமான அஹங்காரநிவ்ருத்திக்கும் விலக்ஷணநுவர்த்தநத்துக்கும் உபயுக்தங்களொன்று செய்யலாமிறேயென்னில்? ப்ரபந்நராஜ வசநபூஷணாதி திவ்யஸாஸ்த்ரங்களில் ஸதஸ: தூஷித்த அக்ருத்யகரணாதிகள் பண்ணுகை பகவந்மாயாப்ரபாவமென்று நினைக்கவேணுமித்தனையொழிய ஸிஷ்டாசாரமென்ன வொண்ணாதிறே. க்ரந்தஸ்தமாகச்சொன்னால் அநதிகாரிகள்கர்ஹித்து நஸித்துப்போவாரென்று ஐதிஹ்யஸித்தமாய் ஸம்ப்ரதாயகமாக ப்ரவர்த்தித்துப்போருகிறதென்னில் வசநாநுஷ்டாந விரோதமில்லையானால் ஆகிலுமாமென்று கொள்ளவமையும். லௌகிகவைதிக பரமவைதிக விரோதங்க ளனேகமுண்டாகையாலே அப்படிசொல்லவொண்ணாது. ஸாஸ்த்ரத்திலொரு பரமார்த்தஞ்சொன்னால் அதுக்கபேக்ஷிதமான அங்கோபாங்கங்கள் ஐதிஹ்யங்களாலும் ஸம்ப்ரதாயத்தா

லும் ஸங்க்ரஹிக்கவேணுமென்கிற இத்தனையொழிய ஸகலஶாஸ்த்ர தூஷிதங்களுமாய் ஶிஷ்டகர்ஹிதங்களுமான ததர்த்தங்க ளுபதேசபரம்பரா ப்ராப்தங்களென்று கர்ஹிக்கப்போகாதிறே. இப்படி ஶாஸ்த்ரங்கொண் டறியவேணுமோ ரஜஸ்தமோத்ரேகங்களுமாய் அதவா ஆஹாரதோஷம் ஜ்ஞாநவிரோதியென்கிறபடியே அர்த்தபஞ்சக ஜ்ஞாநவிரோதிகளுமாய் ஜாதிதுஷ்டங்களுமாய் ப்ராக்ருதஸ்ப்ருஷ்ட துஷ்டங்களுமாய் அத்யந்த ஹேயங்களுமாய் லோகஸாதாரணருமுள்பட வருவருத்து பரித்யஜிக்கிற நிந்த்யங்களான நிஷித்தத்ரவ்யங்களாகாராந்தரத்தாலே கூடுமென்று ஆஸுரப்ரக்ருதிகளுக்கு தோற்றுமதொழிய விஶேஷஶாஸ்த்ர வஶ்யரான ஶிஷ்டஜநங்களுக்கு தோற்றுகிறதே. அதிகாரிகள் கர்ஹிப்பரென்கிற ஸம்மின்றிக்கே விலக்ஷணஜந்ம வைஷ்ணவாநுவர்த்தந தீர்த்தப்ரஸாத ஸ்வீகாரங்கள் விதிக்கிற அதிகாரிகளிதுவுஞ் சொன்னால் அதிகாரிபேதத்தாலே கூடுமென்று தோற்றுமிறே. அவைதிகர்தைப்பார்த்தா லதிலும் விருத்தமன்றோவிது. இன்னமு மிதுக்கு பாஹ்யமதஸ்தர்க்கு ஆகமங்களாலு முண்டு. ஸகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி விதித்ததே ஹேதுவாக்கி தன்னையே சொல்லிற்றாகாதோவென்ன? அப்போது ஶாஸ்த்ரபரிக்ரஹமானாலும் ஸகவதுக்தியானாலும் ப்ராக்தநஶிஷ்டாசாரங்களானாலும் ஒன்றுமின்றிக்கேயிருக்க பௌத்தரைப்போலே ஆஹாவொக்கிளாலே விபரீதார்த்தங்களை சொல்லிக்கொண்டு ஸகவந்மாயாகல்பிதங்களான சில ப்ரத்யக்ஷங்களைக் காட்டி ஶ்ரமிப்பித்து திரியாநிற்கிற சில வப்ராமாணிகருடைய உக்த்யநுஷ்டாநங்க ளுஜ்ஜீவநேச்சையுடையவர்களுக்கு ப்ரமாணமாகக் கொள்ளப்போகாது. அதுவென் அவர்கள்தான் ஸ்வதந்த்ரமாக ஓரநுஷ்டாநம் கல்பிக்கிறதில்லையே [ధర్మజ్ఞసమయః ప్రమాణం](தர்மஜ்ஞஸமயஃப்ரமாணம்) [యద్యదాచరతి శ్రేష్ఠస్తత్తదేవేతరో జనః] (யத்யதாசரதிஶ்ரேஷ்ட ஸ்தத்ததேவேதரோஜநஃ) என்கிறபடியே ஶிஷ்டாசாரமே ப்ரமாணமாக வங்கீகரித்து [ఆచార్యస్య ప్రసాదేన మమసర్వమభీప్సితం। ప్రాప్నుయామీతి విశ్వాసో యస్యాస్తి స సుఖీ భవేత్] (ஆசார்யஸ்யப்ரஸாதேந மமஸர்வமபீப்ஸிதம் - ப்ராப்நுயாமீதிவிஶ்வாஸோ யஸ்யாஸ்திஸஸுகீபவேத்) என்று ஸ்வாசார்ய விஶ்வாஸத்தாலே ததாஜ்ஞாநுவர்த்தநம்பண்ணினு லநர்த்தகரமாமோவென்னில்? ஸ்வாசார்யாஜ்ஞையென்று அங்கீகரிக்கலாவது அவர் தல்லக்ஷணலக்ஷிதராய் ஶாஸ்த்ரபாணியாய் ப்ரபலப்ரமாணபரதந்த்ரராய்ஸ்ரீவசநபூஷணாதி திவ்யஶாஸ்த்ரோக்தரீத்யா ஶிக்ஷித்தாலிறே அப்படி சொல்லாதே (தன்னெஞ்சில் தோற்றினதேசொல்லி இது சுத்தவுபதேசவரவாற்றது) என்று சில்வி

பரீதார்த்தங்களை கல்பித்து (அணங்குக்கருமாநங்கேதன்றங்கோ ராடுங்க ள்ளும்பராய்) என்கிறபடியே இந்த நிஷித்தாநுஷ்டாநமே ஸித்தோபாயமென்று ஶிஷ்டஜநங்களறியாதபடி ஒருவருக்கொருவர் ஸாங்கேத்ய ஹாஷணங்களாலே சொல்லிக்கொண்டு ஶதாந்தந்யாயத்தாலே கூபத்திலேவிழுகிற அப்ரமாணிகரைப்பற்றி ததாஜ்ஞாபரிபாலநம்பண்ணிலுல் ஓட்டையோடத்தோடொழுகலோடமாய் இருவரும் முழுகிப்போவாராகையாலே அவர்களுடைய ஸஹவாஸம் தூரதஃ பரிவர்ஜநீயமிறே. ஆசார்யனாவான் அஹங்காரார்த்தகாமோபஹதனன்றிக்கே லோகபரிக்ரஹமுடையவனாய் [సాక్షాన్నారాయణో దేవః కృత్వామర్త్యమయీంతనుం । మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా] (ஸாக்ஷாந்நாராயணோதேவ: க்ருத்வாமர்த்யமயீம்தநும் - மக்நாநுத்தரதேலோகாந் காருண்யாச்சாஸ்த்ரபாணிநா) என்கிறபடியே ஶாஸ்த்ரபாணியாய் ரக்ஷிக்குமவனிறே. அந்த ஶாஸ்த்ரமும் குணாநுகுணமாக பஹுவிதமாயிருக்கையாலே[అసారమల్పసారంచ సారం సారతరం త్యజేత్ । భజేత్సారతమం శాస్త్రం రత్నాకరఇవామృతం] (அஸாரமல்பஸாரஞ்ச ஸாரம்ஸாரதரம்த்யஜேத் - ஹஜேத்ஸாரதமம்ஶாஸ்த்ரம் ரத்நாகரஇவாம்ருதம்) என்கிறபடியே அஸாரமான பாஹ்யஶாஸ்த்ரமும் அல்பஸாரமான பூர்வஹாகமும் ஸாரமான உத்தரஹாகமுமாக பரக்கச்சொல்லுகிறவையெல்லாம் விட்டு ஸாரதரமான விஷ்ணுகாயத்ரியில் ஸாரதமமாக முதலிலே சொல்லப்பட்ட ஸம்ஸாரநிவர்த்தகமான பெரியதிருமந்த்ரத்தையுபதேஶித்து ததநுரூபாநுஷ்டாநங்களை விதித்து ஆழ்வார்களுமாசார்யர்களும் க்ரந்தஸ்தங்களாக வருளிச்செய்தும் தாமாசரித்தும் போருகிறபடிகளொன்றும் தப்பாதபடி தானுமாசரித்து இவனையுமாசரிப்பிக்குமவனாகிலிறே இருவர்க்கு முஜ்ஜீவநம் ஸித்திப்பது. "ஶீசஸ்பர்ஶமுடைய குருமந்த்ரதேவதைகள் பரித்யாஜ்யங்களென்று ஆச்சாம்பிள்ளையருளிச்செய்தாரிறே." அர்த்தஸ்திதி யிதுவாயிருக்க ஸம்ஸாரநிவர்த்தக மூலமந்த்ரோபதேஷ்டாவே யாசார்யனென்று வாங்மாத்ரஞ் சொல்லிக்கொண்டு [తృష్ణాతోయే మదనపవనోద్ధూతమోహోర్మిమాలే । దారావర్తే తనయసహజగ్రాహసఙ్ఘాకులేచ] (த்ருஷ்ணாதோயே மதநபவநோத்தூதமோஹோர்மிமாலே தாராவர்த்தே தநயஸஹஜக்ராஹஸங்காகுலேச) என்கிறபடியே ஸம்ஸாரஸாகரத்திலே அழுந்தி தானும் கரையேறமாட்டாதே தன்னைப்பற்றினவனையும் பத்தஸம்ஸாரியாம்படிபண்ணி [పాపేకృతేయదిభవన్తి భయానుతాపలజ్జాఃపునః] (பாபேக்ருதேயதிஹவந்தி ஹயாநுதாபலஜ்ஜா:புந:)என்கிறபடியே துர்வாஸனையாலே பாபம்பண்ணிலும் ஹயாநுதாபலஜ்ஜைகளுண்டாய் க்ருபாபாத்ரராகாதபடி நமக்கா

சார்யஸம்பந்தமுண்டென்று ஸயங்கெடுத்து (காதுசெய்வான் கூதை செய்து கடைமுறைவாழ்க்கையும்போம் என்கிறபடியே அதுவுமில்லாத படிபண்ணி வ்யபிசாரிசொல்லுகிற பதிவ்ரதாதர்மங்கள்போலே ஹா ஸ்யாஸ்பதங்களுமாய் அப்ரயோஜநங்களுமாயிருக்குமிறே. அவரில் பசையில்லையாகிலும் [விஶ்வாஸ: ஃபலதாயக:] (விஶ்வாஸ: பலதாயக:) என்று இவனுடைய த்ருடாத்யவஸாயமாத்ரத்தால் பலப்ரதமாகாதோ வென்னே? இந்த விஶ்வாஸம் வேதபாஹ்யனுக்குமுண்டிறே [குருபதிஷ்ட மார்கேண ஜ்ஞாநகர்மஸமுச்சயாத் । மோக்ஷோ பந்தவிரக்தஸ்ய ஜாயதேऽவிகல்பத:] (குருபதிஷ்டமார்கேண ஜ்ஞாநகர்மஸமுச்சயாத் - மோக்ஷோபந்தவிரக்தஸ்ய ஜாயதேஹ்யவிகல்பத:) என்று வேதபாஹ்யனுக்கும் குருவிஶ்வாஸமும் ததுபதிஷ்டமார்க்கப்ரவர்த்தகத்வமும் அத்தாலே மோக்ஷம் தப்பாதென்கிற த்ருடாத்யவஸாயமும் மிகவுமுண்டிறே. ப்ரமாணபரதந்த்ரனானவனுக்கு ஆசார்யன் ஶாஸ்த்ரஜ்ஞனாகவேணும், ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்நனாகவேணும், ஸத்ஸம்ப்ரதாய ஸித்தனாகவேணும் என்று இவையெல்லாம் அபேக்ஷிதங்களாயிருக்கும். பாஹ்யமதஸ்தருக்கு ப்ரமாணாபேக்ஷைகளொன்றுமில்லாமையாலே ஆசார்யநிஷ்டை மிகவும் பரிபூர்ணமாயிருக்கும். அதுண்டென்னுமத்தாலே பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷப்ராப்தி சொல்லவொண்ணாதிறே. குருமந்த்ரதேவதாஹௌஷதவிஷயங்களில் திவ்யஶக்தியுண்டாகிலும் விஶ்வாஸமில்லாதபோது கார்யகரமாகாதென்று விஶ்வாஸாவஶ்யாபேக்ஷிதத்வம் சொல்லிற்றித்தனையொழிய ஶக்தியையிலே ரஜதபுத்திபண்ணி விஶ்வஸித்தாலது மெய்யாகமாட்டாதிறே. ஆசார்யன் ஜ்ஞாநாதிகனாய் அவனுக்கத்யந்தப்ரியதமனாயிருந்தால் ஶிஷ்யன்பக்கல் சிலஸ்காலித்யங்களுண்டானாலும் ஆசார்யன்பக்கல் ப்ரேமமுண்டாய்ப் போருகிறவிடத்தில் ஈஶ்வரன் ஶிக்ஷிக்கநினைத்தாலும் இவ்வாசார்யன் தன்பின்னை வைத்துக்கொண்டு ரக்ஷிக்கமாட்டானோ வென்னில் [ஸ்காலித்யே ஶாஸிதாரம்] (ஸ்காலித்யேஶாஸிதாரம்) என்கிறபடியே அவை வாராதபடி ஶிக்ஷித்து ஹோகயோக்யனும்படிபண்ணி ரக்ஷிக்குமதே ஆசார்யக்ருத்ய மித்தனைபோக்கி தன்னை ஆஶ்ரயித்து தன்பக்கல் ப்ரேமமுண்டாய்ப் போந்தால் அவிநீதனானாலும் ரக்ஷிக்கவல்லனென்று நினைக்கலாகாது [குருகர்ணதாரம்] (குருகர்ணதாரம்) என்று ஆசார்யனாகிற கர்ணதாரன் விஷ்ணுபோதத்திலேயொதுங்கி ஸ்வதந்த்ரனாயிருந்தால் உத்தாரகனாகத்தட்டில்லை. இவனிருந்தையும் விட்டவிடத்தில் நிர்ஹரனாய் நிர்வ்யாபாரனாயிருக்கமாட்டாதே அகாதமான ஸம்ஸாரஸாகரத்திலே முழுகித் தரைப்படில் ஸர்வசக்தியானஸர்வேஶ்வரனுக்கே அஶக்யமென்று (கூவிக்கூவிக் கொடுவினைதூ

ற்றுத்துள்நின்று பாவியேன்பலகாலம் வழிதிகைத்தலமருகின்றேன்-மே
வியன்று நிரைகாத்தவனுலகமெல்லாம் தாவியவம்மானை- யெங்கினித்த
லைப்பெய்வனே)என்று ஸர்வஶக்தியான நீ க்ருஷ்ண வாமநாதி ரூபங்க
ளாலே திவ்யவிக்ரஹஸேவையை ஸாக்ஷாத்காரம்பண்ணி கீதாதி ஶாஸ்த்ர
முகத்தாலே ஹிதோபதேஶம்பண்ணி கைநீட்டி யெடுக்கநினைத்தாலு
மெடுக்கவொண்ணாதபடி துஷ்கர்மங்களாகிற தூற்றுக்களிலே நின்று
பலகாலம் கூப்பிட்டுக்கொண்டு பாபிஷ்டனான நான் மார்க்கம்தப்பி அ
லமருகின்றேன், அந்த ஸாக்ஷாத்காரந்துக்கே தப்பின நான் இனி யுன்னை
கிட்டுவதென்றுண்டோ வென்று ஆழ்வாரருளிச்செய்கையாலே ஆசார்ய
னாலே ரக்ஷிக்க ஶக்யமன்றிறே. அந்த ஸர்வேஶ்வரன் ராமக்ருஷ்ணாதி
ரூபேண திருவவதரித்து பஹுஶ: ஹிதோபதேஶம்பண்ணுமிடத்தி
லும் அதிகாரிகளைக் காணமாட்டாதே விஜாதீயனான வெனக்கு இது கி
டையாதென்று ஸஜாதீயரான விவரையிட்டு ஹேசயோக்யராம்படிபண்
ணி நன்றாகத் திருத்திக்கொள்ளவேணுமென்றிறே ஆழ்வார் முதலானா
ரை திருவவதரிப்பித்தது. அவருமப்படி செயல் நன்றாகத்திருத்திப் ப
ணிகொள்வாரானாரிறே. அவரைப்போலே திருத்தவல்லரானாலாய்த்து
இவன் முக்தனாவது. தத்வஸ்திதி இதுவானபின்பு அவிநீதரை ரக்ஷி
க்க ஶக்தரென்று சொல்லவொண்ணாது. எம்பெருமானார் அரங்கமாளி
முதலானார்க்காக படாதனபட்டு ஶிக்ஷிக்குமதுண்டிறே. ஆகையா
லே பாலமூகஜடாந்தாதிகளும் திர்யக்ஸ்தாவரங்களுங்கூட முக்தரா
ம்படிபண்ணின வெம்பெருமானார் முதலானார்க்கும் ப்ராதிகூல்ய லே
ஶமுடைய சேதநரை ரக்ஷிக்குமதில் அருமையுண்டாகையாலே மற்று
முள்ள வாசார்யர்கள் ரக்ஷிப்பது ஐயன்பாழியிலானை போருக்குறுப்பா
மன்றாய்த்து, அதுபோலே இதுவும் நாமமாத்ரோபஜீவ்யம். ஸர்வேஶ்
வரனுவான் ஸர்வஸ்வதந்த்ரனாய் ஸர்வஶக்தியுக்தனாய் லீலாரஸலோல
னுமாய் பரமதயாளுவானவ னொருவனாகையாலே ஜகதுத்பவஸ்திதிப்ர
ணாஶ ஸம்ஸாரவிமோசநாதிகளுக்கு தானேகடவனாய் ஸர்வநிர்வாஹ
கனா யிருந்துவைத்தும் (புரமொருமூன்றெரித் தமரர்க்குமறிவிந்து அ
ரனயனென வுலகழித்தமைத்துளனே) என்கிறபடியே ரக்ஷணம் மற்
றொருவனுக்கு அஶக்யமாகையாலே அத்தை தானேயிட்டுக்கொண்டு
ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்காக (நன்மைப்புநல்பண்ணி நான்முகனைப்
பண்ணி) என்கிறபடியே ஒருகுழமணனைப்பண்ணினாப்போலே சதுர்
முகனை ஸ்ருஷ்டித்து [సృష్టిం తతః కరిష్యామి త్వామావిశ్య ప్రజాపతే] (ஸ்ருஷ்டிம்
ததஃகரிஷ்யாமி த்வாமாவிஶ்யப்ரஜாபதே)என்று அவனுக்கு மந்தராத்மா
வாய் ஸ்ருஷ்டித்து தேவர்களுக் கறிவுகொடுத்து அவனே பண்ணின

னென்று ப்ரஸித்தமாக்குமாப்போலேயும் முன்பவனாலே ருத்ரனை ஸ்ரு
ஷ்டித்து ததந்தர்யாமியாய் ஸம்ஹரித்துக்கொண்டு த்ரிபுரதஹந மவ
னேபண்ணினானென்று ப்ரஸித்தமாக்குமாப்போலேயும் துக்காகுலரா
னசேதநரைக்கண்டு ஸம்ஸாரவிமோசநம் பண்ணுகைக்காக ஆசார்ய
னென்கிற பேரையுடைய தாருப்ரதிமைகளை நிர்மித்து காக்கைப்பொன்
னையிட்டு அலங்கரிக்குமாப்போலே ஜ்ஞாநாநுஷ்டாநங்களாகிற வைஷ்
ணவாலங்காரங்களை யுண்டாக்கி ததந்தர்யாமியாய் நின்று தந்மூலமாக
சேதநரை வஶீகரித்துக்கொண்டு ரக்ஷிக்குமவனென்கையாலே தனித்
து வேறேயொரு ஆசார்யனென்றொரு தத்வமில்லையிறே. மேலெழப்பார்
த்தால் ஸ்ருஷ்டிஸம்ஹாரங்கள் இவ்வதிகாரிகள் பக்கல்தோற்றுகிறதி
த்தனையொழிய இதுக்கடி யாராய்ந்தால் [విష్ణురాత్మా భగవతో భవస్యామితతే
జసః] (விஷ்ணுராத்மாஹகவதோ ஹவஸ்யாமிததேஜஸঃ) என்கிறபடி
யே அவனேயாயிருக்குமிறே. இவ்வர்த்தம் [ఈశ్వరస్సర్వభూతానాం హృ
ద్దేశేऽర్జునతిష్ఠతి। భ్రామయన్ సర్వభూతాని యన్త్రారూఢాని మాయయా] (ஈஶ்வரஸ்
ஸர்வஹூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுநதிஷ்டதி - ஹ்ராமயந்ஸர்வஹூ
தாநி யந்த்ராரூடாநிமாயயா) என்று லீலாவிஷயமான எல்லாரும் அசி
த்வத்பரதந்த்ரரென்றும் தானே ஸர்வஸ்வதந்த்ரனென்று மருளிச்செய்
தானிறே. இதுபோலே [విష్ణోశ్శేషీ తదీయ శ్శుభగుణనిలయో విగ్రహశ్శ్రీశఠా
రిః శ్రీమాన్ రామానుజార్యః పదకమలయుగం భాతిరమ్యం తదీయం] (விஷ்ணுஶ்
ஶேஷீததீயஶ்ஶுஹகுணநிலயோ விக்ரஹஶ் ஶ்ரீஶடாரிঃ - ஶ்ரீமாந் ராமா
நுஜார்யঃ பதகமலயுகம் ஹாதிரம்யம்ததீயம்) என்று க்ருபாவானாய் ஸோ
கார்த்தமாக விநியோகங்கொள்ளுமிடத்திலும் தானந்தராத்மாவாய்க்
கொண்டு ஶேஷியாய் ஆதேயத்வ விதேயத்வ ஶேஷத்வ லக்ஷணங்களு
டைய ஆழ்வாரை திருமேனியாகவும் க்ஷமாகுணத்துக் காஶ்ரயமான
எம்பெருமானாரைத் திருவடிகளாகவுங்கொண்டு ஆசார்யாவதாரம் பரி
க்ரஹித்தானுகையாலே அவனே ஸர்வநிர்வாஹகன் அவனிஷ்டமே எ
ல்லார்க்கு மிஷ்டம் மற்றுள்ளாரெல்லாரும் அவனுக்கு நித்யபரதந்த்ரர்
தனித்தொருவனுக்கு மொருப்ரவ்ருத்தியுமில்லை. (எத்தேவர்வாலாட்டு
மெவ்வாறுசெய்கையும் அப்பொதொழியுமழைப்பு) என்று அவன் நி
னையாதபோது த்ருணமாத்ரமும் சலிப்பிக்க ஶக்தனொருவனுமில்லை.
இவ்வாசார்யன் ஹிதோபதேஶம்பண்ணி திருத்தவருகிறது அமைத்த
சோறிலே மாமியார்கைவைத்தாப்போலே அசிதவிஶேஷிதராய்க் கிடந்
தவன்று கரணகளேபரங்களைக் கொடுத்து ப்ரவ்ருத்திநிவ்ருத்தி ஶக்தி
களை யுண்டாக்கி வ்யபிசரியாதபடி வேதஶாஸ்த்ராதிகளை யுபகரித்து
ராமக்ருஷ்ணாதிரூபேண வந்தவதரித்து ஹிதோபதேஶம்பண்ணியும்

துர்வாஸனையாலே ஒருவரும் ஶாஸ்த்ரமர்யாதையிலே வாராதொழிந்தால்க்ருபை கரைபுரண்டு தானே யத்நம்பண்ணி ரக்ஷிக்கவேணுமென்று நினைத்து இவ்விபூதியில் லீலார்த்தமாக தான் பண்ணுவித்த கட்டளையை யதிக்ரமித்து ரக்ஷிக்க தனக்கே சக்யமல்லாமையாலே உச்சிவீடுவிடுகிற ஒருஸமயத்தை நிரீக்ஷித்து விசேஷ கடாக்ஷம் பண்ணி அத்வேஷாபிமுக்ய ஸத்ஸங்கங்களும் ஸாத்விகோதயங்களு முண்டாக்கி மோக்ஷாபேக்ஷையையும்பிறப்பித்து ஆசார்யனென்றொருவனை யலங்கரித்து ததாஶ்ரயணோபயுக்த ஶமதமாதிகளை இவனுக்குண்டாக்கி அவனோடே சேரவேணுமென்கிற ருசியை பிறப்பித்து சேர்த்தபின்பிறே அவனிவனுக்கு ஹிதோபதேஶம் பண்ணுவது ஹிதோபதேஶம் பண்ணினபின்பு [ఉపదేశో నివర్తకః] (உபதேஶோ நிவர்த்தக:)என்னும்படி துர்வாஸனை மேலிடாமல் [తంహదేవమాత్మబుద్ధిప్రసాదం] (தம்ஹதேவம் ஆத்மபுத்திப்ரஸாதம்) என்றும [ఏషఏవసాధుకర్మకారయతి] (ஏஷஏவஸாதுகர்மகாரயதி) [సర్వస్యచాహంహృదిసన్నివిష్టో మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనంచ](ஸர்வஸ்யசாஹம் ஹ்ருதிஸந்நிவிஷ்டோ மத்தஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச) என்றும் சொல்லுகிறபடியே ஹ்ருதிஸ்தனாய் நின்று ஆத்மகுணங்களை பிறப்பித்து அபரமாத்மநி வைராக்யத்தை யுண்டாக்கி ஸ்வகீயவிஷயங்களில் காதல் கடல்புரைய விளைவித்து பரமார்த்தனும்படிபண்ணி ப்ராப்தி ப்ரதிபந்தக ஸகலபாபநிவ்ருத்தியு மாம்படி யநுக்ரஹித்து ப்ராரப்த விமோசநந்துடங்கி நித்யகைங்கர்ய ப்ராப்தியளவுமுண்டான பலபரம்பரைகளை அடையும்படி பண்ணுவ தவனுடைய அநிதரஸாதாரண க்ருத்யங்களிறே. பரமார்த்த மிதுவாயிருந்தாலும் அநாதியாக ஸம்ஸரித்துப் போருகிற விவனுடைய ஸமுத்தாரணத்துக்கு ப்ரதமம் உபகாரந்தோன்றுவது [ఆత్మనోహ్యతినీచస్య యోగిధ్యేయపదార్హతాం । కృపయైవోపకర్తారమాచార్యంసంస్మరేత్సదా] (ஆத்மனோஹ்யதிநீசஸ்ய. யோகித்யேயபதார்ஹதாம் - க்ருபயைவோபகர்த்தார மாசார்யம்ஸம்ஸ்மரேத்ஸதா) என்றுஅநாதியாய் ஈஶ்வரனு முளனாய் பிராட்டியுமுளளாய் ஆழ்வார்களும் மற்று மாசார்யர்களும் எல்லாரும் ஆத்மரக்ஷணார்த்தமாக பிறந்திருக்கச்செய்தேயும் இந்த ஜந்மத்தில் தனக்கிந்தலாபம் ஸ்வாசார்யஸம்பந்தத்வாரா உண்டாக்கினனாகையாலே ஸ்வாசார்யன் பக்கலிலே யாயிருக்கும். இவ்வுபகாரத்துக்கு முடிந்தநிலம் பார்த்தவாறே ஸர்வகாரணபூதனான வனாகையாலே அவனிடத்திலே பர்யவஸித்தன்றி நில்லாது. ஆகையாலே "உபகாரஸ்ம்ருதிக்கு முதலடி ஆசார்யன்பக்கல் க்ருதஜ்ஞதை முடிந்தநிலம் ஈஶ்வரன்பக்கல் க்ருதஜ்ஞதை" யென்றருளிச்செய்தது இந்த வாசார்யாவதாரமு மவனதேயாகையாலே [ఆచార్య

ஜீவ்யஸ] (ஆசார்யதேவோபவ) என்றும் [गुरुरेव परंब्रह्म] (குருரே வபரம்ப்ரஹ்ம) என்றும் [साक्षान्नारायणो देवः] (ஸாக்ஷாந்நாராய ணோதேவ:) என்றும் [ऐहिकामुष्मिकं सर्वं] (ஐஹிகாமுஷ்மிகம்ஸர்வம்) என்றும் [माता पिता युवतयः] (மாதாபிதாயுவதய:) என்றும் பூர்வாதி காரிவிஷயத்தில் அநுஸந்திக்கக் குறையில்லை. ஆகையாலேயிறே விபரீ தாநுஷ்டானங்கள் புகுராதபடி [रामानुजार्य गुरुरित्यपदं भाति] (ராமா நுஜார்யே குருரிதிசபதம்ஹாதி) என்று அவ்விடத்தில் அகிதர ஸா தாரணோபாயாத்மகாசார்யத்வம் எம்பெருமானாரிடத்திலே பூர்வர்க ளெல்லாரும் அநுஸந்தித்தும் உபதேசித்தும் போகிறது. அதுக்கு க் கருத்து அன்றைக்கன்று மாயாப்ரவ்ருத்தமாய் தந்தாமாசார்யர்கள் சொல்லுகிற விபரீதங்களைக்கேட்டு அஜ்ஞரானவர் ப்ரவ்ருத்தித்துப் போகாதபடி எம்பெருமானாருடைய உக்த்யநுஷ்டானங்களே உத்தேஶ் யமென்றெல்லாரு மறிந்து உஜ்ஜீவிக்கும்படி நிர்ணயித்துப் போந்தார் கள். ஆகையாலே தாமொன்றையாசரித்து இது எம்பெருமானா ரருளி ச்செய்த வநுஷ்டானமென்று சொல்லுகிற வார்த்தைகளை கேட்டு மரு ளாதே குருபரம்பரா ப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே அருளிச்செய் தஅர்த்தவிஶேஷங்களுக்கு பூர்வகுரு வசநாநுஷ்டான விரோதம் வாரா தபடி நன்றாக வோர்த்து அர்த்தநிஶ்சயம் பண்ணுகிற பரமவைதிகரா ன வதிகாரிகளுடைய உக்த்யநுஷ்டானங்களே உத்தேஶ்யமென்று கொ ள்ளவேணும். மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார் (உள்ன்சுடர் மிகுசுருதியுள்) என்று தொடங்கி பலவிடங்களிலும் வேதப்ராமாண்ய ம ங்கீகரித்து[सर्वं खल्विदं ब्रह्म। नेह नानास्ति किंचन। एको ह वै नारायण आसीत् न ब्रह्मा नेशानः] (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம।நேஹநாநாஸ்திகிஞ்சந - ஏகோ ஹவைநாராயணஆஸீத்-நப்ரஹ்மாநேஶாந:) என்று தொடங்கிச்சொல்லு கிற வேதாந்தவாக்யங்களை த்ராவிடவாக்வ்ருத்தியாலே விஶதீகரித்து முமுக்ஷுக்களுக் கறியவேண்டும் அர்த்தவிஶேஷங்களெல்லாம் ஸ்வப் ரபந்தமுகத்தாலே வெளியிட்ட பரமவைதிகாக்ரேஸரரானகையாலேயி றே ப்ரபந்நஜநகூடஸ்தராய் ஸகலஶிஷ்டாக்ரகண்ய ஶிரஸாவாஹ்யரா யிருக்கிறது. ஆகையாலே எப்படிப்பட்ட ஜ்ஞாநாதிகரானாலும் வேத வேதாந்த விருத்தமாக அபதேப்ரவ்ருத்தரானால் லீலாவிஷயமாகை யொழிய க்ருபாவிஷயமாகப் பெறார்கள். ஜ்ஞாநாதிக்யமாத்ரமன்றிக் கே பரமவிதராகருமாய் அத்யந்தஸக்தியுக்தருமா யிருந்தாவைத்தும் ஸாஹஸக்ருத்யங்களி லர்வயித்தாராகில் ஏதாகநினைத்திருக்கவேணு மென்னில் ஸர்வேஶ்வரன் தான் லீலாஸஹகாரியாக இட்டுக்கொண்ட பார்வையாக நினைத்து அவாருகே தான் போகாதே கடக்கவர்த்திக்க

வேணும். ஸர்வேஸ்வரன் நிரங்குஸஸ்வதந்த்ரனாய் பரமக்ருபாவானுமா
ய்ஸோகலீலார்த்தவிபூதி த்வயேஸ்வரனுகையாலே லீலாஸோகங்களி
ரண்டும் அவனுக்கிஷ்டரஸங்களேயாய் ஒருகாலத்திலே லீலாலோலனா
ய் சிலரை யதுக்கு ஸஹகாரிகளாகக்கொண்டு தந்மூலமாக சிலரை லீ
லையிலே விநியோகங்கொள்ளுவதும் ஒருகாலத்திலே தயாபரவஸனாய்சி
லரைத் தானே முக்தராகப்பண்ணி ஸோகத்திலே கூட்டிக்கொள்ளுவ
தும் சிலவாத்மாக்களை விலக்ஷணஸம்பந்தமுண்டாக்கி தந்மூலமாகஸ
முத்தரிப்பிக்குமதும்அவனுக்கு ஸ்வபாவமாகையாலே [श्रुतिर्नष्टा स्मृ
तिर्लुप्ता प्रायेण पतिता द्विजाः । अङ्गानि च विशीर्णानि हा वृत्तो वर्तते कलिः] (ஸ்
ருதிர்நஷ்டாஸ்ம்ருதிர்லுப்தா ப்ராயேணபதிதாத்விஜா:-அங்காநிசவிஸீ
ர்ணாநி ஹாவ்ருத்தோவர்த்ததேகலி:) என்று கலிப்ரவ்ருத்தமாய் வேத
வைதிக மர்யாதைகளைத் தப்பி எல்லாரும் நாஸ்திகராய் நஸிக்கப்புக்க
வாறே தயாபரவஸனாய் பராங்குஸ பரகால யதிவராதிகளைப் பார்வை
யாக வைத்து தந்மூலமாக திருத்தப்பார்க்க (மேனுக்கிங்கியாதொன்று
மில்லை - கலியுங்கெடுங்கண்டுகொள்மின்) என்னும்படி கலிதோஷமெல்
லாம் நீங்கி (பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம்பெருக கரியமுகி
ல்வணனெம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் இசைபாடி யெங்குமிடங்கொண்டனவே)என்கிறபடியே இனி லீலைக்கு வி
ஷய மொருவருமில்லையென்னும் படி கண்டகண்டவிடமெல்லாம் வைஷ்
ணவரேயாய் மஹதபிமாநத்தாலே அநதிகாரிகளும் முக்தராம்படிகண்
டு (எல்லீரும்வீடுபெற்றாலுலகில்லை) என்கிறபடியே முக்தியோக்யமா
ன வதிகாரி ஸம்பத்தியொன்றுமின்றிக்கே ப்ராதிகூல்யநிவ்ருத்திமாத்
ரத்தாலே மஹதபிமாநாந்தர்பூதராய் பாலமூகஜடாந்த பங்குபதிரா
திகளும் முக்தரானால் ஸாஸ்த்ரமர்யாதை தப்பிப்போமென்றும் லீலா
விபூதியுங் குறைப்படுமென்றும் நினைத்து நிஷித்தப்ரவ்ருத்திகளு
ண்டானாலல்லது லீலையிலே விநியோகங்கொள்ளுகைக்கு அவகாஸமி
ல்லாமையாலே பூர்வத்தில் அஸுரராக்ஷஸர் [अग्निहोत्राश्च वेदा
श्च] (அக்நிஹோத்ராஸ்ச வேதாஸ்ச) என்கிறபடியே வேதவைதிக
ஸ்ரத்தைகளுமுண்டாய் தேவத்வேஷிகளுமாய் ஸாதுபாதகருமா யி
ருக்கையாலே வைதிகஸ்ரத்தையைப்போக்கி விபரீத நிஷ்டராக்கி அ
ல்லது நஸிப்பிக்கவொண்ணாதென்று (திண்கழற்காலசுரர்க்குத் தீங்கி
ழைக்குந் திருமாலே) என்கிறபடியே பிராட்டியுந் தானும்ஒரிலக்குப்பா
ர்த்து (கள்ளவேடத்தைக்கொண்டு போய்புறம்புக்கவாறும் கலந்து
அசுரரை யுள்ளம்பேதம் செய்திட்டு யிருண்ட வுபாயங்களும்) என்
கிறபடியே தானே புத்தவேஷதாரியாய்ப் போய் அவர்களோடுள்கல
ந்து மதிமயங்கப்பண்ணி வைதிகஸ்ரத்தையைமாற்றி விபரீதாநுஷ்

டாநபரராக்கியும் [బృహస్పతేశ్శ్రుతిస్మృతిషు సర్వేషామతిశయితజ్ఞానానాంనిద ర్శనత్వేన సఙ్కీర్తనాత్] (ப்ருஹஸ்பதேஶ்ருதிஸ்ம்ருதிஷு ஸர்வேஷா மதிஶயிதஜ்ஞாநாநாம் நிதர்ஶநத்வேநஸங்கீர்த்தநாத்) என்று அதிஶயித ஜ்ஞாநிகளுக்கெல்லாம் நிதர்ஶநபூதரான ப்ருஹஸ்பதியை தந்மத ஸ்தாபகனாக்கி தந்மூலமாகசிலரை விபரீத ப்ரவர்த்தகராக்கியும் இன்னமும் (பலசமய மதிகொடுத்தாய்) என்றும் (சமயங்கட்கெல்லாம்பொருவாகி நின்றான்) என்றும் சொல்லுகிறபடியே தன் திருவுருவில்மநம் வைக்கமாட்டாதபடி மற்று மனேக பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டிகளையுங் கல்பித்து தத்தத்குணபுருஷர்களாலே தத்தந் மதங்களை ப்ரவர்த்திக்கப்பண்ணி தந்மூலமாக வாஸுரப்ரக்ருதிகளை பத்தஸம்ஸாரிகளாக்கி இவற்றை ஆஸிவ்ருத்தமாக்கிக்கொண்டாப்போலே இத்தர்ஶநத்திலும் க்யாதிலாபார்ச்சந தத்பரராய் நாமரூபங்களை தரித்து ஸ்வரூபாநுரூபவ்ருத்தி விஶேஷங்களொன்று மின்றிக்கே ஸ்வரூபவிரோதிகளை யொன்றும் த்யஜிக்கமாட்டாதே தேஹாத்மாபிமாநிகளாய். தாஹங்காரக்ரஸ்தராய் க்ருஷ்ணசிஹ்நங்களை தரித்து பின்னையவனை டௌதிரிட்டபௌண்ட்ரகவாஸுதேவனைப்போலேயும் அம்ருதார்த்திகளாய் தேவதாகோஷ்டியிலுட் புக்கராஹுகேதுக்களைப்போலேயும் ஸ்வகார்யபரராய் வாநராகாரங்களை தரித்த சுகஸாரணரைப்போலேயும் திரிகிறபரஹிம்ஸாபரதார பரிக்ரஹ பரத்ரவ்யாபஹாரதத்பரரான ஆஸுரப்ரக்ருதிகள் வந்துகலந்தால்அவர்களைமோஹிப்பித்து தனக்கசலாக்குகைக்காக ஸஹகாரிகளாம்படி சிலரைப்பார்வையிட்டு அவராலே நிதர்ஶநங்களைக் காட்டி தந்மூலமாக நிஷித்தாநுஷ்டாநபரராக்கி லீலைவிலேவிநியோகங்கொள்ளுகிறானென்று ப்ரமாண பரதந்த்ரரானவர் (தெளிவுற்று வீவின்றிநின்றவர்க்கு) என்கிறபடியே த்ருடசித்தராய்நின்று ஸர்வேச்வரனானாலும் எம்பெருமானேயானாலும் வாய்திறந்து சொன்னாலும் ஸ்வப்நாதிகளிலே நியமித்தாலும் இந்த்ரவேஷதாரியாய் அம்பரீஷனை ஸ்ரமிப்பிக்க வந்தாப்போலே பண்ணுகிற எண்ணிலாப்பெருமாயனானவனுடைய மாயாகார்யமென்று நினைத்து அப்ராமாணிகக்ருத்யங்களை ஶிஷ்டாசாரமென்றாசரிக்கப்போகாது, அவரை தூஷிக்கவுங் கூடாது. தான்கடக்கநின்று (அவன் மாயங்கண்டூரதறிந்தறிந்தோடுமினே) என்று ஆழ்வாரருளிச்செய்தாப்போலே ஓடிப்போகவேணும். அவன் லீலார்த்தமாகப்பண்ணும் க்ருஷியை தூஷித்தானாகி லதுவும் லீலாலோலனானவனுக்கு இஷ்டமல்லாமையாலே. இது கூடாதேயென்று சொன்னானவனுக்கொரு த்ருஷ்டவிஷயத்தி லநர்த்தம்தந்திடும்மாமியார்கச்சையென்று அவ்விடத்தில் நில்லாதே ப்ரமாணபாரதந்த்ரராய்விஶ்வஸிக்கத்தக்க வதிகாரிகளோடே இவ்வர்த்தஞ் சொல்லிக்கொண்டு

கடக்கப்போகவேணும். இவ்வதிமாத்ர ப்ரவ்ருத்திக்கு ஐதிஹ்யம் எம்பெருமானார் தர்மம் நிர்வஹித்துக்கொண்டுபோருகிற காலத்திலே யாதவப்ரகாச ரிவருடைய வைபவமெல்லாம் கண்டிருந்தும் மாத்ருவசனத்தாலும் பகவதாஜ்ஞையாலு மவரை யாஶ்ரயித்து ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்திலே ப்ரவ்ருத்திக்கக்கண்டு தத்புத்ர ஶிஷ்யர்கள் ஸஹிக்கமாட்டாதே இத்தர்மநத்திலே அபதேப்ரவ்ருத்தி யுண்டாம்படி தூஷிக்கவேணுமென்று நினைத்து நம்பூர்வாசார்யர்கள் [த்ரிதண்டவிதாஹ்யேஷா யஸ்மிம்ல்லேசேபிவர்த்ததே, ஸவிப்ரேந்த்ரோமுநிஶ்ரீமாந்] (ஸத்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிம்லேச்சேபிவர்த்ததே - ஸவிப்ரேந்த்ரோமுநிஶ்ரீமாந்) என்றருளிச்செய்த பகவதாஜ்ஞையாலே விலக்ஷணஸம்பந்த ஸ்வீகாரத்தை அங்கீகரிக்க அதுவே ஹேதுவாக்கி ஸர்வவர்ணஸாங்கர்யமுண்டாக்கி சரமஶ்லோகத்தில் ஸர்வதர்மத்யாகத்தை விதித்ததே ஹேதுவாக்கி [இதம்குரு-இதம்மாகார்ஷீ:] (இதம்குரு-இதம்மாகார்ஷீ:) என்கிற விரண்டும் த்யஜிக்கவேணுமென்று நிஷித்தாநுஷ்டாநத்தையும் ப்ரவேஶிப்பித்து இது சரமதர்மமென்று சில க்ரந்தங்களை கல்பித்து தத்காலவர்த்திகளான சில வாஸரப்ரக்ருதிகளை மோஹிப்பிக்க அர்த்தகாமபரவசருக்கு ஸஹகாரமாகையாலே தாவாநலம்போலே வ்யாபித்து வாராநிற்க அக்காலத்திலே எம்பெருமானார் சிலரைப் பிடித்து ஶிக்ஷித்து க்ரந்தங்களைவாங்கி முறித்து தக்தமாக்கிப் புகட்டாலும் கலிதோஷத்தாலே மீளவும் அன்றைக்கன்று அபிவ்ருத்தமாய் ஶிஷ்டர்கர்ஹிப்பரென்று வெளியிடாதே ஸ்வகோஷ்டிக்கநுகூலமானுர்க்கே இது ஶிஷ்டாசாரமென்று சொல்லிக்கொண்டு இத்தர்மநத்துக் கர்த்தகராய் திரியாநின்றுகொண்டு பிள்ளைலோகாசார்யர் காலத்திலும் நீர்பண்ணின விபரீதப்ரஶ்நங்களை சிலர் சங்கிக்க அதின்மேலேஶ்ரீவசநபூஷண திவ்யஶாஸ்த்ரம் பகவதாஜ்ஞையாலே பிறந்ததென்று சிலர் ஜ்ஞாநாதிக ரருளிச்செய்வர். பூர்வர்கள் ஸ்வப்ரபந்தங்களிலே ப்ராயஶ: அதிகாரஸ்வரூபம் ஶிக்ஷித்தால் ஆள்பற்றுதென்று ஶரண்யப்ரபாவமே த்ருடதமமாகச் சொல்லிக்கொண்டு தத்குணவிஶ்வாஸ பாஹுள்யமுண்டாக்கி அதிகாரிஸ்வரூபம் காதாசித்கமாக ஸூசிப்பித்துக்கொண்டு போருகையாலே யதாவஸ்திதவேஷம் நன்றாகத் தெளியமாட்டாதே ஶரண்யப்ரபாவத்தையே பார்த்து தன் ஸ்வரூபங்கெட்டுப்போம்படி ஸம்ஸாரபத்தராய் புத்ரதாராஸக்தசித்தராய் துர்விஷயாத்யந்தப்ரவணராய் நாஸ்திகருபங்களொழிய ஸம்ஸாரிகளுக்கும் தங்களுக்கும் வாசியின்றிக்கே இவ்விபரீதாநுஷ்டாநங்களெல்லாம் சொல்லிக்கொண்டு திரிகையாலே அத்தை நிராகரிக்கைக்கு ஹேதுவாகக்கொண்டு வசநபூஷண திவ்யஶாஸ்த்ரமருளிச்செய்கையாலே (உய்யநினைவுடையீ ருங்களுக்குச்சொல்

லுகின்றேன்) என்று உஜ்ஜீவநத்திலே இச்சையுடையவர்களுக்கு ஸ்ரீவச நபூஷணோக்தி நிஷ்டையுண்டாகவேணுமென்றும் அஸ்மதாசார்யோக்த ம், பகவதாஸ்ரிதரானாலும் ஸஹவாஸாதிகளுக்கு அயோக்யரென்று சொல்லாநின்றீர் [மத்பக்தஜநவாத்ஸல்யம்] (மத்பக்தஜநவாத்ஸல்யம்)என்று என்னை யாஸ்ரயித்தவர்பக்கல் தோஷபோக்யரா யிருக்கவேணுமென்று ஸர்வேஸ்வரன் தானே சொன்னனிறேயென்னில்? அதுக்கர்த்தம் அக்ரு த்யகரண க்ருத்யாகரண பகவதபசார பாகவதாபசாராதி நிஷித்தாநு ஷ்டாநம் போக்யமாகக்கொள்ளவேணுமென்று சொல்லுகிறதன்று. அவ்விடத்தில் [நாத்ரகர்ஹா] (நாத்ரகர்ஹா) என்றும் [நிந்தாம்குர்வந்தியேநரா:] (நிந்தாம்குர்வந்தியேநரா:) என்றும் சொல்லுகிறபடியே கர்ஹிக்கக்கூடாதென்றும் நிந்தித்தானாகில் நிக்ரஹபாத்ரனுமென்றும் சொல்லுகிற தே விவக்ஷிதம், போக்யமாகக் கொள்ளுகிறதென்னில் தன்பாலே தாரகமாக வளருகிற வத்சைக் காலாலே மிதித்தாலும் தலையாலே தள்ளினாலும் பல்லாலே கடித்தாலும் தேநுவானது ஸஹித்துக்கொண்டு ஸபகருபமாகக் கொள்ளுமாப்போலே பாகவதர் தன்னை பரிபவித்தாலும் பருஷோக்திகளைச்சொன்னாலும் அத்தைப் பொறுத்திருக்கவேணுமென்றும் இதுவன்றிக்கே விஷயப்ரவணன் படுக்கைத்தலையிலே அபிமதவிஷயமான ஸ்த்ரீயானவள் போகஸமயத்திலே காலாலேதள்ளினாலும் உகிராலே கிள்ளினாலும் வாயாலேகவர்ந்தாலும் பருஷோக்திகளைச்சொன்னாலும் மற்றுமநேகமான திரஸ்காரக்ருத்யங்களைச்செய்தாலும் ஒருவர்க்கும் வெளியிடாதே அவையெல்லாம் பரமபோக்யமாகக் கொள்ளுமாப்போலே பாகவதரானால் தான் அபராதம்பண்ணுதொழிந்தாலும் தன்மேலே பிறர் சிதகுரைக்கிலும் அத்தைக்கேட்டு தன்னை தாடநபருஷோக்தி தர்ஜநபர்த்ஸநாதிகளாலே ஸிக்ஷித்தாலும் அது தனக்கு ஹிதம்செய்தாராக போக்யமாகக்கொண்டு ஸர்வஜ்ஞரான பகவத் பாகவத விஷயங்களிலே வெளியிடாதே அவரை யொழிய தன் செல்லாமையைச் சொல்லிக்கொண்டு [மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்] (மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்) என்றும் (சங்கிப்பன் வினையேன்) என்றும் அவர் திருவுள்ளம் கலுஷமானத்துக்கு நொந்து அதுக்கு ஹேது தன்னுடைய புராதநகர்மமென்று தன்னையே நிந்தித்துக்கொண்டு அவரெப்படி ஸப்ரஸந்நராவரோ அப்படி யநுவர்த்தித்துக்கொண்டு ஓலக்கத்தில் தம்மை நிர்நிபந்தநமாக பரிபவித்த கந்தாடைத்தோழப்பரை யநுவர்த்தித்த நம்பிள்ளையைப்போலே ப்ரவர்த்திக்கவேணுமென்கை. நிர்நிபந்தநமாக நம்மை பரிபவிக்கிற தென்னென்று ப்ரதிக்ரியைப் பண்ணப்போகாத மாத்ரமின்றிக்கே அது போக்யமாகக் கொள்ளுமது ஸ்வபக்தலக்ஷணமென்று சொன்னதித்தனையொழிய அக்ருத்யகரண

ஶீலராய் தாஸீக்ருஹங்களிலே ஸஞ்சரித்துக்கொண்டு அர்த்தகாம
நிமித்தமாகப் பரிஹஸம்பண்ணித் திரியாநின்றாலும் நீரேதியில்லாகநி
ன்றாலும் அதுவே நம்மை யாட்கொள்ளுமென்று சுஷ்கப்ரியவசநங்க
ளைச் சொல்லிக்கொண்டு ஒருகாசும் கொடுக்கமாட்டாதே வருந்தி ஒரு
கைங்கர்யத்துக்கு மாளாகாதே ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதிக்கவேணுமெ
ன்று அத்தை ஸ்வீகரித்து அவருக்குகப்பாக வர்த்திக்கவேணுமென்று
அருளிச்செய்தானென்னப் போகாதிறே. ஸ்ரீகீதாஶாஸ்த்ராதிகள் முன்
பொதுவாக நின்றாலும் பின்புஅநந்யபாக்காய்த் திரிந்தால்ஆதரணீயனெ
ன்று சொல்லுகையாலே இதுவே பொருளாகக்கொள்ளவேணுமிறே. இ
து பொருளல்லவாகில் ஹகவதபிப்ராயஜ்ஞரான வாசார்யர்கள் நாத்திக
ரையும்ஆத்திகநாத்திகரையும்மூர்க்கரெனவிட்டு நம்சொன்ன வசநஹூ
ஷணாதி ஶாஸ்த்ரவஶ்யரான ஆஸ்திகரையே ஆதரணீயரென்று சொல்
லமாட்டாரிறே. ஆகையாலே நாமரூபதாரணமுடையவராகிலு மவரு
டைய வ்யாபாரம் நிந்திக்கப்போகாதேதன்பக்கல்அவர் குற்றம்செய்தா
ல் அதுஹோக்யமாகக் கொள்ளவேணுமென்று அதுவே ஹகவதபிப்ரா
யம். அவர்செய்கிற அக்ருத்யகரணாதிகள் ஹோக்யமாகக்கொண்டு அது
வேதனக்கு ரக்ஷகமாக வநுஸந்திக்கவேணுமென்றால பரர்வரயாதாத்ம்
யவித்தமரான நம்மாழ்வாராலே பலவிடங்களிலும்(கழிமின்தொண்டீர்
கள் கழித்துத்தொழுமின்)என்றும்(சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியா
து-எழுவதுபயனே) என்றும்(திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது)
என்றும் (கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே) என்றும் (வழக்கெனநி
னைமின் வல்வினைமூழ்காது) என்றும் (சூதென்றுகளவும் சூதும்செய்யா
தே) என்றும் அக்ருத்யகரணாதி ஶீலராய் நரகத்திலேயழுந்தாதே இவை
யெல்லாம் (வேர்முதல்மாய்த்து - பற்றிலையாயவன் முற்றிலடங்கு) என்
று வாய்வாயடித்துக்கொண்டு (இல்லைகண்டீ ரின்பமந்தோ)என்று ஸம்
ஸாரத்தில் ஸுகமில்லைகண்டீர் அய்யோ இவ்வர்த்தம் நானுபதேசிக்க
வேண்டிவதே யென்று பரிதபிக்கவேண்டாவே (செய்தாரேல்நன்றுசெய்
தார்)என்று இருந்து தாம்அத்தை ஹோக்யமாகக்கொள்ளலாமிறே. இப்
படி கூப்பிட்டது கேவலஸம்ஸாரிகளுக்கன்றோ வைஷ்ணவர்க்கென்று
கூப்பிட்டாரோவென்னில் ? கழிமின்தொண்டீர்என்று ஹகவத்விஷயத்
தைப்பெறவேணுமென்று சாபலமுடையார்க் கழிக்கப்பாருங்கோள் (க
ழித்துத்தொழுமின்) அவனைத் தொழாநிற்கச்செய்தே அதுவும் க்ரமத்தி
லேகழிகிறதென்றிராதே அவஶ்யம் கழித்தே தொழுங்கோள். கழிமினெ
ன்று வைத்து கழித்தென்று இதரவிஷயத்தில் விரக்தி தானே ப்ரயோஜ
நமாகப் போருமென்கை. இப்படி கழிதது தொழுதால் நடுவேநின்று
பகவத்ப்ராப்தியை விரோதிக்கிற ப்ரபலகர்மங்களைப போக்கியிறே அபு

கராவ்ருத்தி லக்ஷணமோக்ஷத்தைத் தருமென்று சொல்லுகிறது. ஆக வதருமாய் மோக்ஷாபேக்ஷையுடைய வதிகாரிகளுக்கோ கேவலஸம்ஸாரிகளுக்கோ நீயே விசாரித்து சொல்லிக்காட்டுமென்ன இதுகிடக்கிடும், (செய்தாரேல் நன்றுசெய்தார்) என்று அவன் சொன்னனேயென்னில்? பிராட்டி சிதகுரைக்கிலிறே அதுசெய்யாரென்கிறது சிதகுரைக்குமேல் என்றும் செய்தாரேல் என்றும் சொன்ன சப்தங்களிலே கடகையான பிராட்டி தோஷதர்ஶநம் பண்ணுவிக்கமாட்டாளென்னு மர்த்தமும் அவள் புருஷகாரமாக வாஶ்ரயித்த வதிகாரி அக்ருத்யங்களைச் செய்யாரென்னு மிடமும் தோன்றுதோ, இப்படி கூடாத வகடிதங்கள் கூடினாலும் அவனை விட்டுக்கொடானென்று ஶரண்யப்ரபாவம் சொன்னதித்தனை.(என்னடியாரது செய்யார்)என்று என்னடி யாராகில்அக்ருத்யம் செய்வரோவென்று அவர் ஸ்வரூபத்தைநிஷ்கர்ஷித்து செய்தாரேல் நன்றுசெய்தாரென்று பின்பு தன்ஸ்வரூபம் சொன்னனைகயாலே செய்யாமை யவர்களுக்கு ஸ்வரூபம், செய்தாலும் விடாமை தனக்கு ஸ்வரூபமென்றும் சொல்லுகிறமாத்ரமே விவக்ஷிதம்.நன்றுசெய்தாரென்றது பிறர்அவர்மேல் தோஷம் சொல்லாதபடி தம்பக்ஷபாதம் வெளிப்படுத்தினதித்தனை [शिक्षयाप्यनकयं क्रोडीकरोति प्रभुः] (சிக்ஷயாப்யநகயந் க்ரோடீகரோதிப்ரபு:) என்கிறபடியே தோஷமுண்டானல் ராஜபுத்ராபராதவத் தானே ஶிக்ஷிக்கவேணுமித்தனையொழிய பிறர் சொல்லக்கூடாதென்னு மதுக்காக அப்படி யருளிச்செய்தது. இது பொருளன்றிக்கே அவனுக்கப் பாமென்னில் மந்த்ரத்திலு மவந்தான் சொல்லுமிடங்களிலும் ஆழ்வார் முதலானர் அருளிச்செயல்களிலும் தேவதாந்தர ஸாதநாந்தர விஷயாந்தரங்கள் ஸவாஸநமாக விட்டே பற்றவேணுமென்றுநியமிக்க நிமித்தமில்லையிறே. இது வென் ஜீயா மற்றொன்றைச்சொல்லாதே ஆழ்வாரை ஆப்த்ததமராகவும் அவரருளிச்செய்த திருவாய்மொழியே ப்ரமாணமாகவும் அருளிச்செய்யாநின்றீர் இதுக்குக் கருத்தென்னென்னில்? [विष्णोर्विशेषाधिष्ठानमयः पिण्डाग्निवन्मतम्] (விஷ்ணோர் விஶேஷாதிஷ்டாநமய: பிண்டாக்நிவந்மதம்) என்று திவ்யாசித் விக்ரஹத்தைக்காட்டிலும் இவரை விஶேஷாதிஷ்டாநமாகக்கொண்டு தப்தாய: பிண்டவத்ஸ்வரூபம் மிகவும் நிறம்பெற்று அங்குப்போலே லீலாலோல க்ருபாபாரதந்த்ர்யங்கள் கலந்திருக்கையன்றிக்கே [कारुण्याच्छास्त्रपाणिना] (காருண்யாத்ஶாஸ்த்ரபாணிநா) என்கிறபடியே கேவல காருண்யத்தாலே ஶாஸ்த்ரபாணியாய் (பொய்கலவாதென் மெய் கலந்தான்) என்று தாமஸ ஜநமோஹநார்த்தமாகப் பொய்நூல்சொல்லுகிற அவதாரங்கள்போலன்றிக்கே பொய்கலவாதபடி அவரோடேகலந்து [मग्नानुद्धरते] (மக்நாநுத்தரதே) என்று ஸம்ஸாரஸாகர மக்ந

ஜந ஸமுத்தாணமே ப்ரயோஜனமாக சேதநருக்கு ஹிதாம்ஸத்தில் வேண்டு மர்த்தங்களெல்லாம் (இன்கவிபாடும் பரமகவிகளால் தன்கவி தான்தன்னைப் பாடுவியாதே-நன்குவந்தென்னுடனாக்கியென்னால் தன்னை வன்கவிபாடும்) என்கிறபடியே வ்யாஸபராசராதிகள் முதலாழ்வார் முதலானோரிருக்க அவர்களாலே பாடுவியாதே ஸகலோபநிஷத்ஸாரமான சாந்தோக்யஸாமத்தோடொத்த திருவாய்மொழியாகிற ப்ரபந்தராஜத்தாலே வெளியிடுகையாலும் இவ்வாழ்வாரும் மற்றுள்ளாரைப்போலே ப்ராக்ருதத்ரவ்ய தாரகபோஷக போக்யரா யிருக்கையின்றிக்கே உண்ணுஞ்சோறு பருகுநீர்முதலானவையெல்லாமவனேயாக பால்யாத் ப்ரப்ருதி ஸ்தந்யாத்யநபேக்ஷிதராய் தத்தேகாநுபவபரரா யிருக்கையாலே ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தநமாக வருகிற ப்ரமவிப்ரலம்ப ப்ரமாதாஶக்தி தோஷங்களில்லாதவராகையாலும் மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார்களெல்லாம் இவர்க்கு அவயவங்களாயிருக்கையாலும் இவருடையஉக்த்யநுஷ்டாநங்களே ப்ரமாணமாக வங்கீகரிக்கையாலும் சொல்லினேனென்ன இதுக்கு தாத்பர்யமாயிற்று இனி ஆசார்யஸ்வரூபம் [ஆசார்ய தேவோ பவ] (ஆசார்யதேவோபவ) என்றும் [ஸாக்ஷாந்நாராயணோ தேவ:] (ஸாக்ஷாந்நாராயணோதேவ:) என்றும் [ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸாக்ஷாத்] (ஆசார்யஸ்ஸஹரிஸ்ஸாக்ஷாத்) என்றும் [குருரேவ பரம் ப்ரஹ்ம](குருரேவபரம்ப்ரஹ்ம) என்றும் ஸாக்ஷாந்நாராயணனாகவும் சொல்லாநின்றது. நம்முதலிகளெல்லாரும் "ஈஶ்வரனைப்பற்றுகைக் கையைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி ஆசார்யனைப்பற்றுகை காலைப்பிடித்துக் கார்யங்கொள்ளுமோபாதி" யென்று ஏகவ்யக்தியாகவும்ஆசார்ய னிருவர்க்கு முபகாரகனென்று ஸிங்கவ்யக்தியாகவும் சொல்லாநின்றார்கள் இதிருக்கும்படியும் கூடி யருளிச்செய்யவேணுமென்ன, கேவல பகவத்ஸ்வரூபமென்னவொண்ணாது, கேவல பரிசுத்தாத்மஸ்வரூப மென்னவுங் கூடாது, நரங்கலந்த சிங்கமென்று நரத்வ ஸிம்ஹத்வங்க ளிரண்டுங் கூடின நரஸிம்ஹாவதாரம்போலே அத்யத்புதமா யிருப்பதொன்று. எங்ஙனேயென்னில் ? கேவலபகவத்ஸ்வரூபமென்றால் குருபரம்பரையெல்லாமொன்றேயாய் ஸ்வரூபைக்யதோஷம் வரும். ஆத்மஸ்வரூபமென்றால் அனேக ப்ரமாண விரோதம் வரும். ஆகையாலே[பலபத்ரஸ்த்வதீயஸ்து] (பலபத்ரஸ்த்ருதீயஸ்து) என்று பலபத்ரராமன் சேஷாவதாரமா யிருக்கச்செய்தேயும் நிக்ருஷ்ட பகவதம்ஶமும் கலந்துஇதுவுமொரு பகவதவதாரமாய் தஶாவதாராந்தர்பூதமானாப்போலே ஆதேயத்வ விதேயத்வ ஶேஷத்வ லக்ஷணங்களை யுடைய முக்யதநுபூதராய் பரமைகாந்திகளான விலக்ஷணாத்மாக்களை யதிஷ்டித்து தப்தாயஃபிண்டவத் பஹிஸ்புரணமாக அத்யுஜ்வலமாய் நின்றுள்ள விலக்ஷணாத்மவிஶிஷ்ட பகவத்ஸ்வரூபமென்று கொள்ள

வேணுமென்று ஜகந்யாசார்ய ரருளிச்செய்தாராகையாலே பரத்வாதிபஞ்சப்ரகாரங்களில் காட்டிலு மிது பகவத்விலக்ஷணவதாரமா யிருக்கும்" [విశేషణభేదాద్విశిష్టభేదః](விஶேஷணபேதாத்விஶிஷ்டபேதஃ)என்றுநிஷ்க்ருஷ்ட ஸகவத்ஸ்வரூபத்துக்கும் ஆசார்யஸ்வரூபத்துக்கும்விஶேஷண விஶேஷ்ய பேதமுண்டாகப்பெறுகையாலே விஶிஷ்டபேதமுண்டாய் விஶேஷணத்வாரா பேதமும் விஶேஷ்யத்தாலே அபேதமாக விரண்டும் சொல்லலாயிருக்கும். இந்த ஆசார்யத்வம் அஸாதாரணமாகஆழ்வாரிடத்திலிருக்குமதொன்றுகையாலே அவர் சரணஸ்தாநீயரான எம்பெருமானரே ஸர்வோத்தாரகாசார்ய ரென்னு மர்த்தம் ஸர்வகுர்வபிப்ராய ஸித்தமாயிருக்கும். இவ்வர்த்தம் இந்த வ்யக்தி நமக்கடியுமாய் நங்கார்யத்துக்குக் கடவதுமாயிருக்குமென்று ஆழ்வார் தாமே யருளிச்செய்தாராகையாலே அவரிடத்திலே தன்னுடைய வநந்யார்ஹ ஶேஷத்வாத்யாகாரங்களை யநுஸந்தித்துக்கொண்டு [జగదాచార్యరచితే శ్రీమద్వచనభూషణే। తత్త్వజ్ఞానంచతన్నిష్ఠాం దేహి నాథయతీంద్ర మే] (ஜகதாசார்யரசிதே ஶ்ரீமத்வசநபூஷணே-தத்வஜ்ஞாநஞ்சதந் நிஷ்டாம்தேஹிநாதயதீந்த்ரமே) என்று ப்ரார்த்தித்துக்கொண்டு ஆநுகூல்யவ்ருத்திகளுக்கு ஶக்தியில்லையாகில் (இடகிலேனென்றட்டகில்லேன் என்கிறவநுதாபத்தோடே ப்ராதிகூல்யங்களெல்லாம் ஸவாஸநமாக விட்டு எம்பெருமானர் திருவடிகளே ஶரணமென்றிருக்கிற வதிகாரிகளுமாய் பரமவிலக்ஷணருமான வீதராகரோடே கூடி வசநபூஷணாதி ரஹஸ்யார்த்தாநுபவத்தாலே காலக்ஷேபம் பண்ணிக்கொண்டு[ఇదన్తే నాతపస్కాయ](இதம்தேநாதபஸ்காய) என்கிறபடியே அதபஸ்கர் முதலான வநதிகாரிகளுக்குஇப்பரமார்த்தங்களை வெளியிடாதே அத்யந்த பக்தியுக்தர்க்கே சொல்லிக்கொண்டு [రామానుజం ప్రపన్నాయే రక్షాదీక్షాకృపానిధిం। కరంవక్షసినిక్షిప్య నిద్రాంకుర్వంతినిర్భయాః] (ராமாநுஜம் ப்ரபந்நாயே ரக்ஷாதீக்ஷாக்ருபாநிதிம் - கரம்வக்ஷஸிநிக்ஷிப்ய நித்ராம்குர்வந்திநிர்பயாஃ) என்கிறபடியே நிர்பரராக ஸுகமே இருங்கோளென்று அருளிச்செய்தருளினர்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

எறும்பியப்பா திருவடிகளே ஶரணம்.

பெரியபாரேற்றுநாயனர் திருவடிகளே ஶரணம்.

---

விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம்

ஸம்பூர்ணம்.